# ஸ்ரீ காவேரி ரஹஸ்யம்



தலைக்காவேரி — காவேரி அம்மன் கோவில்


P. மகாதேவ அய்யர்

காரியதரிசி – அமரபாரதி பரீக்ஷாசமிதி

திருவான்மியூர் : : சென்னை–20



பதிப்புரிமை] 1962 [விலை ரூ. 4



# குருவந்தனம்

இக்கலியில் சன்மார்க்க நெறி தவறி நிற்கும் மக்களை அறிவுச் சுடர் கொண்டு அறவழியில் நிலைக்கச் செய்யும் அண்ணலாம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபர் ஸ்ரீ ஜகத்குரு சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி பகவத் பாதாளின் பாத கமலங்களில் இந்நூல் பக்தி காணிக்கையாக ஸமர்ப்பணம் செய்யப்படுகின்றது.

# गुरुवन्दन

1. सर्व लोकैकशरण मज्ञानतिमिरापहम् ।
सत्यज्ञानानन्दरूपं तंवन्दे गुरुमव्ययम् ॥

2. यन्ताऽज्ञानमदेभस्य संसारवनचारिणः ।
योऽयंदुर्वृत्तदुष्टस्य तंवन्दे गुरुमव्ययम् ॥

3. कुत्सितांश्चैवमज्ञांश्च लोकान्दृष्ट्वासदामनः ।
द्रवते यस्यदयया तंवन्दे गुरुमव्ययम् ॥

4. अस्ति नास्तीतिवादोऽयं अस्त्यामस्तीति प्रब्रुवन् ।
प्रबोधयति लोकान् यः तंवन्दे गुरुमव्ययम् ॥

5. मायामालिंग्यनिद्राणान् मायातोमोक्तुमिच्छया ।
प्रबोधयति लोकान् यः तंवन्दे गुरुमव्ययम् ॥

6. पादाब्जयुगळंयस्य गुरोः-कारुण्यवारिधेः ।
अमन्दानन्दसंन्धायि तं वन्दे गुरुमव्ययम् ॥

7. अज्ञानी च भवेद् ज्ञानी मूकोवाग्मी विशारदः ।
यस्यानुग्रहलेशेन तंवन्दे गुरुमव्ययम् ॥

8. सागरंसूक्तिमुक्तानां सच्चिदानन्दविग्रहम् ।
आश्रिताज्ञान हर्तारं तंवन्दे गुरुमव्ययम् ॥

9. आद्यं नमस्कार्यवरं ज्ञानिनां ज्ञानवत्तमम् ।
प्रसाद सुलभं देवं तं वन्दे गुरुमव्ययम् ॥

गुरुवन्दनरूपाणि नवरत्नानि यो नरः ।
धत्ते स्मरति वानित्यं सश्रियं सुखमश्नुते ॥

श्रीकामकोटि पीठाधिनेतॄणां पादसन्निधौ ।
प्रणामपूर्वं कावेरीरहस्यमिदमर्प्यते ॥

गुरुचरणदासाः

# ஸ்ரீ காவேரி தியான சுலோகம்

अच्छस्वच्छलसद्दुकूलवसनां पद्मासनाध्यासिनीं
हस्तन्यस्तवराभयाब्जकलशां राकेन्दुकोटिप्रभाम् ।
भास्वद्भूषणगन्धमाल्यरुचिरां चारुप्रसन्नाननां
श्रीगङ्गादिसमस्ततीर्थनिलयां ध्यायामिकावेरिकाम् ॥

தூய வெண்பட்டை ஆடையாகக் கொண்டவளும், பத்மாஸனத்தின்மேல் அமர்ந்தவளும், கைகளில் முறையே அபய முத்ரிகை, வரத முத்ரிகை, தாமரை மலர், கலசம் இவைகளைக் கொண்டவளும், கோடி சந்திரப் பிரகாசத்துடன் விளங்குபவளும், அழகு பொருந்திய முகப் பொலிவுடன் கூடியவளும், ஸ்ரீ கங்கை முதலான ஸமஸ்த புண்ய தீர்த்தங்களுக்கு இருப்பிடமாக விளங்குபவளுமான ஸ்ரீ காவேரி யென்னும் தெய்வப் பொன்னியை நான் தியானிக்கின்றேன்.

आदावादिविधातृमानसुतापश्चात्कवेरात्मजा
भूयः कुंभभवस्यदयिता तस्मान्नदीरूपिणी ।
श्रीरङ्गातुकुंभघोण विलसन्मायूरमध्यार्जुन
श्वेतारण्यमुखस्थलेषुमहिता सह्याद्रिजादृश्यते ॥

ஆதியில் பிரும்மாவின் மானஸ புத்ரியாகவும், பின்னர் கவேர ராஜ ரிஷிக்குப் புத்ரியாகவும், அகஸ்திய முனிவரின் பத்னியாகவும் இருந்து அவர் மூலம் ஒரு புனித நதியாக ஆவிர்பவித்து ஸ்ரீரங்கம், கும்பகோணம், மத்யார்ஜுனம், மாயூரம், சுவேதாரண்ய க்ஷேத்ரங்களைப் பவித்ரமாய்ச் செய்துகொண்டு பெருமையோடு ஸஹ்ய மலையில் ஜனித்த ஸ்ரீ காவேரி விளங்குகிறாள்.

முத்ரிகை

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்
# ஸ்ரீ மடம் — காஞ்சீபுரம்.



புண்யநதியான காவேரியின் மேன்மையை நன்கு அறிய விரும்புபவர்களுக்கு உபகாரமாக அநேக பக்தர்கள் முன்வந்து நர்மதையின் ரஹஸ்யமென்று ஹிந்தியிலுள்ள நூலைப் பின் பற்றி காவேரியின் மஹிமையையும், உற்பத்தி ஸ்தலத்திலிருந்து ஸமுத்ர ஸங்கமம் வரையில் ப்ரதக்ஷிண க்ரமமாக இதன் தீரங்களிலுள்ள க்ஷேத்ரங்களின் பெருமையையும் விளக்கும் சிறந்த நூலைத் தொகுத்து அங்கங்கு தகுந்த படங்களுடனும் தீரங்களில் வஸித்த மஹான் களின் வரலாறுகளுடனும் வெளியிடுவது குறித்து ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தில் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

ஆக்ஞைப்படி,

**எஸ். ஸாம்பமூர்த்தி சாஸ்திரி.**

ஸ்ரீ மடம் மானேஜர்.

யாத்ராஸ்தானம், இளையாத்தகுடி,

ப்லவ பௌஷ்ய பஹுள சதுர்த்தி.

# நூலின் வரலாறும், வேண்டுகோளும்.

ஆக்னேய புராணம் துலாகாவேரி மகாத்மிய பிரகரணத்தில் கீழ்க்கண்ட விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. பிர்ம்மா, புண்ய நதிகளில் காவேரி, நர்மதா நதிகளை இக்கலியில் மானிடர்கள் சுலபமாய் ஞானத்தையும், முக்தியையும் பெறுவதற்கென்றே சிருஷ்டித்துள்ளார் என்றும், காவேரியில் துலா மாஸத்திலும் நர்மதையில் வைசாக மாஸத்திலும் ஸ்நானம் செய்தல் ஸமஸ்த பாபங்களுக்கும் பிராயச்சித்தமாகுமென்றும் சொல்லப்படுகிறது. பாரதத்தின் மத்ய பாகத்தில் கலிங்க தேசத்தின் கண் (ஒரிஸா தேசம்) அமரகண்டக் என்னும் மலைப்பிரதேசத்தில் ஸ்ரீ நர்மதா ருத்ரமூர்த்தியின் தேஜோ அம்சமாய் ஆவிர்பவித்து மேற்கு முகமாய் ஓடி ஸமுத்ர ஸங்கமமாகிறாள். ஸ்ரீ நர்மதாவின் மகாத்மியத்தை பிரதேச ஜனங்கள் அறியும் வண்ணம் 1946-ம் வருஷம் ஹிந்தி பாஷையில் "நர்மதா ரஹஸ்யம்" என்ற ஒரு பாவனமான நூல் வெளி வந்துள்ளது. ஸ்ரீ காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி பகவத் பாதாள் அந்த நூலுக்கு ஆசி கூறியிருக்கிறார்.

தென்னாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலைப் பிரதேசத்தில் ஸஹ்ய பர்வதத்தில் மும்மூர்த்திகளின் தேஜோ அம்சங்களோடு உத்பவித்த ஸ்ரீ காவேரி கிழக்கு முகமாய் ஓடி, சோழ மண்டலக் கரையில் காவிரிப்பூம்பட்டினத்திற்கருகில் ஸமுத்ர ஸங்கமமாகிறாள். பாரத மக்கள் தெய்வப் பொன்னியாம் காவேரியின் மகத்துவத்தை அறியும்படி, 'நர்மதா

ரஹஸ்ய' நூலைப் பின்பற்றி ஒரு நூல் பிரதேச பாஷையில் எளிய முறையில் எழுதப்பட வேண்டுமென ஸ்ரீமத் பரமாசார்யாள் எண்ணம் கொண்டார்கள்.

இது விஷயமாய் ஸ்ரீ மடத்தின் தொடர்ச்சியான முயற்சி நடைபெற்றது. பல பக்தர்கள் மூலம் அரிய விஷயங்கள் சேகரிக்கப்பட்டன. சுமார் ஐந்து வருடங்களுக்குமுன், அச்சமயம் கல்வி இலாகாவில் துணை அதிகாரியாயிருந்து, ஓய்வு பெற்றிருந்த ஸ்ரீ E. V. கோபாலய்யர் B. A. L T. அவர்களிடம் சேகரிக்கப்பட்ட தஸ்தவேஜுகள் ஒப்படைக்கப் பட்டன. அவரும் ஸ்ரீமத் ஆசார்யாளின் ஆக்ஞையை சிரமேற்கொண்டு பல பண்டிதர்கள், நண்பர்கள் உதவியை நாடி, இடையிடையே ஸ்ரீமத் ஆசார்யாளின் அருளையும், கருத்துக்களையும் பெற்று விஷயங்களைத் தொகுத்து "காவேரி ரஹஸ்யம்" என்ற நூலை உருவாக்கினர். 1961-ம் ௵ ஜனவரி மாதம் (சார்வரி ௵ தை மீ) இந்நூல் ஸ்ரீமத் ஆசார்யாளின் அனுக்ரஹம் பெற்று ப்லவ ௵ சித்திரை மீ திருவிடைமருதூர், லா ஜர்னல் பிரஸ் பிராஞ்சில் அச்சிடக்கொடுக்கப்பட்டது. ஆரம்பத்தில் பல கஷ்டங்களை ஸ்ரீமத் ஆசார்யாளின் கிருபையால் தாண்டி, இந் நூலுக்கு உயிர் நிலைபோல் தோன்றிய சில பெரியார்களை மட்டும் கூறி, மற்றும் பல தடவை களில் அவ்வப்பொழுது அன்புடன் உதவிபுரிந்த பல பெரியார்களின் பெயர்களை கடைசிப்பக்க அட்ட வணையில் நன்றியறிதலோடு குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தப் புண்ணிய கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ள எல்லோருக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

ஸ்ரீ மடத்தில் துறவியாய் ஸேவை செய்துவரும் ஸ்ரீமத் அனந்தானந்த ஸரஸ்வதி, ஸ்ரீகைங்கரியம் செய்துவரும் சந்தண சுப்ரமணிய அய்யர், பண்டித ரத்னமாய் விளங்கும் ஸ்ரீ N. ராமகிருஷ்ண சாஸ்திரிகள், ஸ்ரீ காஞ்சிகாமகோடி மடத்தின் சார்பில் பணி செய்துவரும் பல முத்ராதிகாரிகள், பண்டிதர்கள், பக்தர்கள், ரயில்வே இலாகாவில் பொதுஜன ஸேவை செய்துகொண்டும், ஓழிவான காலத்தில் தர்ம கைங் கர்யங்களில் உற்சாகத்துடன் ஈடுபட்டும், சமூகங் களில் அன்புடன் "கோவிந்தா" என்று அழைக்கப் படுபவருமான ஸ்ரீமான் K. K. குஞ்சிதபாதம் அய்யர், அவருக்கு இப்புனித கைங்கரியத்தில் ஊக்கத்தை தளரவிடாமல் உதவிபுரிந்து வந்த அவருடைய தர்ம பத்தினி ஸ்ரீமதி ஜானகியம்மாள், கல்வி இலாகாவில் உத்யோகம் வகித்து ஓய்வு பெற்றுள்ள ஸ்ரீ ஈ. வி. கோபாலய்யர், சென்னை ராஜ்யத்தில் ஸூபரிண்டெண்டிங் இஞ்சினீர் பதவியில் உள்ள ஸ்ரீ என். எஸ். அனந்தநாராயணய்யர், வித்வான் சிருங்கார சுப்ரமணியம் அவர்கள் திருச்சிராப்பள்ளி என்பவர்கள்.

2. இந்நூலின் உடலை உருவாக்கவும், கவர்ச்சி கரமாய் செய்யவும் கீழ்க்கண்ட பெரியார்கள் ஊக்கம் தளராது உதவிபுரிந்தார்கள். சென்னை லா ஜர்னல் பிரஸ் பிராஞ்சு திருவிடைமருதூர்; ஜனார்த்தன பிரஸ் கும்பகோணம்; ஸ்ரீ விசுவநாதய்யர், டி. ஜி. கோபால் பிள்ளை புஸ்தக பிரசுர நிலையத்தின் உரிமையாளர் திருச்சிராப்பள்ளி; ஸ்ரீ சிவராம கிருஷ்ணய்யர், வி. எஸ். வெங்கிடராமன் அண்டு கம்பெனி, நிர்வாகி கும்பகோணம்; ஸ்ரீ நீலகண்டய்யர், பி. ஜி. பால்

கம்பெனி அதிபர், சென்னை; ஸ்ரீ சடகோபன் ஜி. எஸ். ரேடியோ திருச்சி; ஸ்ரீ துரைஸாமி அய்யங்கார், ஆர்டிஸ்ட், திருவாரூர்; மேற்கண்ட பெரியார்கள் அச்சிடவும் கவர்ச்சிகரமான படங்களை தயார்செய்து கொடுக்கவும் உதவினார்கள்.

ஆதியில் ஸ்ரீ காவேரி பிரும்மாவின் மானஸிக புத்திரியாகத் தோன்றினாள் என புராணம் கூறுகிறது. "ஸ்ரீ காவேரி ரஹஸ்யம்" என்ற இந்நூல் ஸ்ரீமத் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி பகவத் பாதாளின் மானஸ புத்ரியாக வெளி வருகிறது. இந்நூல் பூஜார்ஹமானது. ப்லவஹு பௌஷ்யபகுள சதுர்த்தியில் ஸ்ரீமத் ஆசார்யாளின் ஸ்ரீமுகமும் பெற்றுள்ளது. இப்புஸ்தகத்தை ஒவ்வொரு குடும்பமும் பெற்று, பக்தி சிரத்தையுடன் படித்து உயர் நலன்களைப்பெற வேண்டுமென்பது ஸ்ரீமத் ஆசார்யாளின் அபிலாஷையாகும். இம்முதற் பதிப்பதில் காணப்படும் குறைகள் தெரிவிக்கப் பட்டால், மறு பதிப்பில் நீக்கப்படும். பக்தர்கள் அனைவரும் ஒரு மனப்பட்டு இந்நூலை ஸ்ரீமத் ஆசார்யாளின் ஸந்நிதானத்தில் பக்தி காணிக்கையாக ஸமர்ப்பிக்கின்றார்கள். ஸ்ரீ திரிபுரஸுந்தரி ஸமேத சந்திர மௌளீஸ்வர பிரஸாதத்தினால் உலக மக்கள் யாவரும், ஈசுவரபக்தி, நோயற்ற வாழ்வு, குறைவற்ற செல்வம் பெற்று வாழ்வார்களாக.

(Sd.) P. மஹாதேவய்யர்,
காரியதரிசி,
அமரபாரதீபரீக்ஷாஸமிதி,
திருவான்மியூர் (P. O.)
மதராஸ் — 20.

ஜனவரி, 1962.

# பொருளடக்கம்

# ஸ்ரீ காவேரி ரஹஸ்யம்



வேதத்தில் மறைந்துள்ள
காவேரி மஹிமையைக்கூறும் இந்நூலை
**பதிப்பித்தவர்**
**ஸ்ரீமான் மகாதேவய்யர்**
திருவான்மியூர், மதராஸ்.

श्री गुरुभ्यो नमः

# முகவுரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசார்யாளின் குரு பரம்பரையில் 68-வதாகத் தோன்றிய ஸ்ரீமத் சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் தமது 13-வது வயதில் பட்டம் பெற்றது முதல் சுமார் 50 வருடங்களாக உலகக்ஷேமார்த்தம் தங்கள் பூஜாமகிமையாலும், தர்மபிரசாரத்தினுலும், அற நெறிஸ்தாபனங்களாலும் அறிவுச்சுடர் கொண்டு இக் கலியில் சன்மார்க்க வழிதவறி நிற்கும் பாமரஜனங்களை அறவழியில் நிலைக்கச் செய்து தர்மசேவை செய்து வருவது யாவரும் அறிந்த விஷயமே.

இக்காலத்தில் கண்டதே காட்சி; மற்றவை யெல்லாம் மானிடர்களை மாயாஜாலத்திற்கு ஆளாக்கும் சூழ்ச்சியென்று ஒரு புறம் அதர்ம பிரசாரம் நடைபெற்று வருகிறது. மற்ருெரு புறம் இச்சமயம் வேததர்ம சாஸ்திரங்களின் பெருமைகளையும் அவற்ருல் சீரும் சிறப்பும் பெற்ற பெரியோர்களின் செயல்களையும் பாமர ஜனங்களுக்குத் தெளிவுறப் பிரசாரம் செய்தால் அவர்களில் சிலராவது நித்யானந்தத்தை அடையக்கூடும் என்று ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் பல அரிய பெரிய பிரயத்தனங்கள் செய்து வருகிருர்கள். விஞ்ஞான ரீதியாகவும், அதற்கு ஆதாரமான சாஸ்திர ரீதியாகவும் நாம் அறிந்துகொள்ளக்கூடிய அபூர்வமான விஷயங்களைப் பல்லாண்டு, பல்லாண்டுகளுக்கு முன்பே நம் மகான்கள் தொகுத்து வைத்துள்ளார்கள். பாரதபூமி சகலவித புருஷார்த்தங்களையும் வளர்த்துக்கொடுக்கும் நாற்றங்காலாக விளங்குகிறது.

ஜனங்கள் தங்களுக்கு ஏற்ற கர்மாக்களைக் குறைவின்றி ஒழுங்காகச் செய்வதன் மூலம் பகவத்ப்ரீதி ஏற்பட்டு பகவதனுக்ரகத்தால் சகல புருஷார்த்தங்களையும் எளிதில் அடையலாம். स्ववर्णाश्रमधर्मेण तपसा हरितोषणात् । साधनानिभवेत्पुंसां वैराग्यादिचतुष्टयम् ॥ நன்றாய் ஆராயுங்கால் உலகமே ஒரு நாடக மேடையாக விளங்குகின்றது. ஜனங்கள் இயற்கைக்கு ஏற்ற வாறு பலபிரிவுக்களாய்ப் பிரிந்து கர்மாக்கள் செய்து ஜீவித்து வருகிறார்கள்.

ஜனங்கள் "धर्मो रक्षति रक्षितः" என்ற வாக்கியப்படி தர்மத்தை அடிப்படையாகக்கொண்டு வாழவேண்டும்; சௌக்கியமாக வாழவேண்டும்' என்றுதால் சாஸ்திரங்களும் வற்புறுத்துகின்றன. தர்மம் யாவருக்கும் பொதுவானது. அது தீமையைத் தடுக்கிறது. நியாயத்தை நிலை நாட்ட வழி காட்டுவதுடன் ஜனங்கள் மன ஒற்றுமையால் ஒன்றுபட்டு தெய்வீக சிந்தனையுடன் வாழவேண்டும் என்றும் கூறுகிறது. ஆண்டவன் தர்மஸ்வரூபியாய் விளங்குகின்றான். காலசக்கரத்தின் சுழலில் வெளிப்படையான சில ஆசாரங்கள் மாறக்கூடும். ஆனால் தர்மம் என்றும் அழியாது நிலைத்திருக்கும் என்ற இப்பேருண்மைகளைப் பாரத மக்கள் வெகு காலத்திற்கு முன்னமேயே அறிந்துள்ளார்கள். இச்சமயத்தில் வேததர்மசாஸ்திரங்களின் கருத்துக்களையும், புராணங்களில் புதைந்து கிடக்கும் வாழ்க்கைத் தத்துவங்களையும் யாவரும் எளிதில் அறிந்து கொள்ளும் வண்ணம் பிரசாரம் செய்யவேண்டும் என்பதே நமது ஆசார்யாளின் ஆக்ஞையாகும்.

இப்பூவுலகில் எல்லாம் வல்ல இறைவனின் அபூர்வசக்திகளாயும், அழகு நிறைந்த சிருஷ்டிகளாயும் அமைந்துள்ளவைகளில் நதிகளும் மலைகளும் புனித அம்சங்கள் சேர்ந்தவையாகும். எப்படி நாம் ஒருவரை சந்தோஷப்படுத்த அவருடைய அவயவங்களை அலங்கரித்து பூஜிக்கிறோமோ, அப்படியே ஈசனின் சிருஷ்டியில் உன்னத அமைப்பாக அமைந்த நதி,

மலே, சூர்ய, சந்திரர்களை சர்வேசுவரரின் அற்புத சிருஷ்டி களாக பூஜித்து ஆண்டவனை சந்தோஷப்படுத்தவேண்டும்.

அவ்வித மனப்பான்மை நம்மிடையே குடிகொண்டு இருக்கவேண்டும். நதிகள் மூலம் நாம் அளவற்ற நன்மைகளை அடைகிறோம்.

நமது பாரதபூமியில் சிந்து, கங்கை, யமுனை, சரஸ்வதி, நர்மதா, கோதாவரி, கிருஷ்ணு, காவேரி முதலான நதிகளே நமக்குத் தேவையான சகல வஸ்துக்களுக்கும், செல்வங் களுக்கும், விஞ்ஞான வஸ்துக்களுக்கும் ஆதாரமாகியுள்ளன என்பது மிகையாகாது. இந்த நதிகளை சாஸ்திரங்கள் புண்ணிய நதிகளாகப் போற்றுகின்றன. வட இந்தியாவில் கங்கையும், யமுனையும், நர்மதையும், தென் இந்தியாவில் காவேரியும் மிகப் புனிதமானவை. பல புராணங்களும், வடமொழி, தென்மொழி இலக்கியங்களும் இவற்றைச் சிறப்பித்துக் கூறுகின்றன. இப்புண்ணிய நதிகளின் சிறப்பியல்புகளைத் தீர்க்க தரிசனத்தால் கண்டறிந்த பெரியோர்கள் இம்மகத்து வங்களைக் கர்ண பரம்பரையாக நம் நாட்டுக் குழந்தை களுக்குப் போதித்து வந்திருக்கின்றார்கள்.

காவேரி நதியின் மகிமையைக் கூறும் வேத, இதிஹாஸ புராணங்கள், இலக்கியப் பாடல்கள் இவைகளை ஆராய்ந்து பாரத மக்கள் சுலபமாக அறியும் வண்ணம் கருத்துக்களை வெளிப்படுத்த வேண்டும் என்று ஸ்ரீ காமகோடி பீடாதி பதிகள் செய்த கட்டளையைச் சிரமேல் தாங்கி, கிடைத் துள்ள ஆதாரங்களை உபயோகப்படுத்தி, காவேரி ஸ்நான பலன், அதன் தீரத்தில் அமைந்துள்ள க்ஷேத்திரங்களின் தரிசன விசேஷம், வழி வழியாக இங்கு குடியேறி நல்வழி வகுத்து நாம் நலமுற வேண்டியதற்காக தர்மோபதேசம் செய்து அதன் தீரத்தில் வசித்த புனித தபஸ்விகளின் வரலாறுகள் ஆகியவற்றை, அனேக புஸ்தகங்களை ஆராய்ந்து —நர்மதா நதியின் மகிமை, அதன் இரு கரைகளிலுமுள்ள க்ஷேத்ரங்கள்; அவைகளின் மகிமை, அதன் தீரத்தில் வசித்த மகான்கள் இவ் விஷயங்களுடன் நர்மதா ரகஸ்யம் என்னும்

ஒரு நூல் ஹிந்தி பாஷையில் வெளியிடப்பட்டிருப்பது போல்—இவைகளை சேகரித்து இப்புத்தகம் வெளியிடப் பட்டிருக்கிறது. இந்நூலைப் பக்தியுடன் படிக்கும் ஆஸ்திக மக்கள் யாவரும் இதில் கூறப்பட்டுள்ள விஷயங் களைப் பரிபூரணமாக நம்பி, காவேரியின் தெய்வத் தன்மை யைக் கருத்தில் இருத்தி இதில் கூறிய முறைப்படி காவேரி 'தீர்த்தாடனமும்' செய்து அதன் அருகில் உள்ள ஆலய மூர்த்திகளையும் தரிசித்து இகபர க்ஷேமங்களைப் பெற வேண்டும் என்று அநுக்கிரகம் செய்ய எல்லாம் வல்ல ஸர்வேசுவரனைப் பிரார்த்திப்போமாக.

இப்படிக்கு,

**ஸ்ரீமத் ஜகத்குரு காமகோடி பீடாதிபதிகளின்**

**பக்தர்கள்.**

# நன்றியுரை

காவேரி ரஹஸ்யம் என்னும் இந்நூல் உருவாக ஆலோசனைகள் கூறி, குறிப்புக்கள் தந்து உதவி புரிந்த சென்னைப் பல்கலைக்கழகம் சம்ஸ்கிருதப் பேராசிரியர் **Dr. V.** ராகவன் அவர்களுக்கும், சென்னை ஓரியண்டல் நூல் நிலைய அதிகாரிகள், தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலைய அதிகாரிகள், ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தைச் சார்ந்த முத்ராதிகாரிகள், பக்தர்கள் பலர் ஆகியோர்களுக்கும் எனது உள மகிழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

மேலும், இந்நூல் அச்சிடப்பெற்று வெளிவர அன்பளிப்பாகப் பொருள் உதவிய பக்தர்களுக்கும், இந்நூல் வேண்டுவோர் தனித்தனியாகவும், கூட்டாகவும் முன் பணம் தந்து உதவிய பல அன்பர்களுக்கும், இந்நூலில் இணைத்துள்ள ஸ்ரீ நடராஜமூர்த்தியின் திருநடனக்கோலம் படத்தை அச்சிட்டு உதவிய சிதம்பரம், ஸ்ரீ **N. S.** சிதம்பரேச தீக்ஷிதர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இங்ஙனம்,
**தொகுப்பாசிரியன்.**

# காவேரி நதிப் பிரதேசம்



# தெய்வக்காவேரி

श्री गुरुभ्यो नमः

ஶ்ரீ:

## அத்தியாயம் 1

தீர்த்தமே ஸகல தேவதாஸ்வரூபம் என்று வேதம் கோஷிக்கிறது. தாயைப்போல் பேணி, தந்தையைப்போல் வளர்த்து, குருவைப்போல் தூய்மைப்படுத்தி आधि व्यधि என்ற உள்நோய், வெளி நோய்களை உயர்ந்த வைத்தியரின் மருந்துபோல் தீர்த்து, உள்ளொளி பெருக்கி, ஈசனாய், அருளாய், அன்பாய் திகழ்வது தீர்த்தமே. உபநிஷத்தில், உலக உற்பத்தியைப்பற்றி கூறுங் காலத்திலும் சிருஷ்டியில் முக்கிய இடம் பெற்று விளங்குவது ஜலம்தான். சிறிய அளவுகளில் வியாபிக்கும் குளம் கிணறு முதலியவற்றிலுள்ள ஜலத்திற்குக்கூட மகிமை இருக்கின்றது. இந்த ஜலத்தின் ஆதாரமாக அமைந்து, எங்கும் வியாபித்துச் செல்லும் அகண்ட நதிகளின் பிரபாவத்தை என்னென்று கூறுவது? நதிகள் யாவற்றிலும் விசேஷமாகப் போற்றப்படுவது கங்கை. ஐந்து நதிகள், கங்கை என்று பெயரடைந்து பஞ்ச கங்கைகள் என்று போற்றப்படுவதாக 'வைத்யநாத தீக்ஷித ஸ்மிருதி முக்தாபல'த்தில் கூறப்பட்டுள்ளது.

அவைகளாவன :—

कावेरी तुङ्गभद्रा च कृष्णवेणी च गौतमी ।

भागीरथी च विख्याताः पञ्चगङ्गाः प्रकीर्तिताः ॥

மேற்கூறிய சுலோகத்தில் முதன் முதலில் காணப்படுவது 'பொன்னி' என்ற காவேரியே.

2. ஈசனின் அருள்பெற்று, வாழையடிவாழையாக வந்த அடியார்களின் திருக்கூட்டத்தில் சிறந்து விளங்கும் அருணகிரி நாதர், திருச்சிக்கு அருகேயுள்ள குமாரவயலூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானைப் பாடும் பொழுது "நாதபிந்துகலாதி நமோ" என்னும் திருப்புகழில் "ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை சோழமண்டலமீதே மனோகர ராஜகம்பீர நாடாளு நாயக வயலூரா" என்று புகழ்கிறார். காவேரி சோழமண்டலத்தின் செழுப்பிற்கும் தெய்வபக்திக்கும் காரண மானது என்பதையும், ஏழ்தலம் புகழ் நிறைந்தது என்பதையும் இங்கு குறிப்பிட்டிருக்கிறார்.

3. தொன்றுதொட்டு அழியாப் புகழுடன் மிளிருகின்ற காவேரியின் பெருமையை ரிக்வேதம் 1-179-1; 1-179-3, 1-179-4 ரிக்குகளில் அகஸ்திய-லோபாமுத்ரா ஸம்வாத ரூபமாய் விளக்குகிறது. அகஸ்திய முனிவர் லோபாமுத்ரையை நோக்கி கீழ்க்கண்டவாறு சொல்கின்றார்:—"ஏ தேவி! நீ எனது அவ்யாஜ மான கருணையால் எந்த ஜீவர்களுக்கும் அறிந்தோ, அறியாமலோ ஏற்பட்ட பூர்வஜன்மாந்தரீய தோஷங்களை எளிதில் நிவர்த்தி செய்வாயாக. மேலும் தாய் பசியினால் வருந்தும் குழந்தைக்கு பால் கொடுத்து, அக்குழந்தையின் சிரமத்தைப் போக்கி உற்சாகப்படுத்துவதுபோல், நீ நதிரூபமாக தக்ஷிணபாரதபூமியில் விளங்குவாயாக."

லோபாமுத்ரை என்பவளே உலக க்ஷேமத்தின் பொருட்டு ஸஹ்யமலையில் கவேரர் என்ற ரிஷிக்கு புத்திரியாக பிரும்மாவினால் கொடுக்கப்பட்டாள் என்றும் பின்னர் காவேரி என்ற நதியாக பிரவஹித்தாள் என்றும் ரிக்வேத ரிக்குகளின் மூலம் புலப்படு கின்றன.

மேலும் ஸ்காந்த, ஆக்னேய, பிரும்மகைவர்த்த புராணங் களிலும், இதிஹாஸங்களிலும், காவேரியின் மகிமை வெகுவாக விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத் பாகவதம் பத்தாவது ஸ்கந் தத்தில் பலதேவரின் தீர்த்த யாத்ரா பிரகரணத்தில்,

कामकोटिपुरींकाञ्चीं कावेरीं च सरिद्वराम् ।
श्रीरङ्गाख्यं महापुण्यं यत्र सन्निहितोहरिः ॥

ஸ்ரீ காமகோடிஸ்தலமான காஞ்சியையும், காவேரி தீர்த்தத்தையும், ஸ்ரீரங்கநாதனின் தரிசனத்தையும் சொல்லிவிட்டு 11-வது ஸ்கந்தம் 5-ம் அத்யாயத்தில்,

कावेरीच महापुण्या प्रतीची च महानदी।
ये पिबन्ति जलं तासां मनुजाः मनुजेश्वर।
प्रायोभक्ताः भगवति वासुदेवे ऽमलाशयाः ॥ ४० ॥

அதாவது கலியில் காவேரியின் ஜலத்தை எவர்கள் குடிக்கின்றனரோ அவர்கள் சுத்தமான சித்தமுள்ளவர்களாகி ஸ்ரீ வாஸுதேவனிடத்தில் பக்தியுள்ளவர்களாய் விடுகிறார்கள் என புகழப்படுகிறது.

ஸ்ரீமத் பாகவதத்தை அனுசரித்து, கேரள தேசத்தில் மிகப் பிரசித்திபெற்ற நாராயண பட்டதிரி என்பவர், தனது "நாராயணீயம்" என்ற கிரந்தத்தில் 92-வது தசகம் 7-வது சுலோகத்தில் தக்ஷிணபாரதப் பிரதேசத்தையும், அங்குள்ள மிகப் புண்ய நதியான காவேரி நதி தீரத்தையும் புகழ்ந்து அங்குள்ள ஜனங்களின் பக்திப் பிரவாஹம் தன்னையும் ஆட்கொள்ள வேண்டுமென பிரார்த்தனை செய்கிறார்.

भक्तास्तावत्कलौ स्युर्द्रमिलभुवि ततोभूरिशस्तत्र चोच्चैः
कावेरीं ताम्रपर्णीमनु किल कृतमालां च पुण्यां प्रतीचीम्।
हा मामप्येतदन्तर्भवमपि च विभो किञ्चिदञ्चद्रसं त्व-
य्याशापाशैर्निबध्य भ्रमय न भगवन् पूरय त्वन्निषेवाम् ॥ ६ ॥

இதன் பொருள்:—

கலியுகத்தில் பக்தர்கள் அதிகம் இருப்பார்கள். அதிலும் அதிகமாக திராவிட தேசத்தில் இருப்பார்கள். மிகப் புண்யமான காவேரிக் கரையிலும் தாம்ரபரணி கரையிலும், வைகையாற்றுக்கரையிலும் மேற்கு திக்கை நோக்கி ஓடுகின்ற நதிகரையிலும் மிக அதிகமாக இருக்கிறார்கள்.

ஹே பிரபுவே! இந்தப் பிரதேசத்தில் பிறந்து, தங்களிடத்தில் சிறிதளவு பக்தியுடையவனுமான என்னை ஆசைகள் என்ற கயிறுகளினால் இறுகக் கட்டி சுழற்றக் கூடாது. ஹே கிருஷ்ணா! தங்களிடம் எனக்குள்ள பக்தியை பூர்த்தி செய்வீராக.

இராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 41-வது ஸர்க்கத்தில் சீதையைத் தேடும் படலத்தில் சுக்ரீவன் ஹனுமாரிடம் கீழ் கண்டவாறு கூறுகிறான்.

ततस्तामापगां दिव्यां
प्रसन्नसलिलां शिवाम् ।
तत्र द्रक्ष्यथ कावेरीं
विहृतामप्सरोगणैः ॥

அதாவது தெய்வப்பிறவியானவளும், மங்களகரமான புண்ய தீர்த்தத்தோடு கூடிய காவேரி அப்ஸரஸ்திரீகளின் கூட்டங்களினால் சூழப்பட்டு தெள்ளிய நீருடன் செல்கிறாள் என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

[4] பிரும்மபுராணத்தில்

मैत्रावरुणिभार्या सा लोपामुद्रेतिविश्रुता ।
सह्याद्रौ ब्रह्मणा दत्ता कवेराय महात्मने ॥

என்று ருக்வேத ரீதியில் கதையை கூறிவிட்டு காவேரி நதியின் அருகாமையில் அமைந்துள்ள பல க்ஷேத்ரங்களில் ஸ்நானமகிமையை குறிப்பிடுகிறது.

இதர புண்ய நதிகள், தங்களிடம் அநேக ஜனங்கள் மூழ்கி பாபங்களை கழித்து செல்வதாயும், அந்தப் பாபக்குவியல்களை நீக்கிக்கொள்ள, காவேரி நதியில் துலா மாதத்தில் கலந்து ஒன்றாகி நீராடுகின்றன என்றும் சொல்லப்படுகிறது.

மற்றும்,

कावेर्यां योनरो नित्यं कलौ स्नानं करिष्यति ।
मनोवाक्कायजं पापं सद्य एव विनश्यति ॥
यत्र यः स्नाति कावेर्यां दृष्ट्वा देवं प्रणम्यच ।
सर्वपापविनिर्मुक्तः स याति परमं पदम् ॥

எவன் காவேரியில் எந்த இடத்திலாவது மூழ்கி பரமேசுவரனை உள்ளத்தில்வைத்து பூஜித்து வழிபடுகிறானோ, அவனுடைய வினைகளெல்லாம் விலகி விடுகின்றன. அவனுக்கு உலகபந்தம் அற்றுப் போகிறது; அவன் ஈசனை காண்கிறான் என்று புராணங்கள் வழுத்துகின்றன.

அதே புராணம் எட்டாவது அத்யாயத்தில்

द्विधा त्रिधा चतुर्धेति पृथक् भूता कवेरजा ।
श्रीरङ्गं विष्णुनिलयं महत्क्षेत्रं महोदयम् ॥
मासि मासि विशेषेण स्नानं पर्वणिपर्वणि ।
वत्सराल्लभते मुक्तिं कुरुते यदि पापकृत् ॥
पक्षेऽसिते गुरौ प्राप्ते मखर्क्षे माघमासि च ।
तीर्थानि कुर्वते तत्र सान्निध्यं देवि सादरम् ॥
जप्येश्वरं महत्क्षेत्रं कावेर्या उत्तरे तटे ।
पञ्चनद्योमहापुण्याः पूज्याः पापहराः शुभाः ॥
तुलामासमहं वत्से तत्र तिष्ठाम्यहर्निशम् ।
कावेर्याः पुण्यसलिले मासमेकं निरन्तरम् ।
यःस्नाति पुण्यपुरुषः सम्प्रयाति शुभां गतिम् ॥

அதாவது காவேரி முதலில் இரு கிளையாகவும். பின்னர் மூன்று நான்கு கிளைகளாகவும் பிரிந்து உலகம் உய்ய பிரவஹிக்கிறாள். எவன் மாதா மாதம் பர்வ தினங்களிலாவது காவேரியில் ஸ்நானம் செய்கிறானோ அவன் ஸர்வபாபங்களினின்றும் விடுபட்டு முக்தி பெறலாமெனக் கூறுகின்றது.

[5] ஸ்ரீடுண்டி ராஜவியாஸர், தான் இயற்றிய காவேரி ஸ்தோத்திரத்தில் கீழ்கண்டவாறு சொல்கிறார்.

तीर्थान्तरे सद्यसुते वसन्तः कथंचिदेनः क्षपयन्तु संतः ।
वृषासना वागरुडासनावा वयंभवेमत्त्वयिसंवसन्तः ॥

कुशाग्र्यसाम्यं भजतेमनीषा ।
शरीरमप्युज्ज्वलकान्तिमेति ॥

அதாவது காவேரி தீர க்ஷேத்ரங்களில் சிவனாகவோ, விஷ்ணுவாகவோ ஈசன் கோவில் கொண்டிருப்பதை அதிகம் பாராட்டவேண்டாம். காவிரி தீர வாசம் செய்து கொண்டிருப்பதே போதுமானது.

கங்கை ஜலம் வியாதியை நீக்கும். ஆனால் காவேரி ஜலம் மனிதர்களுக்கு புத்தி, பக்தி, சாந்தி முதலியவைகளையும் அளிக்கவல்ல சக்தியுடையது என்பதாம்.
திரும்பவும் இம்மகான் சொல்வதாவது:—

भवस्य त्वंदेवि त्रिदशसरितोपि प्रियतरा
निगूहैनांऽयाजात् क्वचिदपि जटाजूटकुहरे।
यतश्चोलोद्देशेप्रतिपदमुपाश्लिष्यसततं
गिरीशः प्रेम्णानुव्रजति भवतीमेव सरसाम्॥

ஹே காவேரி! உன்னைத்தான் என்னய்யனான ஈசன் அதிகம் நேசிக்கிறார். அவர் ஏதோ காரணத்தைக்கொண்டு கங்கையை தன் ஜடாமுடியில் அடக்கிக்கொண்டு, நீ போகிற இடங்களிலெல்லாம் கோயில் கொண்டு நிற்கிறார்.

ஆதலால் நீயே எல்லா நதிகளைக் காட்டிலும் மிகவும் அவருக்கு பிரியமுள்ளவள் என்று கூறுகிறார்.

6. மஹேவரானந்தர் என்ற மகான் எழுதிய "மஹார்த்த மஞ்சரி பரிமள" கிரந்தத்தின் முடிவில் குறிப்பிடுவதை கவனியுங்கள்.

कावेर्याइवमाधुर्यं कल्हारस्येव सौरभम्।
नटेशस्येवतनृत्तंअस्यग्रन्थस्यगौरवम्॥

காவேரி தீர்த்தத்தின் மாதுர்யத்தை புகழ்ந்து சொல்கிறார். இது போன்று ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர், தன் "சிவலீலார்ணவம்" என்ற கிரந்தம் 21-வது ஸர்க்கத்தில் காவிரியின் காவிரியின் அழகையும் பெருமையையும் கீழ்கண்ட சுலோகங்களால் புகழ்கிறார்.

हव्याय यत्रापततां सुराणा-
मातिथ्यनिर्वर्तनतोऽनुवेलम्।
गन्धर्व विद्याधर किन्नराद्याः
निर्विघ्नमिन्दन्ति पथिस्थितिं स्वाम् ॥

अध्येतुमध्यापयितुं च तन्त्रा-
ण्याहर्तुमर्थानथ चोपभोक्तुम् ।
स्वर्गापवर्गौ च वशे विधातुं
जात्यैव यस्मिन् द्रमिडा निरूढाः ॥

அதாவது தேவர்கள், கின்னரர்கள், வித்யாதரர்கள் தங்கள் ஸ்தானங்களைக்கூட வெறுக்கின்றார்கள். காவிரிதீரம் அத்ய யனம் செய்வதற்கும், செய்விப்பதற்கும், ஜீவியத்திற்கு வேண்டிய திரவியங்களை சம்பாதிப்பதற்கும் அவைகளை அனுபவிப்பதற்கும், ஸ்வர்க்க சுகத்தை அடைவதிற்கும், மிகவும் உன்னதமான ஸ்தலம் ஆகும். ஆகையினால் காவிரி நதிக்கு நிகர் காவிரியே. காவிரிநதி பாயும் நாட்டில் பிறப் பது ஒன்றே போதுமானது என்று வர்ணிக்கிறார்.

இருபதாவது நூற்றாண்டின் துவக்கத்தில் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் பரம்பரையில் தோன்றியவரும் ராஜ மன்னார்குடி க்ஷேத்திரத்தில் திலகம்போல் விளங்கியவருமான தியாகராஜ மகியென்றும் பிரும்மஸ்ரீ மகாமகோபாத்யாய ராஜு சாஸ்திரிகள் என்றும் அழைக்கப்பட்ட மகான் தனது “ஸஹ்யஜாநவ ரத்னமாலிகா” என்ற கிரந்தத்தில் காவேரி சங்கமம் ஆகும் புண்ய ஸ்தலத்தை குறிப்பிட்டு அழகாக வர்ணிக்கிறார்.

कावेरि त्वद्वारि पुरोदरेऽस्मिन्
स्नायं स्नायं धूतपापोऽस्ततापः ।
आसं जीर्णः पूर्णकामस्तदित्थं
विज्ञाप्यस्ते वल्लभः सिन्धुराजः ॥

सह्याद्रेः पितुरन्तिकात् पतिगृहंगन्तुंप्रवृत्तासती
कावेरीकृतचोळमण्डल परिष्काराभ्युदञ्चद्रसा ।
स्वर्णस्तोमयुता सती प्रियतमं सन्तोष्यरत्नाकरं
श्वेतारण्यपतेः प्रसादमयतेद्वेधा स्थितापार्श्वयोः ॥

அதாவது "காவிரி நான் உன்னுடைய பூர்ணமான புண்ய தீரத்தில் ஸ்நானம் அடிக்கடி செய்து பாபங்களை விரட்டி யடித்து, பாபமில்லாதவனாய், வயது முதிர்ந்த நிலையில், எனது அபீஷ்டங்களைப் பெற்றவனாய் நிற்கிறேன் என்பதை நீங்கள் உமது பர்த்தாவாகிய ஸமுத்ரராஜனிடம் தெரிவிக்க வேண்டும்."

தாங்கள் ஸஹ்யகிரியாகிய பிறந்த வீட்டை விட்டு தங்கள் பர்த்தாவின் கிரகத்தை நோக்கி செல்லும்பொழுது சோழமண்டலம் சகல சௌபாக்யங்களையும் பெறும்படி செய்து மங்களகரமான ஸ்வர்ண காந்தியுடன் தங்களுடைய அதிகப் பிரியமுள்ள பர்த்தாவுடன் கூடி, சுவேதார்ணயரின் பிரஸாதத்தை அடைந்து நிற்கிறீர்கள் என்பதை நான் காண்கின்றேன் என்று முடிக்கிறார்.

7. இவ்வாறு வேதம், புராணம், இதிகாஸம், மகான்களின் அனுபவ சித்தமான ஸ்தோத்திரங்கள் முதலியவைகளால் போற்றப்பட்டவளும் தாய்போல், பராசக்தி போல், நமது நாட்டிற்கு வளம் மிக அளித்து மக்களுக்கு ஞான அமுதும் ஊட்டிவருபவளுமான தெய்வப் பொன்னி என்று அழைக்கப்பட்ட காவேரியை நாம் எக்காலமும் போற்றி வாழ்வோமாக.

சுபம்

## II

# பொன்னியைப் போற்றும் புராணப் பகுதிகள்.

முன் அத்யாயத்தில் காவேரி ஒரு தெய்வப்பிறவி எனப் படித்தோம். அவள் கவேர புத்ரியாக வளர்ந்தபடியால் "காவேரி" என்ற பெயருடன் விளங்குகிருள். ஆக்னேய புராணம் காவேரியின் ஜன்ம வரலாற்றையும், அவள் பிரும் மாவின் கட்டளைப்படி, தன் அம்சத்தின் ஒரு பகுதியை உலக க்ஷேமத்தின் பொருட்டு தெய்வ அம்சங்கள் பொருந் திய நதியாக பிரவஹிக்கிருள் என்பதையும், மற்ருெரு அம்சம் 'லோபாமுத்ரா' என்ற தேவ ஸ்ருபத்துடன் அகஸ் தியர் மனைவியாயிருந்து சேவை செய்து வருகிருள் என்பதை யும் விவரிக்கிறது.

ஸ்காந்த புராணத்திலும் காவேரியின், பிறப்பு தவம், விவாஹம், நதியாக பிரவஹித்தல், அவள் செல்லும் தீரங் களில் ஈசுவர ஸான்னித்யம், காவேரி ஸ்நான பலன் இவைகள் விரிவாக தெரிவிக்கப்படுகின்றன. அகஸ்தியர் காவேரியை மணந்து கொண்டபிறகு அவளை தீர்த்த ஸ்வ ரூபமாய், புண்ய தீர்த்தங்களுடைய தன் கமண்டலுவில் ஆவாஹனம் செய்துவிட்டு வெளியில் போயிருந்த சமயத் தில், தேவர்களின் அனுக்ரகம் பொருட்டும், உலக க்ஷேமத் தின் பொருட்டும் காவேரி நதியாக பிரஹிக்க வேண்டு மென்ற காலம் நெருங்கியது. விக்னேசுவரர் ககா ரூபம் எடுத்து தனிமையில் நெல்லிமரத்தடியில் வைக்கப்பட்ட அகஸ்தியரின் கமண்டலுவை கவிழ்த்தது. பிரும்மாவின் கட்டளைப்படி காவேரி நதி ரூபமாய் நெல்லிமரத்தினடி யிலிருந்து பிரவஹித்தாள். காக—விரி தீரத்தம் 'காவிரி' என்று மருவிய பெயருடன் விளங்குகிருள்.

பிரும்ம புனகவர்த்த புராணம் காவிரியின் மேன்மையான மகிமைகளை உபாக்யானங்களின் மூலமாய் அறிவித்து விட்டு கீழ்கண்டவாறு கூறி முடிக்கிறது.

काकारेकलुषंहन्ति वेकारो वांछितप्रदः।
रीकारो मोक्षदोनृणां कावेरीत्यवधारय॥

'கா' என்ற அக்ஷரம் பாபங்களைப் போக்கும். 'வே' என்ற அக்ஷரம் விரும்பியதை அளிக்கும். 'ரீ' என்ற அக்ஷரம் மோக்ஷம் கொடுக்கும்.



श्री गुरुभ्यो नमः

## ஸ்ரீ ஸ்காந்த புராணத்தில் சொல்லப்பட்ட துலாக் காவேரி மகாத்மியச் சுருக்கம் (1 to 27)

**அத்தியாயம் 1.** சூத புராணிகர், சௌனகாதி மகரிஷிகளுக்கு, புண்ணிய நதிகளுக்குள் காவேரி தான் உத்தமமானது என்று சொல்ல சௌனகாதி மகரிஷிகள் "யாவராலும் புகழப்பட்ட கங்கையை விட காவேரி எப்படி மேன்மையானது ?" என்று கேட்டனர்.

**அத்தியாயம் 2.** அவ்விஷயத்தை சூத புராணிகர் விவரிக்கிறார் :– காவேரி தென் திசையில் ஸஹ்ய பர்வதத்தில் 'பிரும்மகிரி' என்ற சிகரத்தின் சமீபத்தில் உதிக்கிறாள். அதற்குச் சமீபத்தில் **கனகா** என்ற நதி சங்கமமாகிறாள். அங்கு ஸ்கந்தவனம் உள்ளது. அகஸ்திய பகவான் தபஸ் செய்து சுப்பிரமணியக் கடவுளின் வரப் பிரஸாதம் பெற்றார்.

**அத்தியாயம் 3** பூர்வம் ஸ்கந்தவனமாயிருந்தவிடம் தான் பகண்ட க்ஷேத்திரம் என்ற வரலாறு.

**அத்தியாயம் 4.** ஸஹ்ய பர்வதத்தில் கவேரர் என்ற ரிஷியின் தபஸினால் பிரும்மா பிரத்யக்ஷமாகி, **லோபா முத்ரை** என்ற தன் மானஸ புத்திரியை அவருக்குப் பெண்ணாகக் கொடுத்தார். நாளடைவில் அகஸ்தியர் அப்பெண்ணை மனைவியாகப் பெற்றார். அகஸ்தியர் ஒரு நாள் தன் மனைவியை புண்ணிய தீர்த்தமாக்கி, தனது கமண்டலத்தில் வைத்துவிட்டு, 'கனகை'யில் ஸ்நானத்திற்குச் சென்றார். காவேரி என்ற கவேர புத்திரியும், அகஸ்தியர் மனைவியுமான லோபா முத்திரையும் அச்சமயம் நதியாகப் பிரவகித்தாள். அகஸ்தியர் விவரத்தை அறிந்து காவேரிக்கு வழிகாட்டி, சுத்தக்கலசத்தில் லிங்க ப்ரதிஷ்டை செய்தார்.

**அத்தியாயம் 5.** லோபாமுத்திரையின் உற்பத்தி, அகஸ்தியர் விவாஹம், கனகா, சுஜோதி சங்கமம், அநேக புண்ணிய க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் இவைகளைப்பற்றி

*ஸ்ரீ கிருஷ்ண பகவான் ருக்மணிக்கு சொன்னதை இந்த அத்தியாயம் விவரிக்கிறது*

प्रथमं कुण्डिकातीर्थं कनका सङ्गमं ततः ।
वलंपुरी तथापश्चात् कपिलासङ्गमं ततः ॥
चन्द्रपुष्करणीतीर्थं कुम्भकोणं शिवालयं ।
मध्यार्जुनं तथापुण्यं अंभोधेस्सङ्गमं तथा ॥

**அத்தியாயம் 6.** *காவேரி – கங்கா ஸம்வாதம்.*

**அத்தியாயம் 7.** *கங்கை காவேரி இருவரும் ஸத்ய லோகத்தை அடைந்தனர். லோபாமுத்ரை உற்பத்தியை உரைக்கிறாள்.*

**அத்தியாயம் 8, 9.** *கங்கை, காவேரி மகிமைகளைப் பிரும்மா வர்ணிக்கிறார்.*

लोपोसंविदितिप्रोक्तो मुद्राबिम्बप्रकीर्तितम् ।
बिम्बोहि प्रतिबिम्बस्य भवेत्हेतुरसंशयम् ॥
संवित्तुबिम्बरूपायाः प्रतिबिम्बं इदंजगत् ।
मुद्रासृष्टिः ततस्तेन कथितंवेदवादिभिः ॥

1 कावेर्याः कनकायाश्च सङ्गमं लोकविश्रुतम् ।
यःस्नात्यनुदिनं भक्त्या रुद्रलोकंसगच्छति ॥
2 वेणायाः सङ्गमं पुण्यं नृणामघहरंपरम् ।
गोमुखी तीर्थममलं कावेर्याम्भसितिष्ठति ॥
3 गजाह्वयं परंतीर्थंशिवज्ञानप्रदं नृणां ।
कपिला सङ्गमंपुण्यं मुक्तिकूटं कुजं धनम् ॥
4 चन्द्रपुष्करणीतीरे यो नरः स्नानमाचरेत् ।
विष्णुलोकमितो गत्वा मोदते कालमक्षयम् ॥
5 वेदारण्यं महत्क्षेत्रं कावेर्या उत्तरेतटे ।

यत्रसाक्षात् चतुर्दन्ती पूजयित्वा महेश्वरम् ॥
महादेवप्रसादेन गजेन्द्रत्वं स लब्धवान् ॥

6 जप्येश्वरं महत्क्षेत्रं कावेर्या उत्तरेतटे ।
पञ्चनद्यो महापुण्याः पूज्याः पापहराः शुभाः ॥

7 दुर्गेश्वरं महत्क्षेत्रं कावेर्याः दक्षिणे तटे ।
यत्रदुर्गाभगवती शिवमाराध्यभक्तितः ॥
यस्यप्रसादान्महिषं तं जघान रणे बलात्

8 ब्रह्मनाम शिवक्षेत्रं कावेर्याः दक्षिणे तटे ।
यस्यप्रसादात्ब्रह्मापि ब्रह्मत्वं प्राप्तवान्पुरा ॥

9 कावेर्याश्च समुद्रस्य संगमं तदनन्तरम् ।
स्नात्वा तु सङ्गमेदेवं पूजयित्वा वृषध्वजम् ॥
यथाशक्ति प्रदानेन शिवलोकं तु गच्छति ॥

10 तुलायां तु रवौ प्राप्ते विषुवे कुण्डिकोदके ।
त्रैलोक्यस्थानि तीर्थानि सान्निध्यंकुरुतेसदा ॥

**அத்தியாயம் 10, 11.** *சகர மகராஜனின் பூர்வ ஜன்மக் கதையைப் பிரும்மா கவேர மகரிஷிக்குச் சொல்லியிருந்தார். அதை இச்சமயம் கங்கை காவேரிக்குச் சொல்கிறான். சகரன் என்ற சக்கரவர்த்தி பூர்வ ஜன்மத்தில் சிம்மமாயிருந்து கன்னிகாதானம் செய்ததனால் மறு ஜன்மத்தில் பெரிய அரசனாக ஜன்மம் பெற்றான். அது எப்படி என்று அவர்கள் வினவ, பிரும்மாவிவரிக்கிறார். கஜதந்தபுரம் என்ற பட்டணத்தைச் சுதாமா என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனுக்கு மூல நக்ஷத்திரத்தில் ஒரு பெண் மகவு பிறந்தது. ஜோதிடர்கள் இப்பெண்ணினால் ராஜ்யத்திற்கு க்ஷேமக் குறைவு ஏற்படும் என்று தெரிவித்தனர். அரசன் குழந்தையை ஒரு தங்கப் பேழையில் போட்டு, சிம்மம் வசிக்கும் காட்டில் வைத்துவிடச் சொன்னான். சிம்மக் கூட்டத் தலைவன் பூர்வ ஜன்ம வாசனையால் பாஷைகளின் அறிவும் பேசுந்திறமையும் உள்ளவனாயிருந்தான். இவன் இந்தப்*

பேழையிலுள்ள குழந்தையை வளர்த்து ஒரு சமயம் சிம்ஹள தேசத்து அரசனான புஷ்யகேதுவைக் காட்டில் சந்தித்து ராஜ தர்மங்களை உபதேசித்து இப்பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டினான்.

அவ்வரசன் சிம்மத்தின் வரலாற்றை வினவ, சிம்மம் தான் சாஸ்திர வித்பன்னனான கந்தர்வனாயிருந்து, சிவ பூஜைகளைச் சரிவர செய்து வருகையில், காட்டில் ஸ்நானத் திற்கு வந்த ஒரு யுவதி தன்னை நிர்ப்பந்தமாய் ஆலிங்கனம் செய்து கொண்டதால், அந்த யுவதியின் கணவர், அவனை பிசாசாகவும், தன்னைச் சிம்மமாகவும் சபித்து விட்டார் என்றும், தனக்கு ஒரு கன்னிகாதான சம்பவம் ஏற்படு மென்றும் அவர் கூறியதாகச் சொன்னான்.

புஷ்ய கந்தனுக்குத் தன் வளர்ப்புப் பெண்ணை கன்னி காதானம் செய்து கொடுத்ததன் பலனால் முன் கந்தர்வனா யிருந்த சிம்மம் மறுஜன்மத்தில் சகரச் சக்கரவர்த்தியாக ஜன்மம் எடுத்தான் அவன் அறுபதாயிரம் பெண்களைப்பெற்று கன்னிகாதானப் பலன்களைப் பெறத் தவம் செய்தான். தேவர்கள் இவ்வரசனின் பேராசையைத் தடுக்க மகாகண பதியைப் பிரார்த்திக்க அவரும் அரசனின் நாவில் அமர்ந்து அவன் வரம்கேட்ட சமயத்தில் "புத்திரிகள் வேண்டும்" என்று கேட்பதற்கு பதிலாக "புத்திரர்கள் வேண்டும்" எனக் கேட்கச் செய்தார். அதனால் 60 ஆயிரம் புத்திரர்கள் உண் டானார்கள். இவ்விதம் பிரும்மா கவேரருக்குச் சொல்லி தன் மானஸ புத்திரியை கவேரருக்குக் கொடுத்து கன்னிகா தான பலனை அடையும்படி செய்தார்.

**அத்தியாயம் 12.** நான்முகன் கங்கைக்கு காவேரியின் வரலாற்றை விவரித்துக்கூற ஆரம்பித்தார். தபஸ் செய்து கொண்டிருந்த கவேரரிஷிக்கு விஷ்ணு மாயையின் அம்ச மான லோபாமுத்திரையைக் கொடுத்தார். விஷ்ணு மாயை யின் அம்சங்கள் லோபாமுத்ரா, லக்ஷ்மி, காவேரி, கபிலா இவைகளில் காவேரி, கபிலா, நதிகள் சொரூபங்களையும், மற்ற இருவரும் தேவதா சொரூபங்களையும் அடைவர். லோபாமுத்திரை அகஸ்திய முனிவரின் தர்ம பத்தினியா

வாள். அகஸ்தியர் சர்வ தீர்த்தங்களையும் ஒன்றுசேர்த்துக் கமண்டலுவில் ஆவாகனம் செய்வித்தார். காவேரி ரூப மான லோபாமுத்திரை சஹ்யகிரியில் ஒரு சமயம் கமண் டலுவிலிருந்து (நதியாக நெல்லி மரத்தினடியிலிருந்து) பிர வகித்தாள். பிரும்மகிரியாகிய ஸஹ்ய பர்வதத்திலிருந்து காவேரி சகல பாபங்களையும் போக்கக்கூடிய பிரவாகத் தோடு சமுத்ரம் வரையில் கிழ்திசையாக ஓடி சங்கமம் ஆகிறாள். அகஸ்தியர் காவேரியின் இரு கரையிலும் அநேக க்ஷேத்திரங்களை ஏற்படுத்தினார். உற்பத்தி ஸ்தானத்தில் பதி னைந்து புண்ணிய தீர்த்தங்கள் விளங்குகின்றன. இவை கள் பிரயாகையைக் காட்டிலும் மிகப் பவித்ரமானவை.

**அத்தியாயம் 13.** ஸ்ரீ மஹாவிஷ்ணு லோபாமுத்ரையைப் பார்த்து "நீ எனக்கு பிரியமானவள்" ரங்கசாயியாயுள்ள என்னை நீ நதிரூபமாய் அடையப்போகிறாய் எனக்கு துவா ரகை, பிருந்தாவனம், வைகுண்டம் இவைகளைவிட உன் னிடம் தான் அதிகப்பிரியம். என்னுடைய ரூபாந்தரமான கபில முனிவரால் பிரார்த்திக்கப்பட்டு, நீல பர்வதத்தில் கபிலா என்ற நதியாக பிரவகிக்கப் போகிறாய். என்று தெரி வித்தார். தேவரிஷிகளைப் பார்த்து "கங்கை என் பாதஸ் பரிசத்தினால் மட்டும் பவித்ரவதியானாள். காவேரி என் ஸர் வாங்க ஸ்பரிசத்தினால் கங்கையைக் காட்டிலும் உத்தமமான நதியாவாள் என்றும் தெரிவித்து கங்கையைப் பார்த்து "ஹே! கங்கே! நீ காவேரியிடம் பொறாமை கொள்ளாதே! என்றும் போதித்தார்.

**அத்தியாயம் 14.** லோபாமுத்ரை கவேரமஹரிஷிக்கு பெண்ணாக வந்தாள். பிரும்மாவிடம் லோபாமுத்ரை சொன் னதாவது: "தந்தையே! நான் தங்களைவிட்டுப்பிரிய மனமில் லாதவளாயிருக்கிறேன்!" இதைக்கேட்ட பிரும்மா, "குழந் தாய், நீ கலங்கவேண்டாம். உன்னிடம் நானும் முக்கண் ணனும், முளரிக்கண்ணனுமாகிய மூவரும் பார்வைக் கெட்டாமறையுருவமாக வருவோம்" என்று அறிவித்தார். இதையவர் பின்னால் கங்கைக்குத் தெரிவித்தனர். மேலும் பிரும்மா கங்கையைப் பார்த்து, "நீயும், மாதாபிதாக்களா கிய மாதவனும் லக்ஷ்மியும் காவேரியுடன் கூடிய ரங்க

க்ஷேத்திரத்தை அடைந்து ரங்கநாதரை தரிசிப்பாய். பரம சந்தோஷத்தை அடைவாய்'' என்றும் சொன்னார்.

**அத்தியாயம் 15.** கவேர மகரிஷி காவேரியைப் பெற்றுக் கொண்டு தனது ஆசிரமத்திற்கு வந்தார். அங்கு காவேரி தாய், தந்தையருக்கு சிசுருஷை செய்து கொண்டிருந்தாள். சில காலம் கழித்து பெற்றோர்களின் அனுமதியின் பேரில் பரமசிவனைக்குறித்துக் கடுமையான தவம் செய்தாள். லோபா முத்ரையாகிய காவேரியின் தபசைப் பற்றிக்கேட்ட அகஸ் திய மகாமுனிவர் கவேர ஆசிரமத்தையடைந்தார்.

*16–17* ... ... ...

**அத்தியாயம் 20.** கடும் தவம் புரியும் காவேரியின் தவத்தை அகஸ்தியர் கலைத்து அவளுடைய தகப்பனாரிடம் அவளைத்தான் "மணம் செய்துகொள்ள விரும்புவதாய் தெரிவித்தார்."

**அத்தியாயம் 21.** கவேரமுனிவர் கன்யாதானத்தின் மகிமையை அறிந்தவராய் ... ... ... ... ...
காவேரியை பிரும்மாதி தேவர்களின் முன்னிலையில் அகஸ்தியருக்கு மணம் செய்து கொடுத்தார். நான் முகன் முதலியோர் பிரகஸ்பதியை ஆசிரம தர்மங்களைச் சொல்லும் படி கேட்டனர்.

**அத்தியாயம் 22.** தேவகுருவாகிய பிரஹஸ்பதி தேவர் களுக்கு ... .... ...
ஆசிரம தர்மங்களைப் போதித்தார்.

**அத்தியாயம் 23.** லோபாமுத்திரைக்கு பதிவ்ரதா தர் மம் விஸ்தாரமாக ... ... ....
உரைக்கப்பட்டது. அநேகம் சீர்வரிசைகளுடன் காவேரி அகஸ்தியருடன் காசிக்கு அனுப்பப்பட்டாள்.

*24. 25. 26.* வேறு உபாக்யானங்கள்.

**அத்தியாயம் 27.** சுயக்ஞமுனிவர் மாதவனிடமிருந்து சுதஜ்யோதிகை என்ற பெண்ணை அடைந்தார். அவருடைய ஆக்ஞைப்படி சுயக்ஞர் கஜேந்திரகிரியை அடைந்து தவம் செய்து மோக்ஷமடைந்தார். சுதஜ்யோதிகை தன்னுடன் வந்த யக்ஷிணியுடன் தவம் செய்து கொண்டிருந்தாள். தேவேந்த்ரன் ப்ரத்யக்ஷமாக தன்னுடன் சுதஜ்யோதிகையும், யக்ஷிணியும் ஆயிரம் யுகம் இருந்து பிறகு நதியாகப் பிரவகிக்கலாம் என்றார், சுத்ஜ்யோதி "ஜோதி" என்ற பெயருடனும், யக்ஷிணி "கனகா" என்ற பெயருடனும் கலியில் சிறிய நதியாகத் தோன்றி பாகமண்டலக்ஷேத்திரத்தில் காவேரியுடன் சங்கமம் ஆகப்போகிறார்கள். என்றார்.

श्री गुरुभ्यो नमः

## ஆக்னேய புராணம்.

ஸ்ரீமத் ஆக்னேய புராணத்தில் துலா காவேரி மஹாத்மியம் 23-வது அத்யாயம் முதல் 75-வது அத்யாயம் முடிய கூறப்பட்டுள்ளது. ஏழு, எட்டாவது அத்யாயங்களில் அரிச்சந்திர மகாராஜனுக்கு அகஸ்திய மகரிஷி கீழ்கண்டவாறு சொல்கிறார்.

कावेर्याः महिमानं त्वं प्रोच्यमानं मयाधुना ॥
शृणुष्वावहितोराजन् सहस्रारायुधप्रियं ।
कावेर्याः स्मरणंशस्तं कीर्तनंदर्शनं श्रवः ॥ २८ ॥
स्पर्शनं तज्जलस्नानं जन्मान्तरतपः फलं ।
अनेकजन्म संसिद्ध पुण्यराशेर्नरस्य च ॥ २९ ॥
स्नातुं मतिः भवेद्राजन् कावेर्याविमलेजले ।
तुलामासे च कावेर्यामाघे वैशाख एव च ॥ ३० ॥

அதாவது ஸ்ரீ காவேரி நதியை ஸ்மரிப்பவனும், பார்க்கிறவனும், கீர்த்தனை செய்து புகழ்கிறவனும், ஜலத்தை தொடுபவனும், அதில் ஸ்நானம் செய்பவனும், அநேக பூர்வஜன்மாக்களில் தவம் செய்து புண்யத்தை சேகரித்திருக்க

வேண்டும். மேலும் துலா, மாக மாதங்களில் காவேரி ஸ்நானம் செய்தவர்களின் புண்யத்தை சொல்லமுடியாது.

किं तपोभिश्च वेदैश्च किंतीर्थैः किंव्रतादिभिः ।
कावेर्यं तु सकृत्स्नात्वा साक्षान्नारायणो भवेत् ॥ ४८ ॥

தவம் செய்வதனாலும், வேதம் ஓதுவதாலும், விரதங்கள் அனுஷ்டிப்பதாலும், தீர்த்தயாத்திரை செய்வதாலும் உண்டாகக்கூடிய பலன்களை ஒருவன் ஒருதடவை காவேரி ஸ்நானம் செய்வதனால் சுலபமாய் அடைந்து ஸ்ரீமந் நாராயணமூர்த்திக்குச் சமமாக விளங்குவான்.

இந்தப் புண்யமான கதையை நிசுளாபுரி நாயகனை தர்மவர்மா என்ற ராஜரிஷி தால்ப்ய மகரிஷியிடமிருந்து அறிந்துகொள்கிறார்.

**அத்தியாயம் 23. 24.** அகஸ்தியர் அரிச்சந்திரனுக்கு கவேரியின் உற்பத்தியை சொல்கிறார். கவேரர் என்ற ரிஷி பிரும்மகிரி பிராந்தியத்தில் கடுந்தவம் புரிகிறார். பிரமன் பிரத்யக்ஷமானார்.

பிரும்மா சொல்கிறார்.

मम कन्या जगन्माता विष्णुमाया महामुने ।
त्वत्पुत्रीत्वंगता देवी तवमोक्षं प्रदास्यति ॥ २३ ॥
इत्युक्त्वासोस्मरन्मायां विष्णोर्लोक विमोहिनीं ।
उपतस्थे विशालाक्षी सर्वाभरणभूषिता ॥ २४ ॥

எனது மானஸ குமாரி, விஷ்ணுமாயாஸ்வரூபிணி, ஸர்வ ஜகத்திற்கும் தாய்—உன் பெண்ணாக வரப்போகிறாள். அவள் உனது மோக்ஷத்திற்கு காரணமாய் இருப்பாள். என்று சொல்லி தியானம் செய்தார். விஷ்ணுமாயாஸ்வரூபிணி அகன்ற அருளோடு கூடிய கண்களோடும் எல்லாவித ஆபரணங்களோடும் பக்கத்தில் ஆவிர்ப்பாவம் செய்தாள்.

*அந்த மானஸீக தெய்வ கன்னிகையைப் பார்த்து பிரும்மா சொல்வதாவது:–*

साकन्या चिन्मयीसृष्टा देवगंधर्वसंस्तुता ।
पितामहस्तामालोक्य वाक्यमेतदुवाचह ॥ २५॥
भद्रेऽस्य योगिनोदेवी कन्या त्वं गच्छमुक्तिदा ।
नदीभूत्वाथ कावेरी मोक्षमार्गैक साधनी ॥ २६ ॥
सर्वतीर्थमयी पुण्यालोकांस्त्वं पाळयिष्यसि ।
लोपामुद्राख्यया चापित्वमेकांशेनशोभने ॥ २७ ॥
भवभार्याह्यगस्त्यस्य योगीन्द्रस्य महात्मनः ।
इत्युक्त्वान्तर्दधे ब्रह्मा हंसारूढोऽमरैस्सह ॥ २८ ॥

*மங்களஸ்வரூபிணி! தாங்கள் இந்த கவேரமுனிக்கு புத்ரியாக விளங்கி அவருக்கு மோக்ஷத்தை அளித்து, அகஸ்திய முனிவரை பதியாக அடைந்து உன்னுடைய ஒரு அம்சத்தை லோபாமுத்ரை என்ற ரிஷிபத்னியாகவும், மற்றொரு அம்சத்தை எல்லாப்புண்ய தீர்த்தங்களோடு கூடிய- ஸர்வபாபங்களையும் நசிக்கும்படி செய்யவல்ல நதிரூபமாய் பிரவஹிக்கச் செய்யவேண்டுமென்று கூறி அந்தர் தியானம் அடைந்தார்.*

*கவேரரிஷிக்கு விஷ்ணுமாயா ஜகன்மாதா, லோபாமுத்ரா-காவேரி என்ற அம்சங்களோடு குமாரியாக வளர்ந்து, தவம் செய்து அகஸ்தியரை மணந்து, பின்னர் இருதனி அம்சங்களாய், ஒன்று லோபாமுத்ரையாகவும், மற்றொரு அம்சம் காவேரி நதியாகவும் தோன்றினாள்.*

*ஒரு சமயம் அகஸ்திய பகவான், எல்லாபுண்யதீர்த்தங்களோடு கூடிய தன் கமண்டலுவை கீழே வைத்துவிட்டு ஸ்நானத்திற்கு சென்றார். திருமாலின் திருவுள்ளப்படி ஒரு காகம் அந்த கமண்டலுவை கவிழ்த்து விட்டது. காவேரியில் எல்லாபுண்ய தீர்த்தங்களும் சேர்ந்து பிரவஹிக்க ஆரம்பித்தன. மஹாவிஷ்ணு நெல்லிமர ரூபமாய் அமர்ந்து விட்டார். புண்யதீர்த்தங்களுடன் கூடிய காவேரி இந்த*

நெல்லிமரத்தின் அடியிலிருந்து பிரவாஹம் செய்ய ஆரம்பித்தாள். அதனால் காவேரிக்கு ஸஹ்யாமலகதீர்த்தம் என்ற பெயர் ஏற்பட்டது.

ஸ்நானம் செய்து திரும்பிய அகஸ்தியமுனிவர் நிகழ்ந்ததை அறிந்து துக்கப்பட்டபோதிலும், பிரும்மாவின் ஆக்ஞைப்படியும், தன்னுடைய இஷ்டப்படி பதினான்கு லோகங்களிலுமுள்ள புண்ய தீர்த்தங்களும் காவேரியில் சேர்ந்து பிரவகிக்கும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார்.

**அத்தியாயம்** 26. அகஸ்திய மகரிஷி காவேரி உலக க்ஷேமார்த்தம் நதியாய் பிரவகிக்கிறாள் என்பதை அறிந்து சந்தோஷப்பட்டு கீழ்க்கண்டவாறு அனுக்ரகம் செய்கிறார்.

विष्णुपादाब्ज संभूता गङ्गेति प्रथितोत्तरा ।
यथाभागीरथीगङ्गा सिन्धुरित्यपिजाह्नवी ॥ ३९ ॥
तद्वा दक्षिणगङ्गेति सह्यामलकसंभवा ।
कावेरी दिव्यदेवीति सर्वतीर्थमयेतिच ॥ ४० ॥
अहं च वैखानसवालखिल्यैरन्यै र्मुनीन्द्रैस्सनकादिभिश्च ।
सर्वत्रते पुण्यतटे वसामि श्रीपार्वतीनाथ मुखैस्सुरैश्च ॥ ४२ ॥
श्रीरङ्गसन्निधौ चापि जम्बुनाथस्य पार्श्वके ।
स्नास्यन्तुभूसुरानित्यं सर्वपापापनुत्तये ॥ ५२ ॥

காவேரியின் தீர்த்தம் எல்லா பாபங்களையும் போக்கவல்ல சக்தியுண்டாகும்படி அனுக்ரகம் செய்தார். அவள் செல்லும் மார்க்கங்களில், தானும், சர்வ முனிவர்களும், தேவர்களும், பார்வதி பரமேசுவரரும் எப்பொழுதும் சாந்நித்யமாக இருப்போம் என்று பெருமைப்படுத்தினார். பின்னர் காவேரி பல க்ஷேத்ரங்களின் மார்க்கமாய் ஸ்ரீ ரங்கநாதன் ஜம்புகேசுவரர் பிரஸாதத்தைப்பெற்று அங்குள்ள ஜனங்களை பவித்ரர்களாய் செய்வாள் என்றும் கூறினார்.

**அத்தியாயம்** 27. தேவர்கள், கின்னர கிம்புருஷாள், பிதிர்தேவதைகள், எல்லோரும் காவேரியின் பிரவாஹ

ஸௌந்தர்யத்தைக் கண்டு வியந்தார்கள். காவேரி தீர்த்த மகிமையினால், தேவர்கள் யக்ஞங்கள் ஏராளமாய் செய்யப் படும் அதனால் தங்களுக்கு ஹவிர்ப்பாகங்கள் கிட்டும் என்றும், பிதுர்தேவதைகள் தங்கள் சந்ததியார்கள் *சத்புத்திரர்களின் மூலம் ஸ்நான, தர்ப்பணாதிகளின் மூலம் தங்களை கரையேற்றுவார்கள் என்றும், காவேரி தீர்த்தத்தினால் பக்வம் செய்யப்பட்ட அன்னமும், சாகமும் தங்களுக்கு கயாசிராத்தபலனைக் கொடுக்கும் என்றும் சந்தோஷத்தால் ஆரவாரம் செய்தார்களாம்.

கீழ்க்கண்ட சுலோகங்களை கவனிக்கவும்:—

तर्पयिष्यन्ति कावेर्यास्तीर्थैस्नानेन नोद्विजाः ।
अस्मानुद्दिश्य कावेर्या स्सर्वेचापि जलेप्लुताः ॥ ९ ॥
यज्ञादीन्कुर्वते सन्तः पालिता राजभिस्सदा ।
इत्यन्योन्यं सुरास्सर्वे हर्षादूचुस्सगद्गदम् ॥ १० ॥
प्रीताश्चपितरस्सर्वे हर्षगद्गदयगिरा ।
ऊचुः परस्परं राजन् समालभ्य च पाणिभिः ॥ ११ ॥
वयमेवकृतार्थास्मो भजामस्तृप्तिमक्षयां ।
मद्वंशजास्तु सत्पुत्राद्द्युरस्मत्तिलोदकम् ॥ १२ ॥
अहोह्यत्यद्भुताकारा कावेरी तीर्थकोटिभिः ।
दृश्यतेलोकरक्षार्थे ब्रह्माद्रौ ब्रह्मनिर्मिता ॥ १३ ॥
यानि तीर्थानिपुण्यानि पुण्यास्सर्वाश्चनिम्नगाः ।
कावेर्या ब्रह्मरूपायाः कलांनार्हन्ति षोडशीम् ॥ १४ ॥
एतज्जलेन पक्वान्नं केवलं शाकमेव वा ।
गयाश्राद्धायुतफलं भवत्येवहिनोघ्रुवम् ॥ १५ ॥

**அத்தியாயம் 28, 29.** அகஸ்தியரால் சொல்லப்பட்ட மார்க்கத்தைக்கேட்டு சந்தோஷமடைந்த காவேரி ஒரு அம்சத்தால் லோபாமுத்ரையாக அகஸ்தியருக்கு சிசுருஷை செய்துகொண்டு மற்றொரு ரூபத்தால் காவேரியாக பிரவகித்தாள்.

**அத்தியாயம் 30.** அகஸ்தியர் பிரும்மகுண்டம் என்ற விடத்தில் கமண்டலுவை ஸ்தாபித்து பிரும்மகுண்டம் எனப் பெயரிட்டார். ஸமஸ்த தீர்த்தங்களும், சப்த ரிஷி களும் அங்கே வசிப்பதாய் ஐதீகம்.

**அத்தியாயம் 1 33.** பிரும்மகுண்டத்திற்குச் சமீ பத்தில் ஹரிச்சந்திராசிரமம் உள்ளது. முன்பு ஹரிச்சந்திரன் அசுவமேத யாகம் செய்து விஷ்ணுவைக்குறித்து தவம் செய்து, ராஜ்யத்தைத் துறக்க ஏற்பட்டபோதிலும் சத்யம் தவறுமை தன்னிடத்தில் இருக்க வரம்பெற்ற ஸ்தலம் இதுதான். மேலும், மானிட ரூபத்துடன் நான்முகனல் பரமசிவனைப் பூஜித்த ப்ரணவாசக்ஷேத்ரமாகும் இது. குபேர க்ஷேத்ரம், வியாக்ரபாதக்ஷேத்திரம் முதலியவை இங்கு உள்ளன.

**அத்தியாயம் 34.** வன்னி புஷ்கரணிக்ஷேத்திரம். இராமன் இராவணனை வதம் செய்துபெற்ற பிரும்மஹத்தி தோஷத்தை இந்த இடத்தில் நீங்கப்பெற்ருர்.

**அத்தியாயம் 35, 36, 37.** வன்னி புஷ்கரணி தீர்த் தம் மகிமை; சூர்ய புஷ்கரணி தீர்த்தம் ஹேமாவதி தீர்த் தம், கண்வ தீர்த்தம் இவைகள் ஆகியவை இவற்றில் கூறப் பட்டுள்ளன.

**அத்தியாயம் 38, 40.** இந்திரனுக்கு பிருஹஸ்பதி சாபம் நீங்கிய கதை, இதில் கூறப்படுகிறது. சந்திர புஷ் கரணி, சங்க தீர்த்தம் மிகப்புனிதமானவை.

**அத்தியாயம் 41, 43.** காவேரி இரண்டாகப் பிரிந்து மறுபடி ஒன்ருய்க்கூடும் இடமும், விசுவேச்வரக்ஷேத்திரமும்.

**அத்தியாயம் 44.** காவேரி, கபிலா சங்கமத்தில் ஒவ் வொரு மாதத்திலும் ஸ்நானம் செய்பவர்களுக்கு ஏற்படும் நன்மை கூறப்படுகிறது.

**அத்தியாயம் 45.** பரமேசுவரனை சுலபமாய் அடைய காசி க்ஷேத்திரத்தைக் காட்டிலும் மிகப் பிரியமான திருமுக் கூடல் க்ஷேத்திரத்தில் (காவேரியின் ஒரு கட்டம்) ஸ்நானம்

செய்து தரிசனம் செய்வதால் நல்வழி உண்டாகும் என்பதை அறிவிக்கப்படுகிறது.

**அத்தியாயம் 46, 47** திருமுக்கூடல் க்ஷேத்திரமகிமை இவற்றில் வர்ணிக்கப்படுகிறது. இங்கு கபிலா, காவேரி சங்கமம் நடைபெறுகிறது. பரமேச்வரன் க்ஷேத்ரபாலன் நரஸிம்மஸ்வாமி கதாதரன். பஞ்சவக்த்ரன், பஞ்சகாலன், பஞ்சாயதன விக்ரர் பஞ்சபிரும்மமயமான சம்பு எல்லோரும் அந்த க்ஷேத்திரத்தில் வாசம் செய்கிறார்கள். அந்த க்ஷேத்திரத்தில் அகஸ்தியேசுவரரைப் பூஜை செய்பவர்கள் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டு முக்தியடைகிறார்கள்.

**அத்தியாயம் 48, 49.** காவேரி, கபிலா சங்மத்தில் மார்க்கண்டேய ரிஷிதவம் செய்து ஆரோக்கியமடைந்து, லிங்கப்பிரதிஷ்டை செய்தார். அகஸ்த்யேச, ஸோமேச, கர்கேச, மார்கண்டேச, ஹனுமதீச மூர்த்திகள் சாந்நித்யம் அடைந்துள்ள திருமுக்கூடல் க்ஷேத்திரம் வர்ணிக்கப்படுகின்றது. இங்கு 66 கோடி தீர்த்தங்கள் ஸாந்நித்யம் அடைந்திருக்கின்றன.

**அத்தியாயம் 50, 55.** பரமேச்வரன் இந்த ஸ்தலத்தில் கபிலா சங்கமம் ஏற்படுவதற்குமுன் பிரமன் தலையைக் கொய்த பாபத்தைப்போக்க, இங்குள்ள சரோவரத்தின் தீர்த்தத்தை ஸ்பரிசித்தமாத்திரத்தில் கபாலம் கையை விட்டு விழுந்தது. பரமேசுவரன் இந்த சரஸின் கரையில் சிலகாலம் வாசம் செய்தார். பிறகு தான் காவேரி உற்பத்தியும் கபிலா சங்கமும் ஏற்பட்டன. இந்த க்ஷேத்திரத்தில் எட்டு திக்குகளிலும், 8 தீர்த்தங்கள் உள்ளன. சிவனுடைய பாபத்தைப் போக்கிய தீர்த்தத்திற்கு ருத்ரதீர்த்தம் எனப் பெயர். திருமுக்கூடல் க்ஷேத்திரம் அஷ்டதள பத்மரூபமாய் அமைந்துள்ளது. இந்த க்ஷேத்திரத்தில் பரமசிவன் பிரமத கணங்களுடனும், சர்வ தீர்த்தங்களுடனும் வாசம் செய்தார். திருமுக்கூடல் கோடித்திர உற்சவம் இதில் விவரிக்கப்படுகிறது. வியாஸர், சிஷ்யர்களுடன் இந்த க்ஷேத்திரத்தைத் தரிசித்தார்.

**அத்தியாயம் 58, 59.** அகஸ்தியர் லோபாமுத்ரையுடன் இந்த க்ஷேத்திரத்தைப் பார்வையிட்டு லிங்க பிரதிஷ்டை செய்தார். ஹனுமானால் கொண்டுவரப்பட்ட லிங்கமும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. கர்காச்சார்யார் பரஸ்திரீ கமனதோஷம் நிவர்த்தியடைந்தவராய் துர்கேசுவரலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார். இதில் இங்குள்ள எல்லா தீர்த்தங்களையும் வர்ணித்துள்ளது. கோகர்ணம் என்ற ஸரஸ் இங்குள்ளது. இது ஸகர மகாராஜாவுக்கு அனுக்கிரகம் கிடைத்த ஸ்தலமாகும்.

**அத்தியாயம் 60 61** கஜாரண்யம் என்று பெயர் வரக்காரணம் கூறப்படுகிறது. வஸிஷ்ட வம்சத்தில் பிறந்த சோமதத்தன் என்ற அந்தணன் பரமேசுவரனின் ஆக்ஞையினால் காவேரி கபிலா சங்கமத்திற்கு அருகிலுள்ள ரிசீக மகரிஷியின் சித்தாசிரமத்திற்குப் புறப்பட்டார். வழியில் யானையால் கொல்லப்பட்டு, மறு ஜன்மத்தில் பூர்வ ஜன்ம ஞானத்தோடு கூடிய யானையாகப் பிறந்து, இந்த நதி சங்கமத்தில் ஸ்நானம் செய்து தவம் செய்தார். பரமேசுவரன் அவரைத் தன்னிடத்தில் ஐக்கியம் செய்து கொண்டார். அதனால் கஜாரண்யம் எனப்பெயர் வந்தது. கஜாரண்ய க்ஷேத்திரத்தில் வாஸுகி, பிரும்மா காமதேனு, குபேரன், இந்திரன் இவர்கள் லிங்க பிரதிஷ்டைகள் செய்து தங்கள் இஷ்டங்களைப் பூர்த்தி செய்து கொண்டார்கள். தமயந்தியின் தகப்பனாரான பீமராஜனால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கமும் இங்கு உள்ளது. இது காவேரி நடுவில் உள்ளது. இந்த உபாக்யானங்கள் கூறப்பட்டுள்ளன.

**அத்தியாயம் 62.** கச்யபர் சந்திரபுஷ்கரணி தீர்த்தத்தில் தவம் செய்து விஷ்ணுவைப் புத்திரனாக அடைந்து அப்புத்ரனை வாமன மூர்த்தியால் பலிச் சக்கரவர்த்தியை ஜயிக்கச்செய்து இந்திரனுக்குச் சுவர்க்கத்தை வாங்கித் தந்தார். விபீஷணும்வான் ஸ்ரீ ராமனின் குலதெய்வமாயுள்ள ஸ்ரீரங்க நாதனின் பூஜாப்பெட்டியைப் பெற்று மார்க்கத்தில் பெட்டி கீழே வைக்கப்பட்டதும் அது அங்கேயே தங்கிய கதையும் விவரிக்கப்படுகின்றது.

**அத்தியாயம் 63.** முன்பு ஒரு காலத்தில் ஒரு பிராம் மணன் அங்குள்ள தங்கமயமான விமானத்தைத் திருடுவதற்காக ஒளிந்திருந்தான் - நடுநிசியில் காவேரி பெருகி அதில் மூழ்கி இறந்தான். மறு ஜன்மத்தில் சுதர்மா என்ற அரசனாகப் பிறந்து சந்திர புஷ்கரணியில் ஸ்நானம் செய்து அரங்காதரைப் பூஜித்து முக்தியடைந்தான். சந்திரன் தவம் செய்து விஷ்ணுவைப் பூஜித்து, காந்தியுள்ள சரீரத்தைப் பெற்றபடியால் அவன் ஸ்நானம்செய்த தீர்த்தத்திற்கு சந்திர புஷ்கரணி என்று பெயர் ஏற்பட்டு விளங்கியது.

**அத்தியாயம் 64, 65.** பரமசிவனும் பார்வதியும் பிரமத கணங்களுடன் சந்திர புஷ்கரணி தீர்த்தம் வந்தார்கள். பரமசிவனைப் பார்வதியுடன் நர்த்தனம் செய்யும்படி சந்திரர் வேண்டிக்கொண்டார். ஆண்டவர் ஸம்ஹார தாண்டவத்தையும், ஆனந்த தாண்டவத்தையும் ஆடி அருளினர்.

**அத்தியாயம் 66.** அரங்க மண்டலத்தில் இந்திரன் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து பூஜித்து வந்தான். காசியபன் என்ற அந்தணன் வறுமையினால் சந்திரபுஷ்கரணி தீர்த்தத்தில் தற்கொலை செய்துகொள்ளப் போகும்போது தேவேந்திரன் ஜம்புக ரூபமாய் அவனிடம் சென்று ஆத்மஹத்தி தோஷத்தை எடுத்துச்சென்றார். இந்திரன் மூலம் பல தர்மங்களை அறிந்து ஜமபுகேசுவரர் என்ற லிங்கத்தை பிரதிஷ்டை செய்து மோக்ஷமடைந்தார். லக்ஷ்மியும் ஜம்பு கேசுவரரைப் பூசைசெய்து மகாவிஷ்ணுவை அடைந்தார்.

**அத்தியாயம் 67** அரங்கத்தில் அமர்ந்துள்ள பார்வதி பரமேச்சுவரரை ஸ்ரீ மஹாவிஷ்ணு விருத்த பிராம்மண வேஷம் பூண்டு, தான்புண்டரீகபுரத்திலிருந்து வந்ததால் களைப்படைந்திருப்பதாயும், அந்த இடத்தில் சயனம்கொள்ள இஷ்டப்படுவதாயும் பார்வதியைவேண்ட, அவளும் இஷ்டப் படவே, அங்கு சேஷசயனராய் அமர்ந்து விட்டார். பரமசிவனும், விஷ்ணுவின் கபடத்தை அறிந்துகொண்டு புண்டரீகபுரத்தில் அவர் அமர்ந்துள்ள ஸ்தானத்தை எடுத்துக் கொண்டார். லக்ஷ்மிதேவி பரமசிவனுடைய உபதேசத்தினல்

அரங்க ஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தாள். பிரமனால் இந்த க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீ ரங்கம் என்று பெயர் சூட்டப்பட்டது.

**அத்தியாயம் 68** கும்பகோண க்ஷேத்திரத்தில் மஹா விஷ்ணு கூர்மாதி ரூபங்கள் எடுத்தபொழுது லக்ஷ்மி ஸுவர்ண பங்கஜவனத்தில் தவம்செய்து மஹாவிஷ்ணுவை அடைந்தாள். அவ்விடத்தில் சந்திரன், நவக்கிரகங்கள், ஹரிச் சந்திரன், நளன், புருகுத்ஸன், ஸகரன், கார்த்தவீரியார் ஜுனன் முதலியவர்கள் தவம்செய்து பெருமையடைந்தார் கள்.

**அத்தியாயம் 70** துலா மாதத்தில் காவேரியின் உற் பத்தி ஸ்தானத்திலும், கனகா ஸங்கமத்திலும், கபிலா சங்கமத்திலும், கஜாரண்யம், சந்திரபுஷ்கரணி, கும்ப கோணம், மாயூரம் முதலான இடங்களிலும் ஸ்நானம் செய் வதால் உள்ள பலன் விவரிக்கப்பட்டுள்ளது.

**அத்தியாயம் 71** நாதன் என்ற பிராம்மணன் தன் பத்தினியுடன் விதிப்பிரகாரம் துலா ஸ்நானம் செய்து மோக்ஷமடைந்த கதை கூறப்பட்டுள்ளது.

**அத்தியாயம் 72** இந்திரன் விருத்திராசுரனை வதம் செய்த பாபத்தை நீக்க காசி முதலான பல க்ஷேத்திரங் களில் ஸ்நானம்செய்தும், தோஷம் நீங்காதவனாகி கடைசி யில் காவேரி தீர்த்தத்தில் அர்ஜுன வனத்திலுள்ள மத்தி யார்ஜுனரைப் பூஜித்து காவேரியில் ஸ்நானம் செய்ததும் இங்கு பிரும்மஹத்தி நீங்கி இந்திரபதவியை அடைந்தான்.

**அத்தியாயம் 73** இந்திரன் மகாதேவரைப் பூஜித்து அவருடைய ஆத்மலிங்கத்தை அடைந்தான்.

**அத்தியாயம் 74** இந்திரன் ஆத்மலிங்கத்தைப் பூஜித்து கொண்டிருக்கும் பொழுது ஜம்பன் என்ற அசுரன் அமரா வதியை ஜயித்து இந்திரனை விரட்டிவிட்டான். ஜம்பன் பூலோகத்தில் காவேரி சங்கமமாகிய இடத்தில் ஜலக்கிரீடை செய்தான். இந்த பாபக்காரியத்தைச் செய்த அசுரனை மஹாவிஷ்ணு இந்திரனுக்கு சக்தியளித்து சம்ஹாரம் செய் வித்தார்.

**அத்தியாயம் 75** வேதாரண்ய மகிமை:- நிழலில்லாத பூமியில் மரங்களடர்ந்ததாகச் செய்ய எண்ணிய பரமசிவன் வேதங்களைக் கிளைகளோடு கூடிய மரங்களாக அமரும்படி சொன்னார். எட்டு யோஜனை விஸ்தீர்ணங்கொண்ட இந்த பாகம் ஆரண்யமாய் விளங்கிற்று. இதற்கு சுவேதா ரண்யம் என்று பெயர்.

## காசிகண்ட புராணம் – சாராம்சம்

முன்னொரு காலத்தில் விந்திய பர்வதம்கர்வம் அடைந்து மிகவும் உயரமாக வளர்ந்து ஸுர்யனுடைய கதியைத் தடுத்தது அப்பொழுது சூர்யன் முன்னால் போகமுடியாமல் நின்றான். இவ்விதம் பன்னிரண்டு வருடங்கள் சூரியனின் கதி ஒரே இடத்தில் இருந்து விட்டதால் விந்திய பர்வதத் திற்கு வடக்கில் இருட்டும், தெற்கிலும் மேற்கிலும் சூர்யன் பிரகாசம் அதிகமாயும் இருந்தது. இந்தக் கஷ்டத்தை நிவா ரணம் செய்து கொடுக்கும்படி ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ விசுவநாதஸ்வாமியைக் குறித்து 33 கோடி தேவதைகள் பிரார்த்தித்தார்கள்.

இதன் பயனாக, அகஸ்திய முனியவர் தான் இந்த இடரைத் தீர்த்து வைப்பார் என்று அறிந்து அவரைப் பிரார்த்தித்தார்கள். அவரும் ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தை விட்டுப் போக முதலில் சம்மதிக்காவிடினும், ஜனங்களின் இன்னல் களைக் களையும்பொருட்டு தன் பத்தினியுடன் கிளம்பினார். தேவதைகளும் அகஸ்தியர் வசிக்கும் இடங்களில் எல்லாம் தங்கள் அம்சங்களைப் பொருத்தி புனிதமாக்குவதாயும் வாக் களித்தார்கள்.

தன்னைநோக்கி தொலையில் வந்துகொண்டிருக்கும் அகஸ்தியரைக் கண்ணுற்று, விந்தியன் முனிவர் சபித்து விடுவாரோ எனப்பயந்து அவரைச் சாஷ்டாங்கமாக வணங் கினான். அப்பொழுது சூர்யனின் தடைநீங்கி முன்னால் செல்ல ஏதுவானது. அக்காரணத்தினால் விந்திய பர்வதத் திற்கு உத்தர பாகத்தில் பன்னிரண்டு வருடங்கள் தள்ளி வருஷம் சொல்லி சங்கல்பம் செய்து கொள்கிறார்கள்.

இது பஞ்சாங்கங்களில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

அகஸ்தியபகவான் தான் தக்ஷிணதேசத்திற்குப் போய் திரும்பும்வரையில், இப்படியே தலைவணங்கி நிற்கவேண்டு மென்பதாய் விந்தியனுக்கு உத்திரவிட்டு, தன்னுடைய வாசஸ்தலத்தை தேடிக்கொண்டு ஸஹ்யாத்ரி பர்வதத்திற்கு வந்தார். அங்கு தேவனைப் பிரார்த்தித்துத் தன்னுடைய தண்டகமண்டலுவைப் பூமியில் வைத்தார் பிறகு காவேரி பிரவாஹம் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது.

## பிரும்ம கைவர்த்த புராண சாராம்சம்.

**அத்தியாயம் 1.** ஸுமந்து மகரிஷியைப் பார்த்து தேவவர்மா மகாராஜா காவேரி தீர்த்தம் எந்த விதத்தில் எல்லா நதிகளையும் காட்டிலும் பரிசுத்தமானது, மகிமை பொருந்தியது என வினவவும், ஸுமந்து மகரிஷி சொல்லு கிறார்.

ஒரு சமயம் கைலாசத்தில் பரமசிவன் பார்வதியுடன் ரிஷபாரூடராய் இருக்கையில் சில ஹம்ஸங்கள் ஆகாயத் தில் துல்யமான தேஜசுடன் பறந்தன அவைகள் பார்வதி பரமேச்சுவரனை வணங்கின. தாங்கள் புண்ய தீர்த்தங்கள் என்றும், காவேரியில் ஸ்நானம் செய்ததால் இவ்வளவு பிரகாசமாய் விளங்குவதாயும் பகர்ந்தன. மேலும் இம்மட வன்னங்கள் பூலோகத்தில் ஜனங்கள் துலா காவேரி ஸ்நா னம் செய்தால் என்றும் அழியாத தேஜசுடன் தங்கள் அருள்பெற்று விளங்கவேண்டும் என்றும் வேண்டிக் கொண்டன.

तीर्थानि –

सह्यभूधरसंभूता कावेरीति महानदी ।
सद्यः पापहरा नृणामभीष्टफलदायिनी ॥

तुलागतेदिवानाथे तुलया काशिपुण्यदे ।
निमज्य प्रत्यहं मासंनिवृत्ताः स्मगतैनसः ॥

ये निमज्जन्ति कावेर्यां तुलामासे दिनेदिने ।
तेषामीश्वरसान्निध्यमस्त्वक्षय्यमृति प्रभो ॥

**அத்தியாயம் 2** பார்வதிதேவி பரமசிவனை துலா காவேரி ஸ்நான மகிமையை விஸ்தாரமாய்ச் சொல்லும்படி கேட்க பரமசிவன் சொன்னதாவது:-

தேவி! நாதசர்மா என்று ஒரு பிராமணனுக்கு சர்வ குணங்கள் பொருந்திய ஒரு மனைவி இருந்தாள். அவள் பெயர் அனவத்யா. அவள் தன் நாதனிடமிருந்து துலா ஸ்நான மகிமையை அறிந்துகொண்டாள். தீர்த்தம், க்ஷேத்திரம், லிங்கம் மூன்றும் பொருந்திய கௌரி மாயூரக்ஷேத்திரத்தில் துலாமாத முழுமையும் நியமத்துடன் தங்கி ஸ்நானம் செய்தால், ஸம்ஸார துக்கம் நீங்கி சாயுஜ்ய பதவி அடையலாம் என்பதை நாதசர்மா சொல்லி முடித்தார்.

अध्याय-2 -नाथशर्मा-

मायूरे पुण्यकावेर्यामाप्लुत्य सकृदीश्वरम् ।
गौरीं दृष्ट्वा पुनर्जन्म न प्राप्नोति नरः क्वचित्
दिव्यक्षेत्रे पुण्यकाले कावेरीपुण्यवारिणि ।
मज्जनादावयोर्मुक्तिः करस्थाहि न संशयः ॥

**அத்தியாயம் 3** மறுபடியும் அனவத்யா தன் நாதனைப் பார்த்து எதனால் காவேரி எல்லா புண்ய நதிகளையும்விட புனிதமானது என்று கேட்டாள். அவர் காவேரி உற்பத்தி கதையைச் சொல்லி, காவேரி அகஸ்தியரை மணஞ்செய்து கொண்டு பின்னர் உலக க்ஷேமார்த்தம் தன்னுடைய ஒரு பகுதியால் நதி ரூபமாய் பிரவஹித்து, விஷ்ணு, பிரும்மா, பரமசிவன், அகஸ்தியர் இவர்களின் அனுக்கிரஹத்தால் எல்லா பாபங்களையும் போக்கவல்ல சக்தியைப் பெற்றாள் என்று கூறினார்.

**அத்தியாயம் 4** மேலும் நாதசர்மா துலாஸ்நானம் செய்யுமுன் அனுஷ்டிக்கவேண்டிய சில விதிகளைக் குறிப்பிடுகிறார். பூமியில் படுக்கவேண்டும். ஆகாரநியமம் வேண்டும், இந்திரியநிக்ரகம் வேண்டும். துலாஸ்நானம் எல்லாவித விரதங்களைக்காட்டிலும் மேலானது. துலா மாதத்தில் ஸ்நானம் விதிப்படி செய்தால், பிரும்மாவர்த்தம், குரு

க்ஷேத்ரம், புஷ்கரம், அவிமுக்தம், பிரயாகை போன்ற புண்ய க்ஷேத்திரங்களைத் தரிசிப்பதால் கிடைக்கும் புண்ணியத்தைக்காட்டிலும் அதிக புண்ணியத்தை மானுடர்கள் பெறுவார்கள். துலாமாதத்தில் எல்லா புண்ணி தீர்த்தங்களும் காவேரியில் வந்து சேருகின்றன. கிருதயுகத்தில் ஞானமும், திரேதாயுகத்தில் யாகமும், துவாபரயுகத்தில் அர்ச்சனையும், கலியுகத்தில் தானமும், முக்தி ஸாதனங்கள் துலாஸ்நானம் காவேரியில் செய்யப்பட்டால் மேலான புண்ய பலத்தைத்தரும் என்று சொல்கிறார்.

नाथशर्मा-

विषुवन्तं समारभ्य नियता स्थण्डिलेशया ।
मासमेकं निराहारात्रिकालं स्नानमाचर ॥
त्रिकालमर्चयन्तीशं त्यक्तभोगा जितेन्द्रिया ।
ततोनिर्दग्धपापा च सर्वेष्टं समवाप्स्यसि ॥
ब्रह्मावर्ते कुरुक्षेत्रे पुष्करे च पृथूदके ।
अविमुक्ते प्रयागे च गङ्गासागरसंगमे ॥
यत्फलं तत्फलं प्रोक्तं तुलाकावेरिमज्जनात् ।
अग्निष्टोमादिभिर्यज्ञैः दैवतैश्चाश्रमैर्धृतैः ।
यद्यत्फलं तुकावेरी तत्तद्दास्यति वै ध्रुवम्

இத்துடன் மத்யபிரதேசத்திலுள்ள வினதா என்ற பிராம்மண ஸ்திரீ, ஸஹ்ய பர்வதத்தையடைந்து துலாஸ்நானத்தை விதிப்படி மூன்று வருடங்கள் செய்து மோக்ஷம் அடைந்தாள் என்ற கதையையும் சொன்னார்.

**அத்தியாயம் 5 6** அனவத்யை தன் பர்த்தாவன நாத சர்மாவுடன் மாயூர க்ஷேத்திரத்தில் நியமத்துடன் ஸ்நானம், தானம், அதிதிபூஜை இவைகளை செய்து வந்த பின் பரமசிவனால் தாரகமந்திரம் உபதேசிக்கப்பட்டு கடைசியில் கயிலையில் நாதசர்மா, நாதர் என்னும் பிரமத கண நாயகராயும், அனவத்யை பார்வதி தேவிக்கு குறேத்

நரை என்ற சகியாகவும் வாழ்ந்து வந்தார்கள் என்பது கதை.

ரோகாதிகளினால் ஸ்நானம் செய்ய இயலாதவர்கள் காவேரி ஸ்நானம் செய்த பிராம்மணர்களின் பாதங்களைக் கழுவி அந்தத்தீர்த்தத்தை தெளித்துக்கொள்வதனால் ஸ்நானம் செய்த பலன் கிட்டும். அல்லது 8000 ஆவர்த்தி காயத்ரி ஜபம் செய்தல் வேண்டும்.

**அத்தியாயம் 7** கண்வர் என்ற ரிஷி கங்கா ஸ்நானம் செய்யப்போகையில் வழியில் மூன்று கருப்பு உருவம் உடைய ஸ்திரீகளைப் பார்த்து நீங்கள் யார் என்று வினவ அவர்கள் தாங்கள் கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற புண்ணிய நதிகள் என்றும், தங்களிடம் பாபிகளால் சேர்க்கப்பட்ட கல்மஷங்கள் தங்கள் தேஜஸைக் குறைத்து விட்டதாயும், அவைகளைப் போக்கவேண்டி காவேரி ஸ்நானம் செய்யப் போவதாயும் கூற, கண்வரும் அவர்களுடன் சேர்ந்து காவேரியில் ஸ்நானத்திற்குச் சென்றார். புண்ய நதிகள் தேஜஸைப் பெற்றன. காவேரியில் சேர்க்கப்பட்ட பாபங்கள் காலாக்னியில் அகப்பட்ட தூசிகளைப் போல் நசித்துவிடுகின்றன என்பதைத் தெரிந்துகொண்டு அவர் காவேரியை தியானித்தார். அவள் சர்வாபரண பூஷிதையாய் கண்வருக்கு தரிசனம் கொடுத்தாள்.

**அத்தியாயம் 8** இந்திர பிரஸ்தத்தில் இந்திரதத்தன் லக்ஷ்மி என்ற தம்பதிகள் வாழ்ந்து வந்தனர். லக்ஷ்மியின் நேர்மையற்ற வாழ்க்கையினால் அவள் இறந்தவுடன் பைசா சரூபம் பெற்று ஜாபாலி ஆசிரமம் சென்று அவருடைய உபதேசத்தால் மாயூரக்ஷேத்திரத்தில், ஏகாதசி, துவாதசி, வியதீபாத புண்ய காலங்களில் ஸ்நானம் செய்ததால் பைசாசரூபம் நீங்கி, உத்தம ஸ்திரீயாக மாறி, உத்தமதத்தன் என்ற புருஷனை மணந்து துலாகாவேரி ஸ்நானத்தை நியமனங்களுடன் செய்து மோக்ஷம் பெற்றாள்.

अध्याय:- 8 जाबालि:-

मायूरे तु तुलामासे कावेर्यां स्नातुमर्हसि ।

एकादश्यां व्यतीपाते द्वादश्यां च विशेषतः ।
पैशाच्या:तत्र मुक्तिश्च भविष्यति न संशयः ॥

**அத்தியாயம் 3** துலாஸ்நானத்திற்கு மிகவும் விசேஷ க்ஷேத்திரங்களை குறிப்பிடுகிறார்:- ஸஹ்ய பர்வதம், ஸ்ரீநிவாஸ க்ஷேத்ரம், ராமநாத க்ஷேத்திரம், விருபாக்ஷம், ஸ்ரீ ரங்கம், ஜம்புகேசுவரம், பஞ்சநதம், புஷ்யாரண்யம், தக்ஷிணாவர்த்தம் சுவாமிமலை, மத்யார்ஜுனம் பசுபதீசுவரம், கௌரி மாயூரம், சுவேதாரண்யம், சங்கமம் முதலானவை. இந்த புண்ய க்ஷேத்திரங்களாகும்.

अध्यायः- 9 सुमन्तुः-

सह्यपार्श्वे तु कावेर्यां स्नानान्मोक्षमवाप्नुयात् ।
गौरीमायूरसंज्ञं च दर्शनाद्भुक्तिमुक्तिदम् ।
कावेर्यांतत्रये स्नात्वादत्वा धान्यधनादिकम् ।
दृष्ट्वामायूरनाथाख्यं स्तुत्वा संपूज्यभक्तितः ।
ते पुनश्शिवसायुज्यं प्राप्नुवन्ति न संशयः ।
श्वेतारण्यं महाक्षेत्रं छायावनमतः परम् ।
कावेरीसंगमंदिव्यं तुलामासे विशिष्यते ॥

**அத்தியாயம் 10** சுமந்து தேவவர்மா என்ற அரசனுக்குச் சொல்லுகிறார்:- கங்கை, யமுனை, காவேரி, நர்மதா முதலிய புண்ணிய நதிகள் கன்னிகைகளாக இருந்து கங்கைக் கரையிலிருந்து விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது நாரத முனிவர் அவர்களுக்கு வணக்கம் தெரிவித்தார். இந்த வணக்கம் யாருக்கு உரியது என்று கங்கையும் காவேரியும் வாதாடினார்கள். கங்கை தன் பெருமையைச் சொல்கிறாள். விஷ்ணு பாதத்தில் உற்பத்தியாகி, சிவபெருமானின் முடி மீது அமர்ந்து காசி பிரயாகை க்ஷேத்திரங்கள் கரையில் வீற்றிருத்தல் முதலானவற்றைக் கூறினாள். காவேரி தான் பிரும்மாவின் மானஸபுத்திரி பிரும்மாவுக்கு சமமான அகஸ்தியரின் மனைவி, தன் மடியில் ஸ்ரீரங்கநாதர் பள்ளி

கொண்டுள்ளார் என்ற புகழைச் சொன்னுள். இவ்விதம் வாதாடும் புண்ணிய நதிகள் பிரும்மாவிடம் சென்று தீர்ப்புக் கோர, பிரும்மா கங்கையைப்பார்த்து, ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியே தன் பிரம்மஹத்தி தோஷத்தை காவேரி ஸ்நானமூலமாய் போக்கிக்கொண்டார் என்ற விஷயத்தைச்சொல்லி காவேரியைத் தவிர மற்ற எல்லா புண்ணிய நதிகளைக்காட்டிலும் கங்கை உயர்ந்தவள், என்று தீர்ப்புக் கூறினுர்.

अध्यायः- 10 ब्रह्मा:-

गङ्गे कवेरजाभिन्ननदीनां त्वं वरामता ।
प्रमाणैर्वरदाना च महतामनुसेवया ॥

**அத்தியாயம் 11** ஸுமந்து துலாமாதத்தில் ஏகாதசி, துவாதசி, புண்ய காலங்களில் ஸ்நானம் செய்வதினுல் ஏற்படும் மகிமையைக் கதைமூலம் குறிப்பிடுகிருர்: துலா ஸ்நானத்தை நியமங்களுடன் செய்து வந்த அனவத்யா ஒரு சமயம், ஒரு கீரிப்பிள்ளை பாம்பைப்பிடித்து ஹிம்ஸிப்பதைப் பார்த்தாள். பாம்பு அந்த பரிசுத்தமான ஸ்திரீயைக் கண்டதும், பூர்வஜன்ம ஞானம் உண்டாகி, தான் இந்திராணியேயென்றும், தன்னுடைய தவறிய காதலை அர்ஜுனனிடம் சொல்லியதால் இந்திரனுல் ஸர்ப்பமாய் சபிக்கப்பட்டதையும் ,அனவத்யாவின் தர்சன மாத்திரத்தில் சகல பாபங்களும் நீங்கி விட்டதாயும் கூறிற்று. அனவத்யா தன்னுடைய ஒரு ஏகாதசிப் பலனைக் கொடுத்த மாத்திரத்தில் சாபம் நீங்கி பெண் உருவம் கொண்டு இந்திராணி பட்டத்தைப் பெற்ருள்.

अध्यायः- 11 सुमन्तुः-

तस्मादेकादशी पुण्या तुलामासे महत्तमा ।
चतुर्विंशैकादशीनां फलदा समुपोषिता ॥

**அத்தியாயம் 12 13** விந்திய மார்க்கத்திலிருந்த ஒரு வேதாளம் ஒன்பது பரமஹம்ஸாளைத் தரிசித்து, அவர்

என்றும், அகங்காரத்தினுல், பிரம்மராக்ஷஸாயும், பின்னர் வேதாளமாயும், திரிவதாகச் சொல்லி அனுதாபம் கோரியது. கருணை கொண்ட மஹான்களின் உபதேசத்தால் இந்த வேதாளம் துலாஸ்நானம் செய்து உத்தமமான ஜன்மத்தை அடைந்தது. யமனுடைய உபதேசத்தைக் கேட்டு வியதிபாத புண்ய காலத்தில் விதிப்படி ஸ்நானம் செய்த பாஸ்கரன் என்ற பிராம்மணன் உத்தம கதியை அடைந்தான்.

अध्याय- 12 सुमन्तुः-

वेतालोऽपि तुलास्नानाद्विपापस्त्यक्तदेहकः ।
पुनर्जातो विप्रयोन्यां तुलास्नानाद्दिवंगतः ॥

अध्यायः- 13 सुमन्तुः-

तुलां गतेदिवानाथे व्यतीपातोऽधिको मतः ।
सद्वादशव्यतीपातसमं पुण्यविवर्धनम् ॥

भास्करोऽपि वचः श्रुत्वा धर्मराजेरितं पुनः ।
विशेषेण व्यतीपाते स्नानं दानं करोति सः ॥

तेनैव पुत्रान् संप्राप्य भुक्त्वा भोगान् सभार्यकः ।
यमेन पूजितश्चायं स्वर्गलोकं जगाम सः ॥

**அத்தியாயம் 14 15** வஸிஷ்ட முனிவர் இராமனுக்கு, ஸுர்தசன் என்ற பிராம்மணன் கெட்ட நடத்தைகளினுல் ப்ரம்மண்யத்தை இழந்து எதேச்சையாய் துலாகாவேரி ஸ்நானத்தை மாயூர க்ஷேத்திரத்தில் செய்த மாத்திரத்தில், சகல பாபங்களும் நீங்கி கைலாசம் அடைந்தான், என்ற கதையைச் சொன்னுர். இராமன் எவ்வளவு யாகங்களைச் செய்தும் ப்ரம்மஹத்திதோஷம் முழுமையும் நீங்கப்பெருத வராய் துலாகாவேரி ஸ்நான விசேஷத்தால் எல்லாப் பாபமும் நீங்கப்பெற்ருர். விசுவாமித்திரரால் கொடுக்கப் பட்ட சாபத்தால் கல்ருபத்தை தாங்கிய ரம்பை காவேரி ஜலத்தின் மகிமையால் திவ்ய ருபத்தை அடைந்தாள்.

अध्याय:- 15 सुमन्तु-

प्रायश्चित्तं तु कावेर्यां स्नानमेव महत् स्मृतम् ।
न दूर्वा नतिला: दर्भा: नाक्षता नच मृत्तिका ।
कावेर्यां मौसलं स्नानं कृच्छ्राशीतिफलप्रदम् ॥

काकार: कलुषंहन्ति वेकारो वाञ्छितप्रद: ।
रीकारो मोक्षदो नृणां कावेरीत्यवधारय ॥

**அத்தியாயம் 16** அவந்தி நகரவாசியான கௌசிகர் யாகம் செய்ததைக் கண்டு சினமுற்ற அசுரர் இவரையும் அவர் மனைவி ஓகவதியாரையும் கொன்று, அவர்களுடைய புத்திரனை சமுத்திரத்தில் எறிந்து விட்டார்கள். குழந்தை செம்படவர்களின் மூலமாய் விசுவகுப்தன் என்ற வைச்யரிடம் சேர்ந்து, விஷ்ணுகுப்தர் என்ற பெயருடன் விளங்கியது. ரோமசர் என்ற முனிவர் மூலமாய் தன்னுடைய விருத்தாந்தங்களை அறிந்து, பெற்றோர்களைத் தரிசிக்க எண்ணியது. துலாகாவேரி ஸ்நானம் செய்த மாத்திரத்தில் இஷ்ட சக்திபெற்று பெற்றோர்களைத் தர்சனம் செய்தது.

**அத்தியாயம் 17** அகஸ்தியர் சிவத்வேஷத்தினால் பைசாசரூபத்தையடைந்திருந்த அங்கதேசத்து அரசன் விசாலன் என்பவனுக்கு ஒரு கந்தர்வ பெண் காமாந்தகாரத்தில் மூழ்கி "மித்ரா" என்னும் பிரம்மச்சாரிணியை ஆலிங்கனம் செய்ய வந்தபொழுது, பைசாசரூபமடையும்படிச் சபிக்கப்பட்டாளென்றும் பிறகு துலாகாவேரி ஸ்நானத்தினால் விமோசனம் அடைந்தாள் என்றும் வரலாற்றைச் சொன்னார். பிசாசரூபியான அரசனையும் அகஸ்தியர் இம்மாதிரியே ஸ்நானம் செய்யும்படி ஆக்ஞாபித்தார். அரசனும் அப்படியே செய்து நற்கதியடைந்தான்.

**அத்தியாயம் 18** ஸபத் ரிஷிகளின் சாபத்தினால் யானை உருவம் பெற்று வாழ்ந்து வந்த மஹாசாந்தா என்பவர் நாரதர் உபதேசத்தால் மாயூரத்தில் துலாகாவேரி ஸ்நானம் செய்து முக்தியடைந்தார். இவ்விதமே திலீபன் என்ற

அரசனிடம் இருந்த இரு குதிரைகளும் துலாஸ்நானத்தினால் பாபம் நீங்கி திவ்யரூபம் பெற்றன.

अध्यायः- 18 सुमन्तुः-

सह्यपादोद्भवा काचित् कावेरीति महानदी।
तस्यां मायूरयुक्तायां तुलामासे निमज्जनात्।
त्यक्त्वा गजतनुं त्वं तु भूसुरत्वं गमिष्यसि ॥

इत्थं प्रबोधितो नागो नारदेन महात्मना।
स्नात्वा कवेरकन्यायां त्यक्त्वा गजतनुं क्षणात्।
ब्राह्मण्यं दुर्लभं प्राप्य कावेरीस्नानवैभवात्।
तत्रभुक्त्वा बहून् भोगान् मुक्तिमाप सुदुर्लभाम् ॥

**அத்தியாயம் 19** மாஹிஷ்மதி நகர அரசனை ஸிம் மதுவஜன் ஒரு சமயம் வேட்டையாடித் திரும்புகையில் பாரத்வாஜ மகரிஷி தியானத்தில் அமர்ந்திருக்கும் பொழுது உதைக்க, அவர் அவனைக் கழுதையாகப் பிறக்குமாறு சாபம் கொடுத்தார். பிராம்மணர்களைக் கொள்ளையடித்த ஒரு வேடன் மறு பிறவியில் கழுகாகப் பிறந்து கஷ்டப் பட்டான். கழுதையும் கழுகும் யதேச்சையாக மாயூரத்தில் சந்திக்க பூர்வஜன்மவாசனையை அடைந்து துக்கப்படுக் கொண்டிருந்தன. அப்பொழுது மாயூரத்தில் துலாகாவேரி ஸ்நானம் செய்தமாத்திரத்தில் சகல பாபங்களும் நீங்கும் என்ற அசரீரிவாக்கு எழுந்தது. சாபந்தாங்கிய அரசனும் வேடனும் அப்படியே செய்ய திவ்யரூபங்களைப் பெற்றனர்.

अध्यायः- 19 अशरीरी

अत्रैवास्मिन् तुलामासे कावेर्यामुदये रवेः।
स्नात्वा पञ्चदिनान्याशु त्यक्त्वैतज्जन्मदुष्कृतम् ॥

भूयो मनुष्यतां प्राप्य ब्राह्मणानां कुले शुभे।
ज्ञाततौलिप्रभावौ च स्नात्वा कावेरिपाथसि।

पुत्रमित्रकलत्रैश्च भुक्त्वा भोगाननुत्तमान् ।
देहान्ते शम्भुसालोक्यं लब्ध्वा मुक्तौभविष्यथः ।

**அத்தியாயம் 20** அகஸ்தியரால் சபிக்கப்பட்ட நஹுஷன் ஸர்ப்பரூபமாய் வெகுகாலமாய் பூலோகத்தில் கஷ்டப்பட்டு கடைசியில் துலாஸ்நான விசேஷத்தால் நல்லகதி அடைந்தான். கொடுப்பதாய்ச் செல்லி பின்னர் கொடுக்க மறுத்த ஒருவர் குரங்காயும், பிறருக்குரிய பழங்களைத் திருடியதற்காக ஒருவர் நரியாயும் ஜன்மங்கள் எடுத்தார்கள். கசியபரின் உபதேசத்தில் துலாகாவேரி ஸ்நானம் செய்ததால் உத்தமகதியை அடைந்தார்கள்.

अध्याय:- 20

मायूरे पुण्यकावेर्यां तुलामासे त्विनोदये ।
स्नात्वा सर्पवपुस्त्यक्त्वा दिव्यदेहो भविष्यसि ॥
इत्युक्त्व तं महासर्पं पादाङ्गुष्टेन लीलया ।
चिक्षेप चिन्तयानं तं कावेर्यां तौलिभास्करे ॥
तस्मिन्नेव क्षणे सार्पं वपुस्त्यक्त्वाऽतिभीषणम् ।
दिव्यदेहं समाश्रित्य स्वर्गलोकमथारुहत् ॥

**அத்தியாயம் 21** ஒரு ரிஷிபுத்திரன் கங்காஸ்நானத்தை விட காவேரி ஸ்நானம் மிகவும் புண்ணியமானது என்ற விஷயத்தை யமனிடமிருந்து அறிந்து வருகிறான்.

अध्याय:- 21 पुत्र:-

तुलास्नानं परित्यज्य गङ्गास्नानेन किं फलम् ।
तुलास्नानं तुमेकार्यं नान्यत्किंचिन्मुनीश्वर ॥

**அத்தியாயம் 22-23** வியாஸர், ப்ருகு, வஸிஷ்டர், வாமதேவர், க்ருது, கௌதமர், கர்கர், வால்மீகி, அத்ரி, ஸநகர், ஸனந்தனர், ஸநாதனர், ஸனத்குமார் முதலிய ரிஷிகள் துலாமாதத்தில் மாயூரக்ஷேத்திரத்தில், காவேரியின் மகிமைகளையும், யாத்ராவிதிகளையும், ஸ்ரீ நாரத பகவானுக்குச் சொல்லுகின்றனர்.

अध्याय:- 22 वसिष्ठ:-

हेमभारसहस्राणि कुरुक्षेत्रे ददाति यः ।
तत्फलं समवाप्नोति तुलाकावेरिमज्जनात् ॥

गौतमः—

धर्ममर्थं च कामं च मोक्षं च मुनिपुंगव ।
ददाति वाञ्छितान्कामान् तुलाकावेरिमज्जनम् ॥

अध्याय:- 23 सुमन्तु:-

कावेर्यां च तुलामासे स्नातव्यमुदिते रवौ ।
देवर्षिपितृतृप्तिं च कुर्यादन्यच्च कर्मवै ॥
सेवेताथ महद्दिवगौरीमायूरनायकौ ।
प्रार्थयेदिष्टजालानि भोगमोक्षप्रदं शिवम् ॥

**அத்தியாயம் 24** *காவேரிதவிர, மற்றெல்லாபுண்ணிய நதிகளும், தங்கள் சக்திகளை அகஸ்தியரின் மூலம் இழந்துவிட்டபடியால் பரமசிவனை வேண்ட, அவர் அவர்களைத் துலா மாதத்தில், கௌரிமாயூர க்ஷேத்திரத்தில் ரிஷப கட்டத்தில் ஸ்நானம் செய்வதால், இழந்த சக்திகளைப் பெறுவீர்கள் என்று அனுக்கிரஹித்தல்.*

अध्याय :- 24

तुलायुक्ते रवौ तस्मिन् अमायां मध्यगे रवौ ।
स्नानं भवद्भिः कर्तव्यं स्वस्वपापविमुक्तये ॥
श्रुत्वा शिवमुखात्सर्वं तुलाकावेरिवैभवम् ।
मायूरे सह्यजां प्राप्य सस्नुर्गङ्गापुरोगमाः ॥
तासां रूपाणि वस्त्राणि भूषणानि मनांसि च ।
निर्मलान्यभवन् सद्यः कावेर्यां स्नानमागतः ॥

**அத்தியாயம் 25** *ஒரு பெண் சங்கீத ஞானம் பெற்று, ஞானத்தை விக்ரயம் செய்து ஜீவனம் நடத்தினாள். அவள்*

ஒரு தானமும் செய்யாமல் இருந்ததால் பைசாச ரூபமாய் அலைந்து, யாத்திரிகளான இரண்டு முனிவர்களை எதிர்க்க. அவர்கள் அவளது சாபத்தின் வரலாற்றை அறிந்தவர்களாய் துலாகாவேரி ஸ்நானத்தினால் பைசாச ரூபம் நீங்கும் என்று அறிவிக்க, அவளும் அப்படியே செய்து திவ்யரூபம் அடைந்தாள்.

अध्याय:- 25

काबेरी नामदिव्याऽस्ति नदी पापप्रणाशिनी ।
तस्यां तुलागतेभानौ स्नानान्मुक्ता भविष्यसि ॥
दर्शस्नानं तुलामासे वृषतीर्थेविधाय च ।
पापं विहाय तत्तीर्थप्रभावेन नरोत्तम ॥
दिव्यदेहमनुपाप्य स्वर्गलोकं जगाम ह ।

**அத்தியாயம் 26** முன் காலத்தில் பூமிதேவியின் புத்திரனான நரகன் என்னும் அசுரன் ப்ரும்மாவைக்குறித்து தவம் செய்து வரங்களைப் பெற்று தேவர்களை ஹிம்ஸித்து வந்தான். தேவர்கள் அவனுடைய ஹிம்ஸையைப்பொறுக்காது கிருஷ்ணனிடம் முறையிட, கிருஷ்ணன் கருடாரூடராய் கிளம்பி, அவனைக் கொன்றார். உடனே கிருஷ்ணனை வீரஹத்யா தோஷம் பிடித்துக்கொண்டது உடனே கிருஷ்ணன் கைலாசம் சென்று பரமேசுவரரை தரிசித்து தோஷ நிவர்த்திக்கு உபாயத்தைப் ப்ரார்த்தித்தார். பரமேச்வரர் தேவர்களுடன் காவேரி தீரமடைந்து கிருஷ்ணனுக்கு அதைக்காண்பித்து காவேரியில் துலா மாஸத்தில் கிருஷ்ணசதுர்தசியில் ஸ்நானம் செய்வதனால் உன்னுடைய வீரஹத்யா தோஷம் நிவர்த்தியடையும் என்று அனுக்ரஹித்தார், கிருஷ்ணனும் அவ்விதமே ஸ்நானம் செய்ய, தோஷம் விலகியது. இவ்வாச்சர்யத்தைப் பார்த்த சகல தேவர்களும் அங்கு ஸ்நானம் செய்தார்கள். அப்பொழுது புத்திரனை இழந்த பூமாதேவி தேவர்களை வணங்கி "என் புத்திரன் நரகன் மரணமடைந்த திதி" நரகசதுர்த்தசி "என்று பிரஸித்தி ஏற்படவேண்டும்"

என்றாள். தேவர்களும் "அப்படியே ஆகட்டும் மேலும் அத்திதியில் உன் புத்திரன் கொல்லப்பட்ட வேளையில் (விடியற்காலையில்) எவர்கள் எண்ணெய் தேய்த்துக்கொண்டு உஷ்ணோதகத்தில் ஸ்நானம் செய்வார்களோ அவர்களுக்கு நரகங்கள், அபம்ருத்யு, ரோகங்கள் இவைகளிலிருந்து பயமில்லை. மேலும் அத்திதியில் புண்ணியமான காவேரி நதியில் ஸ்நானம் செய்து சக்திக்குத்தகுந்தபடி பசு, பூமி, ஸுவர்ணம் நெய், கிரஹம் முதலியவைகளைத் தானம் செய்பவர்களுக்கு ஸகல பாபங்களும் நிவர்த்தியாகி, எல்லா வித போகங்களும் ஏற்படும்" என்று அனுக்கிரகித்து தன் தன் ஸ்தானங்களுக்குச் சென்றனர்.

अध्याय:- 26 महादेव:-

अस्यां कृष्णचतुर्दश्यां सह्यजायां तुलारवौ ।
स्नानात्ते वीरहत्यातु विनशिष्यत्यसंशय: ॥
तच्छ्रुत्वा भगवान् कृष्ण: सस्नौ सह्योद्भवाम्भसि ।
तस्मिन्नेव क्षणेचापि वीरहत्यालयं ययौ ॥

देवा:-

एषा तिथिर्नरकचतुर्दशीति रूयाता भवेत्सर्वमलापहारिणी ।
अस्यां तिथौ त्वत्सुतमृत्युकाले त्वभ्यज्य ये स्नान्त्यरुणोदये नरा: ॥
तेषां नहि स्यात् नरकाच्चभीति: तथाऽपमृत्योरपि रोगपुंजात् ॥
आश्वयुक्कृष्णपक्षस्य चतुर्दश्यामिनोदये ।
स्नानमभ्यज्यकर्तव्यं नरैर्नरकभीरुभि: ॥

**அத்தியாயம் 27** பிரும்மா ஒரு சமயம் ஊர்வசியைக் காதலிக்க பரமசிவனால் சபிக்கப்பட்டு பூலோகத்தில் வாழ்ந்து, பரமசிவனைக் குறித்து தபஸ் செய்தார். பரம சிவனும் கருணை கூர்ந்து அவரைப்பல புண்ணிய தீர்த்தங் களுக்குப்போய். ஸ்நானம் செய்து வரும் படிக்கும், எந்த தீர்த்தக்கரையில் அவர் கொடுக்கும் பிண்டதானத்தைப் பிதுர்க்கள் நேரில் வந்து பெற்றுக்கொள்கிறார்களோ, அப்

பொழுது சாபவிமோசனம் ஏற்படும் என்றும் தெரிவித்தார். சாபத்தினால் மானிடரூபம் கொண்ட பிரம்மனும் பல தீர்த்தங்களில் நீராடிக் கடைசியில் மாயூரக்ஷேத்திரத்தில் ரிஷப தீர்த்தக்கரையில் காவேரியில் ஸ்நானஞ்செய்து பிண்டதானம் செய்தார். பிதுர்க்கள் நேரில் வந்து பெற்றுக் கொண்டார்கள். பிரம்மனும் அங்கு விசேஷதானங்களைச் செய்து தன் லோகத்தை அடைந்தார்.

अध्याय:- 27 ब्रह्मा:-

एवं गिरीशेन समीरितोऽहं गौरीमयूरीवनमाशुगत्वा ।
स्नात्वा तुलार्केऽत्रवृषेन्द्रतीर्थे सन्तर्प्य देवान् स्वपितॄन् ऋषींश्च ।
कृतं मया क्षेत्रवरेऽत्रपिण्डं श्राद्धं तदाऽस्मत्पितरोऽक्षिगोचराः ॥

**அத்தியாயம் 28** பர்வதங்களில் மேருவும், தேஜஸுக்குள் சூர்யனும் ஜபங்களுக்குள் காயத்ரியும், ரஸங்களுக்குள் அமிருதமும், ஆசிரமங்களுக்குள் கிரகஸ்தாசிரமமும் எப்படி உயர்ந்தவையோ அவ்விதமே, தீர்த்தங்களுக்குள் மாயூரமும், புண்யங்களுக்குள் துலா காவேரி ஸ்நானமும் உயர்ந்தவையாகும் என்று சொல்லப்படுகிறது. துலா காவேரி ஸ்நான காலங்களில் செய்யப்படவேண்டிய, தான விசேஷங்களும் சொல்லப்பட்டு இருக்கின்றன.

अध्याय:- 28

पर्वतानां यथामेरुः तेजसां च रविर्यथा ।
जप्यानांमिव गायत्रीरसानांममृतं यथा ॥
नक्षत्राणां यथैवेन्दुः नदीनां सप्तजा यथा ।
मन्त्राणां च यथातारः आश्रमाणां यथागृही ॥
यथैव पुण्यक्षेत्राणां मायूरमधिकं स्मृतम् ।
तथैवसर्वपुण्यानां तुलास्नानं विशिष्यते ॥
तुलास्नानमहावह्निः नियमानिलचोदितः ।
प्रदहत्याशुसर्वं च शुष्कार्द्रं कलुषेन्धनम् ॥

**அத்தியாயம் 29** மாயூரத்தில் துலாமாதத்தில் காவேரி ஸ்நானம் பல்வேறு திரவ்யங்களின் தானம் இவைகளின் பலன் என்னவென்பதையும் இதில் சொல்லியிருக்கிறது.

अध्याय:- 29 ब्रह्मा:-

सकृन्मरुद्वृधास्नानान्मायूरे वृषतीर्थके ।
क्रतुकोटिसमं पुण्यमित्याह भगवान् शिवः ॥
तत्रान्नदाता बलभित्समीपगी जित्वा यमं तत्रविराजतेऽङ्ग ।
हेमाश्वदाता धनदस्य लोके वस्त्रस्य दातावरुणस्य लोके ॥

**அத்தியாயம் 30** ஒரு அரசன் குற்றமில்லாத பத்மநாபன் என்பவரைத் தண்டித்ததால், பிரும்மஹத்தி தோஷத்தை அடைந்து ஜாபாலிமுனிவரின் உபதேசத்தினல் மாயூரக்ஷேத்திரத்தில் துலா மாதத்தில் காவேரியில் ஸ்நானம் செய்து விமோசனமடைந்தான்.

**அத்தியாயம் 31** ஸ்ரீராமன் செய்த அசுவமேதயாக தரிசனத்திற்கு வந்திருந்த முனிவர்களில் ரோமசர் என்பவர் அஷ்டாவக்ரர் என்ற முனிவரை நமஸ்கரித்தார். உடனே அஷ்டாவக்ரர் சொன்னதாவது :-

நூறு கல்பமாக விளங்கும் தாங்கள் அதில் பாதி ஆயுளுள்ள என்னை வணங்குவது எவ்விதம் பொருந்தும் என்று வினவினுர். அதற்கு ரோமசர் இவ்விதம் பதிலளித்தார். மகான்கள் ஆயுளைக் கணக்கிடும்பொழுது, மாயூரத்தில் துலா மாதத்தில் காவேரியில் ஸ்நானம் செய்த வருஷங்களைத்தான் சேர்த்துக்கொள்வதாயும், அவ்விதம் கவனிக்கும் போது அஷ்டாவக்ரர் பிரதி வருஷமும் துலா ஸ்நானம் செய்வதனுல் தன்னைவிட மூத்தவர் என்றும் பதிலளித்தார்.

आयुषो गण्यन्त्येवं येऽत्रसंस्थिताः ।
तुलास्नानोपपन्नानि वर्षानिसफलानितु ।
योज्यान्यायूंषि मर्त्यानां नान्यानिवितथानितु ॥

# காவேரியின் உற்பத்திச் சுருக்கம்



கிருஷ்ணராஜ சாகர் என்னும் அணையில் அமைத்துள்ள ஸ்ரீ காவேரி அம்மன்

கவேரன் என்றோர் ராஜரிஷி இருந்தார். யோகிகளில் சிறந்தவர். மோக்ஷம்பெற இமயமலையில் கடுந்தவம் புரிந்தார். பிரும்மா அவர் எதிரில் தோன்றி, "முக்தியளிக்க விஷ்ணுதான் வல்லவர்; அவரது உத்தரவுப்படி விஷ்ணுமாயா என்பவள் எனது புத்ரியாய் அவதரித்தாள்; அவள் உனக்கும் புத்ரியாகத் தோன்றி மோக்ஷம் அளிப்பாள்" எனக் கூறினர். விஷ்ணுமாயை கவேர ராஜனுக்கு அழகிய பெண்ணாகத் தோன்றினாள். அது முதல் ரசனும் சித்தசுத்தி அடைந்து முக்தி அடையும் நிலையை ய்தினர்.

ஸச்சிதானந்த ரூபிணியான காவேரி சிறிதளவு ஜலரூபிணி யாகி, பிரும்மா சொன்னபடியே லோபாமுத்ரை என்ற கன்யகை யாகவும் ஆகித் தனது புண்யதீர்த்தத்தில் தானும் ஸ்நானம் செய்து மௌனியாகத் தவம்புரிந்தாள். மஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷ மாகிக் கீழ்க்கண்ட வரத்தைக் கருணையுடன் கொடுத்தார். "குழந்தாய்! நீ கேட்டுக் கொண்டபடியே மிகவும் பாவனமான நதி ரூபமாய் பிரவஹிக்கலாம். ஸஹ்ய மலையில் திவ்யமான நெல்லி மரமாக யான் தோன்றுவேன். பிரும்மா விரஜா நதியின் புண்ய தீர்த்தத்தை ஶங்கத்திலேந்தி எனக்கு அபிஷேகம் செய்யும் பொழுது நீ அந்தத் தீர்த்தத்துடன் பூர்ண பிரவாஹமாகக் கிளம்பி தக்ஷிண கங்கை என்ற பெயருடன் தென்திக்கில் செல் வாயாக. தென்னாட்டில் உனது நீரைத் தரிசித்தவர் ஸ்வர்க்கம் செல்வார்கள். மக்களின் ஸகல பாபங்களும் நசித்துவிடும். உலகத்தில் அத்யந்த துர்லபமான கங்கையைவிடச் சிறந்த பெருமையை உனக்கு அளிக்கிறேன். மஹாநதிகள் எல்லாம் உன்னைக் கொண்டாடும். எனது பாத ஸம்பந்தத்தால் நீ அதிபவித்ரமாவாய். எனது பாத ஸம்பந்தத்தால்தான் கங்கை சிறந்தவள். நான் உனது மடியில் ஶ்ரீரங்கத்தில் ஶயனம் செய்யப் போகிறேன். ஆதலால் கங்கையைவிட நீ சிறந்தவளாவாய். நான் உன் தலையிலும், மடியிலும் இருப்பதால் புண்ய தீர்த்தங்கள் எல்லாவற்றையும்விட நீ அதிகம் பவித்ரமாவாய். கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களிலும் நான்கு யுகம் ஸ்னானம் செய்வதால் உண்டாகும் புண்யம், ஸஹ்ய மலையில் நெல்லி மரத்தடியில் உனது ஜலத்தில் ஸ்நானம் செய்வதால் உண்டாகும் புண்யத்தில் பதினா றில் ஒரு கலைக்கு ஈடாகாது. உனது தீர்த்தத்திற்கு ஸஹ்யாமலக தீர்த்தம், ஶங்கதீர்த்தம் என இரு பெயர்கள் உண்டாகும். எனது அம்சத்தால் உண்டான அகஸ்திய முனிவர் தவம் புரியும் உனது தீர்த்தத்தை ஸ்தாலியில் எடுத்து ஸஹ்ய மலையில் கொண்டு விடுவார். லோபாமுத்ரை என்ற பெயருடன் நீ அவருக்குப் பத்னியாகவும் ஆவாய்," என்று கூறி மறைந்தார்.

மேற்கூறிய வரத்தின்படியே அகஸ்திய முனிவர் காவேரி தேவியை அணுகினார். காவேரி தேவி கீழ்க்கண்ட வரம்கேட்டு அதை அளித்தால் லோபாமுத்ரை என்ற பெயருடன் அவரை மணப்பதாய்க் கூறினாள். அவள் கேட்ட வரம் இதுதான்: "நான் லோகாநுக்ரஹத்திற்காகக் காவேரி என்னும் நதியாகித் தென்திசைக்குச் செல்வேன். பதினான்கு லோகங்களிலுமுள்ள புண்யதீர்த்தங்கள் நதிரூபமாய் என்னிடம் வந்து சேரவேண்டும்.

என் கரையில் உள்ள பூமி ஸத்யம் நிறைந்து செழிப்பாக வேண்டும். எல்லோரும் தனம் தான்யமுள்ளவர்களாயும், என்னை ஒருமுறை தியானம் செய்தாலும், எனது ஜலத்தை அருந்தினலும், காவேரி என்று ஒரு தடவை சொன்னலும், தரிசித்தாலும் பாபிகள்கூட பாபமகன்று ஸ்வர்க்கம் செல்லட்டும்" என்றாள். அகஸ்தியரும் அப்படியே ஆகுக என்றார்.

காவேரி ஓரம்சத்தால் காவேரி தீர்த்தமாக மாறிக் கங்கை முதலான புண்ய தீர்த்தங்கள் அடங்கியுள்ள கமண்டலுவில் பிரவேசித்தாள். அகஸ்தியர் தன் கமண்டலுவுடன் ஸஹ்ய மலைக்குச் சென்றார். அங்கிருந்து காவேரி தேவி நதி ரூபமாய் பிரவஹித்தாள். மற்றோர் அம்சமான லோபாமுத்ரையுடன் மும்மூர்த்திகள், தம்பதிகள் ஏனைய தேவர்களின் முன்னிலையில் அகஸ்தியரின் திருமணம் குதூகலமாய் நிறைவேறியது. முடிவில் ஸ்ரீகாவேரி ஸமுத்ரராஜனை மணந்தாள்—சுபமங்களம்.

பொன்னி யென்றும் பெருமையுடன் வழங்கும் தெய்வக் காவேரி பூஜிக்கத் தகுந்தவள். அவளுடைய கருணையால் பாரதத்தின் தென்பாகம் செழுமையுடன் ஸகல ஸௌபாக்யங்களையும் பெற்றுளது. அவள் தீர்த்தத்தின் மகிமையால்தான் தேஜஸ், உயர்ந்த புத்தி, முக்தி—இவைகள் மக்களுக்கு எளிதில் கிட்டுகின்றன. நாம் அவளை பூஜித்து, வந்தன வழிபாடுகள் செய்வோமாக.

இந்நூலின் பின் அத்யாயங்களில் முறையே இலக்கியங்கள் பாமாலை சூட்டுவதையும், மஹான்கள் காவேரி தீர்த்தக் கரைகளில் பிறந்தும், வாஸம் செய்தும், அறநெறி மார்க்கத்தைப் பரவச் செய்தார்கள் என்பதையும், அருள், பொருள் செல்வங்கள் காவேரியின் மகத்துவத்தால் மக்களைத் தேடி அடைகின்றன என்பதையும், காவேரியின் தீரங்களில் வரிசைக்கிரமமாய் அமைந்துள்ள க்ஷேத்திரங்களின் பெருமைகளையும் தனித்தனியே சுருக்கமாய் வரையப்பட்டுள்ளன.

ஸ்ரீ காவேரியின் பூஜாவிதிகளும், அஷ்டோத்திர நாமார்ச்சனையும் கடைசிப் பக்கங்களில் சேர்க்கப்பட்டுள்ளன.

ஸ்ரீ காவேரியின் மகத்துவத்தையும், மக்களின் பக்தியையும் விளக்கிக் காட்டியுள்ள மகான்களின் ஸ்தோத்திரங்களில் சில வற்றை இங்குப் பக்தர்களுக்கு அனுக்ரஹ பூர்வமாக இணைத்துள்ளோம்.

श्रीगुरुभ्योनमः

श्रीः

अथ सह्यजानवरत्नमालिका

यत्पाथःकणवाहि मारुतलव स्पृष्टेषु दुष्टेष्वपि
प्रध्वंसंप्रबलैनसां विदुरिह प्राज्ञाभवाज्ञाजुषः
सिष्णासां त्वयिबिभ्रतो ममचिरात् कृष्णाधिके सह्यजे
निष्णातासि न किं विगाहनकृतः पङ्कौघसंक्षालने ॥

कावेरित्वत्कवारि प्रवहति सरितां सार्वभौमीहभूमौ
यत्रायंपुण्यदेशः सतुकिमुत वृषाकप्यभीष्टस्थलंचेत्
काश्या तुल्यानि यानित्वगणिषत षडप्यार्षगीषुस्थलानि
श्वेतारण्यं च तेष्वादिममिहवसतां कोयमस्तस्यकेऽमी ॥

कावेरि त्वद्वारि पूरोदरेऽस्मिन्
स्नायं स्नायं धूतपापोऽस्ततापः
आसंजीर्णः पूर्णकामस्तदित्थं
विज्ञाप्यस्ते वल्लभ सिन्धुराजः ॥

राज्ञःसेवादुष्करासर्वनॄणां
कान्तोभीमैर्भीमरूपस्स यस्मात्
प्राप्तायेतद्वल्लभायाः प्रसादं
सिद्धंसर्वाभीष्टमेषां ह्ययत्नात् ॥

महारावारवारौघैः भीषणैः श्रोत्रभीतिदैः ।
कथन्नुमादृशां शक्यो राजापामुपसेवितुम् ॥

अम्भोनिधेरनुगुणं भवतीकलत्रं
लोकान् विलोकनत एव युवां पुनीथः ।
पानावगाहन मुखोपकृति प्रकर्षात्
देवित्वमेनमतिशय्य विभासिमातः ॥

कालं पतीक्ष्यैव स जातु सेव्यः
त्वत्तोऽधिकंकिन्नु फलंददाति ।
तस्मान्नदीराजमहिष्यलंमे
त्वत्संश्रयो यत्फलमम्बसूते ॥ 7

असह्यपापवारिणि त्वदीयपुण्यवारिणि
क्वसह्यजे निमज्जतामघौघ साध्वसंनृणाम् ।
विधूतपातका हि ते विनैवकृच्छ्रजश्रमं
प्रयान्ति शम्भुमन्दिरं प्रकृष्टपुण्यभासुराः ॥ 8

सह्याद्रेःपितुरन्तिकात् पतिगृहं गन्तुंप्रवृत्तासती
कावेरी कृतचोलमण्डल परिष्काराभ्युदञ्चद्रसा ।
स्वर्णस्तोमयुता सती प्रियतमं संन्तोष्यरत्नाकरं
श्वेतारण्यपतेः प्रसादमयते द्वेधास्थिता पार्श्वयोः ॥ 9

कावेरि त्वत्स्तोत्रमेतत् पठन्ति
श्रद्धाशुद्धा भक्तियुक्ता भवत्याम् ।
स्नातापुंसां वारिपूरेत्वदीये
यावत्पुण्यं तावदेते लभन्ताम् ॥ 10

सह्यजास्तवन रत्नमालिका
त्यागराजमखिनो मुखोद्गता ।
गृह्यतां परगुणैकशंसिभिः
शङ्कराङ्घ्रि कमले समर्पिता ॥ 11

कदावा कावेरि त्वयि वृषभतीर्थेऽच्छसलिले
तुलामासे दर्शेसति गगनमध्येसवितरि ।
समस्ताभिर्गङ्गा प्रभृतितटिनीभिस्समुदिते
विगाहिष्ये विप्रैर्निगमनिरतैः पूरिततटे ॥ 12

इति त्यागराजमखिवर्यकृतिषु
कावेरीनवरत्न मालिकास्तोत्रं संपूर्णम् ॥

உ

श्रीगुरुभ्योनमः

"ஸஹ்யஜா நவரத்னமாலிகா" என்ற ஸ்தோத்ரம், தஞ்சை ஜில்லா ராஜமன்னார்குடி மகாமகோபாத்யாய பிரும்ம ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் என்ற பெயருடன் விளங்கிய தியாகராஜமகி யெனும் மகானால் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அம்மகான் ஸ்ரீ காவேரியின் மகத்துவத்தைப் புகழ்ந்துள்ளார். ஸம்ஸ்கிருதம் தெரியாத பக்தர்களின் தியானத்திற் குரிய இச் சுலோகங்களின் தாத்பர்யத்தை இங்குச் சுருக்கமாக விளங்கக் காணலாம்:

1. தேவி! தங்களது பாவனமான தீர்த்தத் திவலைகளும், அலைகள் மீது படிந்து வீசும் காற்றும், துஷ்டர்களின் பாபக் குவியலை க்ஷணத்தில் நசிக்கச் செய்கின்றன. தங்கள் தீரவாஸி யாகவிருந்து ஸ்நானம் செய்யும் மகான்களின் பாபங்கள் நசித்து விடும் என்பதில் என்ன சந்தேகம்?

2. ஸ்ரீ காவேரி! தங்களுடைய தீரத்தில் காசிக்கு ஸமான மான ஆறு க்ஷேத்ரங்கள் அமைந்துள்ளன. [சுவேதாரண்யம், பஞ்சநதம், கௌரிமாயூரம், மத்யார்ஜுனம், சாயாவனம், ஸ்ரீவாஞ்சியம்.] அவைகளில் முதன்மை ஸ்தானம் சுவேதாரண் யம். தங்கள் தீர்த்ததடங்களில் பிரும்மா, விஷ்ணு, சிவன் முதலாய தேவர்கள் சதாகாலமும் வாஸம் செய்கிறார்கள். யமன் எங்களை என்ன செய்யமுடியும்?

3. காவேரி! நான் தங்களது புண்ய தீர்த்தத்தில் அடிக்கடி ஸ்நானம் செய்ததால் பாபங்கள் நீங்கிப் பரிசுத்தனாய் இருக் கின்றேன். எனது மனோபீஷ்டங்களையும் பெற்றுள்ளேன் என்ப தைத் தங்கள் பர்த்தாவாகிய ஸமுத்ரராஜனிடம் தெரிவியுங்கள்.

4. தங்கள் பர்த்தா மிகக் கம்பீரமுள்ளவர். பார்ப்பதற்குப் பயங்கரமாய் தோற்றம் அளிக்கிறார். நான் அவரை அணுகத் துணிவு பெறவில்லை. ஆனாலும் அவர் தங்களிடம் மிகப் பிரிய மாயும், தயவாயும் இருப்பதால், தங்கள் மூலம் அவருடைய பிரஸாதத்தைச் சிரமமில்லாமல் பெற்றுவிடுவேன்.

5. தாய் தந்தையர்களாய் விளங்கும் தாங்களும், தங்கள் பர்த்தாவும் எனக்குப் பிரியமுள்ளவர்களே. ஆனாலும் நான் தங்களிடம் ஸ்நானம், பானம் என்ற பிரஸாதங்களைச் சுலபமாய் பெறுவதுபோல் அவரிடம் பெற இயலாது. என்னைப் போன்ற வர்கள் அவரிடம் உசிதமான காலத்தை எதிர்பார்த்துச் செல்ல



சுவேதாரண்யம் என்னும்
திருவெண்காடு



பஞ்சநதம் என்னும் திருவையா



கௌரி மாயூரம்



மத்யார்ஜுனம் என்னும்
திருவிடைமருதூர்



சாயாவனம்



ஸ்ரீவாஞ்சியம்

श्वेतारण्यं पञ्चनदं गौरीमायूरमर्जुनम् ।
छायावनं च श्रीवाञ्च्यं काशीक्षेत्रसमानिषट् ॥

வேண்டும். மேலும் அவருடைய பயங்கரமான ஸந்நிதானத்திற்கு நான் எப்படிச் செல்ல முடியும்?

6. குணங்களின் ஸம்பத்தில் நீங்கள் சரியான தம்பதிகள். உங்களைக் கண்ட மாத்திரத்தில் ஸகல பாபங்களும் நீங்கிவிடும். ஸ்நானம், பானம் என்ற பிரஸாதங்களில் நீங்களே தகுதியுள்ள வர்கள். தாங்களே இவ்விஷயத்தில் மேன்பாடு உடையவர்கள்.

7. ஸமயம் பார்த்து ஸேவை செய்ய நான் அவரை அண்டி னுலும் தங்களைவிட அவர் எனக்கு என்ன அதிகமான பலன்களை அளிக்கப் போகிறுர்? தாங்களே ஸமுத்ரராஜனின் பட்டமஹிஷியா யிருப்பதால் தங்கள் மூலம் பெறும் நற்பயன்களே போதுமானது.

8. கொடூரமான பாபங்களைப் போக்கி, ஏராளமான புண்ய ஸம்பத்தை அளிக்கவல்ல தங்களைச் சேவித்து, ஸ்நானத்தின் மூலம் பரிசுத்தர்களாகி மக்கள் சிவபதம் பெறுகிறுர்கள்.

9. ஸ்ரீ காவேரி தேவி! தாங்கள் பிறந்த வீட்டைவிட்டுப் பதியின் கிரஹத்திற்குச் செல்லும் மார்க்கங்களில் சோழமண்டலத் தைப் பரிசுத்தமாக்கி, சீர்படுத்தி, ஸகல ஸௌபாக்யங்களையும் அளித்துச் செல்கிறீர்கள். கடைசியில் சுவேதாரண்ய க்ஷேத்ர பதியாய் விளங்கும் ஈசனை இருபுறங்களில் அணைந்து பிரகாசிக்

10. தங்கள் புகழேந்திய இந்த ஸ்தோத்ரத்தை எவர் சுத்த மாயும், பரிசுத்த மனதுடனும், பக்தியுடனும் படிக்கின்றுரோ, அவர் ஸ்நானம் செய்வதால் உண்டாகும் பூர்ண பலன்களையும் பெறுவர்.

11. இந்த ஸ்தோத்ரம், தியாகராஜமகி என்பவரால் ஸ்ரீ சங்கர னின் பாதகமலங்களில் ஸமர்ப்பிக்கப்படுகின்றது.

12. ஸ்ரீ காவேரி தாயே! நான் தங்களது விருப்பமுள்ள விருஷபதீர்த்தக் கட்டத்தில், துலாமாதம் தர்சபர்வாவில் வேத கோஷத்துடன் குழுமிய அந்தணர்களுடன் கூடி, கங்கை முத லான ஸமஸ்த புண்யதீர்த்தங்களுடைய ஸாந்நித்தியமும் பெற்ற துல்யமான தீர்த்தத்தில் மாத்யான்ஹிக ஸ்நானம் செய்யும் பாக்யம் பெறுவேனே?

என்ற பெருமை பொருந்திய

ஸ்ரீ காவேரி ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்

**சுபமஸ்து:**

உ

श्रीगुरुभ्यो नमः

# காவேரி ।ஷ்டகம்

मरुद्वृधे मान्य जलप्रवाहे
कवेरकन्ये नमतांशरण्ये ।
मान्ये विधेर्मानि सपुलिसौम्ये
कावेरि कावेरि मम प्रसीद ॥ 1 ॥

கவேர கன்னிகையே! தாங்கள் பூஜிக்கத் தக்க ஜலப்ரவாஹத்தை உடையவர்கள்–பிரும்மாவின் மானஸ புத்ரி–அழகு பொருந்தியவர்கள்–எனக்கு அருள் புரியுங்கள்.

देवे ग्ये विमले नदीशि
परात्परे वनि नित्यपूर्णे ।
ाला ाम तीर्थपादे
कावेरि का वेरि मम प्रसीद ॥ 2 ॥

பரிசுத்தமானவர்கள்–தேவர்களின் அதிபரால் வழிபடுபவர்கள்–நதிகளின் ராணி–பரிசுத்தமானவர்–சிரேஷ்டமானவர்–என்றும் பூர்ண பிரவாஹமுள்ளவர்–ஸம்ஸ்தலோக நதிகளைக் காட்டிலும் உத்தமமான புண்ய தீர்த்தமுடையவர்–எனக்கு அருள் புரியுங்கள்.

वेदानुवेद्ये विमलप्रवाहे
विशुद्धयोगीन्द्रनिवास योग्ये
रङ्गेशभोगायतनात्त पारे
कावेरि कावेरि मम प्रसीद । 3 ॥

வேதங்கள் தங்கள் பெருமையைக் கூறுகின்றன–பரிசுத்தமான பிரவாஹமுள்ளவள்–தங்கள் தீரங்களில் நிர்மலமான மனதையுடைய யோகிகள் வாஸம் செய்கிருர்கள். ஸ்ரீரங்கநாதன் தங்கள் தீரத்தில் ஸர்வ போகங்களையும் அடைகிருர். எனக்குக் கருணை புரிவீராக.

भक्तानुकम्पेद्युतिभाग्यलब्धे
निर्त्यजगन्मङ्गलदानशीले ।
निरञ्जने दक्षिणदेशगङ्गे
कावेरि कावेरि मम प्रसीद ॥ 4 ॥

कलिप्रमादाखिल दोषनाशे
कारुण्यपूर्णे कमलायताक्षि ।
कदम्ब कल्हार सुगन्धिपूरे
कावेरि कावेरि मम प्रसीद ॥ 5 ॥

अनन [illegible] मल मोक्षदात्रि
दुरन्तसंसारविमोचनाङ्घ्रि ।
सह्याचलोत्पन्न विश्वरूपे
कावेरि कावेरि मम प्रसीद ॥ 6 ॥

देवालयापूरित दिव्यतीरे
समस्तलोकोत्तम तीर्थमूर्धे ।
काश्मीरभूः कल्पितचोलदेशे
कावेरि कावेरि मम प्रसीद ॥ 7 ॥

பக்தர்களிடம் தயையுள்ளவர்கள். ஒவ்வொருவரும் தனது பாக்ய விசேஷத்தால் அடையக்கூடியவர். அழிவற்றவர்—உலகத்திற்கு க்ஷேமத்தை அளிப்பவர். மாசற்றவர். தக்ஷிண கங்கையென்று புகழ் பெற்றவர் என்னை அனுக்ரஹம் செய்வீராக.

இக்கலியில் அலக்ஷிய புத்தியுள்ள துஷ்டர்களின் தோஷங்களைப் போக்கி—கருணை காட்டுகிறீர்கள். தாமரையிதழ் போன்ற கண்கள்—கதம்ப—கல்ஹார புஷ்பங்களின் நறுமணத்தோடு நிரம்பியவர்கள். ஸ்ரீ காவேரி தேவியே! கருணை புரியுங்கள்.

முடிவற்ற, மாசற்ற மோக்ஷ சௌக்யத்தை கொடுப்பவளே, மிகக் கொடூர ஸம்ஸாரத் தொல்லையிலிருந்து விடுவிப்பவளே, ஸஹ்ய மலையில் உத்பத்தியாகி அகண்ட ரூபம் பெற்றவளே-என்னைக் காப்பாற்றுவீராக.

தங்கள் தீரங்களில் திவ்ய க்ஷேத்திரங்கள் அமைந்துள்ளன. ஸமஸ்த லோகங்களில் உள்ள தீர்த்தங்களைக் காட்டிலும் தங்கள் புண்ய தீர்த்தம் மேன்மையானது. காஶ்மீர தேசத்திற்கொப்பாய் சோள தேசம் அழகும்—செழிப்பும் பெற்றுளது. காவேரி-என் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்யுங்கள்.

प्रसीदकल्याणगुणाभिरामे
प्रसीदकावेरि मम प्रसीद ।
प्रसीदकामादिहरे पवित्रे
कावेरि कावेरि मम प्रसीद ॥ 8 ॥

கல்யாண குணங்களினுல் அழகு பெற்றவளே-காம குரோதாதிகளை நீக்குபவளே-மகா புண்யவதியான தாங்கள் என்னைக் கருணை கூர்ந்து ஆசி கூறி காப்பாற்றுவீராக.

काकारो कल्मषं हन्ति
वेकारो वाञ्चितप्रदः ।
रीकारो मोक्षदोनृणां
कावेरीत्युच्यतेबुधैः ॥ 9

"காவேரி" என்ற நாமாவில் "கா" என்ற அக்ஷரம் மக்களின் மனக் கல்மஷங்களைப் போக்கும். "வே" என்ற அக்ஷரம் வேண்டியவைகளைக் கொடுக்கும். "ரி" என்ற அக்ஷரம் மோக்ஷத்தைக் கொடுக்கும் என மகான்கள் கூறுகிறர்கள்.

कावेर्यष्टकं सम्पूर्णम्

உ

श्रीगुरुभ्योनमः

# कावेरीभुजङ्गस्तोत्रम्

कथंसह्यजन्ये सुरामे सजन्ये
प्रसन्नेवदान्याः भवेयुर्वदान्ये ।
सपापस्यमन्ये गतिं त्वा मम्ब मान्ये
कवेरस्यधन्ये कवेरस्यकन्ये ॥ 1

கவேரரின் குலதனமான கன்னிகையே! உங்களைத் தவிர பாபத்தோடு கூடிய என்னை எந்தத் தேவர்கள் உத்தம கதியைப் பெறும்படி செய்வார்கள்? பெருந்தன்மை பொருந்தியவளே—சொல்லுங்கள்.

कृपाम्भोधिसङ्गे कृपाद्रान्तरङ्गे
जलाक्रान्तरङ्गे ज द्यत्तरङ्गे ।
नभश्चुम्बिवन्येभ सम्प मान्ये
नमस्तेवदान्ये क स्यकन्ये ॥ 2

தாங்கள் கருணைக் கடல். ஜலத்தினுலும், வேகத்தோடு கூடிய அலைகளாலும் ஆகாயத்தை அளாவும் வனங்கள். யானைக் கூட்டங்கள் நிறைந்த செல்வத்தாலும் பாக்யம் பெற்றவர்கள்— தங்களை நமஸ்கரிக்கின்றேன்.

समाते न लोके नदीह्यत्र लोके
हताशेषशोके लसत्त टयशोके ।
पिबन्तोऽम्बुते के रमन्ते न नाके
नमस्तेवदान्ये कवे न्ये ॥ 3

லோகங்களில் தங்களுக்கு ஸமமான நதி யில்லை. எங்கள் சோகங்களை நீக்குகிறீர்கள். தங்கள் தீரங்கள் சோகத்தைப் போக்கவல்ல மரங் களோடு கூடியவை. தங்கள் தீர்த்தத்தைப் பானம் செய்பவர்களில் எவர்தான் ஸ்வர்க்கத்தில் ஆனந்த மடையாமல் இருக்கிறுர்கள் ?

महापापिलोकानपि स्न त्वा-
न्महापुण्यकृद्भि कृत्यसद्भिः ।
करोष्यम्ब सर्वान्सुरा वदेयं
नमस्तेवदान्ये व न्ये ॥ 4

மகா பாபியாலுைம் ஸ்நானம் செய்த அள வில் புண்ய காரியங்களில் ஈடுபட்டு, ஸத்புருஷர் களின் சேர்க்கையினுல் ஸத்காரியங்கள் செய்து தேவர்களாய் மாறிவிடுகிறுர்கள்.

अविद्या तीते नाय ते
सस्यवृद्धिं दि योन र्धिम् ।
ददास्यम्बमुक्ति विधूर क्ति
नम ॥ 5

அஞ்ஞானத்தைப் போக்குகிறீர்கள்—உத்த களாகச் செய்கிறீர்கள்-தங்கள் ஜலத்தினுல் பயிர் களைச் செழுமைப்படுத்துகிறீர்கள்-உன்னத மான மனப்பான்மையைக் கொடுக்கிறீர்கள்—பாப மாகிற கொடும் விஷத்தை நாசம் செய்கிறீர்கள் தங்களுக்கு நமஸ்காரம்.

காவேரி புஜங்கத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து சுலோகங்கள் சம்பூர்ணம்.

# ஸ்ரீ பராசர பட்டாசார்யரால் எழுதப்பட்ட ஸ்ரீரங்கராஜ ஸ்தோத்ரத்தில் காவேரியின் பெருமையை விளக்கும் சில சுலோகங்கள்

दुग्धाब्धिर्जनको जनन्यहमियं श्रीरेवपुत्रीवरः
श्रीरङ्गेश्वर एतदर्हमिह किं कुर्यामितीवाकुला ।
चञ्चच्चामर चन्द्रचन्दन महामाणिक्य मुक्तोत्करान्
कावेरीलहरीकरैर्विदधती पर्येति सासेव्यताम् ॥ 1

பாற்கடல் தகப்பஞர். நான் தாய். இந்தக் காவேரி லக்ஷ்மியைப்போல் உத்தம புத்ரியாவாள். அவள் ஸ்ரீரங்க ராஜாவை வரவேற்று பூஜிக்க என்ன செய்வது என்று திகைக்கிருள். லக்ஷ்மியைப்போல், தன் வசமுள்ள வீசும் சாமரம், சந்திரன், சந்தணம், விலையுயர்ந்த மாணிக்கங்கள், சிரேஷ்டமான முத்துக்களை, தனது அலைகளாகிற கைகளினுல் பூஜித்து ஸமர்ப்பணம் செய்கிருள். அப்படிப்பட்ட ஸ்ரீ காவேரி தேவியை நாம் போற்றுவோமாக.

अगणितगुणावद्यं सर्वं स्थिरत्रसमप्रतिक्रिय
मपि पयः पूरैराप्याययन्त्यनु जाग्रती ।
प्रवहति जगद्धात्री भूत्वैव रङ्गपतेर्दया
शिशिरमधुराऽगाधा सानः पुनातुमरुद्वृधा ॥ 2

ஸ்ரீ ரங்கநாதனின் பூர்ண கிருபையை அடைந்த காவேரி எண்ணிறந்த கொடூரமான பாபங்கள் செய்தவர்களைக்கூட தனது பிரவாஹத்தில் ஸ்நானம் செய்த மாத்திரத்தில் பரிசுத்தர்களாக்கி ஜகத்தைக் காப்பாற்றுகிருள். அவ்வளவு அளவிடக் கூடாத குண சீலையான ஸ்ரீ காவேரி தேவி நம்மைப் பரிசுத்தமாக்குவாள்.

तरलतनुतरङ्गैः मन्द मान्दोलिमान-
स्वतटविटपिराजी मञ्जरी सुप्तभृङ्गा ।
क्षिपतुकनकनाम्नी निम्नगा नारिकेल-
क्रमुकजमकरन्दैर्मां सलापा मदंहः ॥ 3

அசைகின்ற சிறிய அலைகளால் மெதுவாய் ஊசலாடுவது போல் அசைகின்ற தன் கரையிலுள்ள விருக்ஷ ஸமூஹங்களு

டைய பூங்கொத்துக்களில் நித்திரை செய்யும் வண்டுகளை உடைய வளும், தென்னை, பாக்கு இவைகளின் புஷ்ப தாதுக்களால் பரவிய தான நீரை உடையவளும், பொன்னி என்ற திருநாமம் கொண்ட வளுமான ஸ்ரீ காவேரி என் பாபத்தை விலக்கட்டும்.

कदलवकुलजम्बू पूगमाकन्दकण्ठ-
द्वयस, सरसनीरामन्तरा सह्यकन्याम् ।
प्रबलजल पिपासालम्बमानाम्बुदौघ-
भ्रमकरतरुवृन्दं वन्दयतामान्तरीपम् ॥ 4

ஸஹ்யமலை புதல்வியான காவேரியின் மத்தியில், வாழை, மகிழமரங்கள், நாவல்கள், கமுகு, மா இவைகள் கழுத்தளவு நீரில் மூழ்கியிருக்கின்றன. இவற்றைக் காணும்பொழுது மேகங்கள் மிகுதியான நீர் வேட்கையால் நீர் பருகத் தொங்குவதுபோல் தோற் றம் அளிக்கிறது. அவ்விதமான ஸ்ரீரங்கத்வீபம் சேவிக்கப் படட்டும் :—

**ஸம்பூர்ணம்**

*இவ்வாறு விஷ்ணு மாயா—பிரும்மாவின் மானஸ புத்ரி—ஹர னுடைய பூர்ண பிரஸாதம் பெற்றவள். ஸ்ரீ காவேரி, தேவி மகாத் மியத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீ நாராயணீயின் பெருமையை அடைந் துள்ளாள்.*

हंसयुक्तविमानस्थे ब्रह्माणिरूपधारिणि ।
कौशांभः क्षरिके देवि नारायणि नमोऽस्तुते ॥

ஹம்ஸங்களுடன் கூடிய விமானம்—பிரும்மாணியின் உரு வம்—கமண்டலு ஜலத்தைப் பெருகவிடுகிருள்—எனப் பொருள். நாமும் ஸ்ரீ காவேரி தேவி! தங்களுக்கு நமஸ்காரம்—தங்கள் பூர்ண கருணையோடு எங்கள் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்ளுங்கள் எனத் துதிப்போமாக.

**சுபமஸ்து**




श्री कावेरी

आदावादिविधातृमानससुता पश्चात्कवेरात्मजा
भूयः कुम्भभवस्य तस्य दयिता तस्मान्नदीरूपिणी ।
श्रीरङ्गानुलकुम्भघोणविलसन्मायूरमध्यार्जुन-
श्वेतारण्यमुखस्थलेषु महिता सह्याद्रिजा दृश्यते ॥

# காவேரியைப் போற்றும் இலக்கியங்கள்

## திருஞான சம்பந்தர் தேவாரம் :

*திருஞானசம்பந்தர் :* திட்டை. திருவலஞ்சுழி திருவிடைமருதூர், திருஆனைக்கா. திருஐயாறு, திருக்கடைமுடி, திருக்கண்டியூர, கீழைத்திருக்காட்டுப்பள்ளி மேலைத்திருக்காட்டுப்பள்ளி, சீர்காழி, கும்பகோணம், குரங்காடுதுறை, (வட, தென்) திருச்சக்கரப்பள்ளி, திருச்சாய்க்காடு, திருச்சிவபுரம், திருச்செம்பொன்பள்ளி, திருச்சோற்றுத்துறை, திருத்துருத்தி (குற்ருலம்) திருநல்லூர், திருநாகேசுவரம், திருநெய்த்தானம், திருப்பழனம், திருப்பாண்டிக்கொடுமுடி, திருப்புள்ளமங்கை, திருமங்கலக்குடி, திருமயிலாடுதுறை, திருமாந்துறை, திருமுல்லைவாயில் (தென்) திருவிளநகர் = 30.

*காவிரி கிளை நதிகளில் உள்ள ஸ்தலங்கள் :*

*அரிசிலாறு :* திருவம்பர், அம்பர்மாகாளம், திலதைப்பதி, அரிசிற்கரைப்புத்தூர், சிவபுரம், பாம்புரம், பேணுபெருந்துறை.

*குடமுருட்டி :* திருக்குடவாயில், கடுவாய்க்கரைப்புத்தூர்.

*வெட்டாறு :* திருக்கொள்ளம்பூதூர்.

*கோட்டாறு :* சீர்காழி.

*கொள்ளிடம் :* அன்பிலாலந்துறை. =12

## அப்பர் தேவாரம் :

*காவேரி :* திருமங்கலக்குடி, திருக்குரங்குக்கா, திருப்பழனம், திருஐயாறு, திருவிடைமருதூர், திருத்துருத்தி, திருப்பராய்த்துறை, திருவலஞ்சுழி, திருக்குடந்தை, கீழக்கோட்டம், திருவானைக்கா.

*குடமுருட்டி ;* கடுவாய்க்கரைப்புத்தூர்.

*கொள்ளிடம் :* கோவிந்தபுத்தூர்.

## சுந்தரர் தேவாரம் :

*காவேரி:* திரு ஆனைக்கா, திருவையாறு, திருவிடைமருதூர், திருத்துருத்தி.

*கொள்ளிடம்:* காருட்டுமுள்ளூர்.

*மண்ணிநதி:* திருப்பழமண்ணிப் படிக்கரை, திருவாழ்கொளி புத்தூர், திருவாய்ப்பாடி.

## திருப்புகழ் :

*அருணகிரிநாதர்:* சுவாமிமலை, வயலூர், திருவானைக்கா, கும்பகோணம், நெரூர.

## திருமொழி : *(திருவாய் மொழி)*

1. *பெரியாழ்வார்:* ஸ்ரீரங்கம்
2. *நாச்சியார்;* ஸ்ரீரங்கம்.
3. *குலசேகரப் பெருமாள்:* ஸ்ரீரங்கம்
4. *தொண்டரடிப் பொடியாழ்வார்:* ஸ்ரீரங்கம்.
5. *திருப்பாணாழ்வார்:* ஸ்ரீரங்கம்.
6. *திருமங்கையாழ்வார்:* ஸ்ரீரங்கம், தஞ்சைமாமணிக்கோயில், குடந்தை, விண்ணகரம், திருநாங்கூர், திரு இந்தளூர், திருப்புள்ளம் பூதங்குடி, திருவெள்ளறை.
7. *திருமழிசை ஆழ்வார்:* ஸ்ரீரங்கம், திருக்குடந்தை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை, திருவெள்ளியங்குடி திருவெள்ளறை, திருநறையூர், திருவழுந்தூர்.

## சங்ககால, பிற்கால இலக்கியங்கள்

*காவேரி:*

| | | |
|---|---|---|
| 1. | பட்டினப்பாலை | 1 |
| 2. | புறநானூறு | 2 |
| 3. | பத்துப்பாட்டு | 1 |
| 4. | சிலப்பதிகாரம் | 5 |

6. திவாகரம் 1
7. பாரதம் 1
8. கம்பராமாயணம் 3
9. சேக்கிழார் 3
10. ஔவைப்பிராட்டி 2
11. ஒட்டக்கூத்தர் 1
12. புகழேந்தி 1
13. சொக்கநாதப் புலவர் 1
14. காளமேகப் புலவர் 1

*காவேரியின் மகிமையை உணர்த்தும் தேவார, திருப்புகழ், பதிகங்களில் சில இங்கு குறிப்பிடப் பெறுகின்றன:*

## ஸ்ரீ சம்பந்தர் தேவாரத்தில் வரும் செய்திகள்

1. காவேரிக்குப் '*பொன்னி*' என்று ஓர் அருமைப் பெயர் உண்டு.

காவேரி, செந்நெல் விளைய வளப்பம் தரும் ஆறு. தைப்பூச நீராடலுக்கு விசேஷமான நதி: இது தன்னுள் படிவோர்தம் இடரைத் தீர்க்க வல்ல புண்ணிய தீர்த்தமாகும். இந்த நதியின் பெருமை கங்கையின் பெருமையை ஒப்பது. இதன் மாண்பு கடலின் மாண்பை நிகர்ப்பது.

"காவிரி வந்தடி வருடநல் செந்நெலார் வளவயல்
தென்குடித்திட்டை"
"பூசநீர் பொழியும் புனற்பொன்னி"
வாசநீர் குடைவார் இடர்தீர்க்கும்" (திருவலஞ்சுழி)

"மாதவத்தோர் வானோர் ஏனோர் தைப்பூசம் ஆடி"

(திருவிடைமருதூர்)

"கங்கைக்கு ஏயும் பொன்னி"
"கடல் போல் காவேரி"

## காவேரியின் அழகு முதலியன :

காவேரி நதி மலையினின்றும் இழிவதாகும்.

இதில் என்றும் நீர் வற்றாது. அழகு மிக்கது. நீண்டது; ஒலிக்கும் வெள்ளம் உடையது. கரைகளில் மலர்ப் பொழில் நிறைந்தது. இது பழங்காவேரி என்றும் சொல்லப் படுகிறது.

'வரைநின் றிழிவார்தரு பொன்னி'
'பொழில் மல்கு பொன்னி'
'பாய சீர்ப்பழங் காவேரி
'ஆரியாவரு காவிரி மாறாநீர்..காவிரி'

ஆகியவை தேவார அடிகளாகும்.

2. காவேரி வெள்ளத்தில் அடித்துக்கொண்டு வரும் பொருள்களையும், காவேரி வர்ணனையையும், அதன் வடகரையி லுள்ள 'திருமாந்துறை' என்னும் தலத்துக்கு உரிய பதிகத்தில் ஸ்ரீசம்பந்த சுவாமிகள் பாடல்தோறும் சொல்லியுள்ளார். அவை அடியிற் கண்டவையாகும்:

அகில், சந்தனம், பெருமரம், பூகக்குலை, இலவம், ஈஞ்சு, மருதம், கழை, வேங்கை, இலவங்கம், கோங்கு, திமில், தேக்கு, ஞாழல், சண்பகம், குருந்து, செருந்தி, பாதிரி, குரா, மல்லிகை, முல்லை, மௌவல் மாதவி சுரபுன்னை, முதலிய மலர்கள், இஞ்சி, இலை, ஈஞ்சு, ஏலம், மிளகு, மஞ்சள், காட்டுப் பொருள்கள், மலைப்பொருள்கள், பொன், வயிரத்திரள்கள், மாணிக்கம், முத்து, நீலமணி, மூங்கில் மணி முதலிய மணிகள். சாதிப்பழம், மாம் பழம், வாழைப்பழம் முதலிய பழவகைகள். விளையின் தேன் முதலிய தேன் வகைகள் மயிற்பீலி, யானை மருப்பு முதலியவை.

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் சொல்லப்பட்ட முப்பது காவேரி நதி ஸ்தலங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### *1. திரு ஆனைக்கா 3 - 311 - 2*

சேறு பட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறு பட்ட நுண்டுறை யானைக்காவி லண்ணலார்
நீறு பட்ட மேனியார் நிகரில்பாத மேத்துவார்
வேறு பட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே

## 2. திருவிடைமருதூர் 1 - 32 - 7

தேக்குந் திமிலும் பலவுஞ் சுமந்துந்திப்
போக்கிப் புறம்பூசலடிப் பவருமால்
ஆர்க்குந் திரைக் காவிரிக் கோலக்கரைமேல்
ஏற்க விருந்தான்ற னிடைமரு தீதோ.

## 3. திரு ஐயாறு 1 - 36 - 8

வரையொன்ற தெடுத்த வரக்கன் — சிரமங்க
நெரித்தவர் சேர்வாம்
விரையின்மலர் மேதகு பொன்னித் — திரை
தன்னொடு சேருமை யாறே.

## 4. திருக்கடைமுடி 1 - 111 – 9

அடிமுடி காண்கில ரோரிருவர் — புடைபுல்
கியருளென்று போற்றிசைப்பச்
சடையிடைப் புனல்வைத்த சதுரனிடம் — கடை
முடிய தன் அயல் காவிரியே.

## 5. திருக்கண்டியூர் 3 - 245 - 1

வினவினேனறி யாமையில் லுரைசெய்
மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார் புனற் காவிரிக் கரைமேய
கண்டியூர் வீரட்டன்.

## 6. கீழைத் திருக்காட்டுப்பள்ளி 1 - 5 - 3

திரைகளெல்லா மலருஞ்சுமந்து செழுமணி
முத்தொடு பொன் வரன்றிக்
கரைகளெல்லா மணி சேர்ந்துரிஞ்சி காவிரி
கால்பொரு காட்டுப் பள்ளி
உரைகளெல்லா முணர்வெய்தி நல்லவுத்தமரா
யுயர்ந் தாருலகில்
அரவமெல்லா மரையார்த்த செல்வர்க்காட்
செய அல்லலறுக் கலாமே.

## 7. மேலைத் திருக்காட்டுப்பள்ளி 3 - 287 - 5

வரையுலாஞ் சந்தொடு, வந்திழுகா விரிக்
கரையுலா மிடுமணல், சூழ்ந்த காட்டுப்பள்ளி

*8. சீர்காழி (கழுமலம்) 1 - 24 - 5*

மாடே யோதமெறிய வயற் செந்நெற்
காடேறிச் சங்கீனும் காழியார்
வாடா மலராள் பங்கரவர் போலாம்
ஏடார்புர மூன்றெரித்த விறைவரே.

*......சடையிடனிங் 1 - 126 - 3*

கங்கைக் கேயும் பொற்பார்கலந்து வந்த பொன்னியின்
காலே வாரா மேலேபாய் கழுமலவள நகரே.

*9. கும்பகோணம் – குடமூக்கு குடந்தைக் காரோணம் 1 - 72 - 8*

உரையார்கீதம் பாடக் கேட்டங் கொளிவாள் கொடுத்தாரும்
கரையார் பொன்னி சூழ்குடந்தைக் காரோணத்தாரே.

*3-317-3*

மயில்பெடை புல்கியால மணன்மேல் மடவன்ன மல்கும்
மயில் பெடை வண்டுபண் செய்யப் பழங் காவிரிப் பைம்
[பொழில் வாய்க்
குயில் பெடையோடு பாடலுடையான் குட மூக்கிடமா
இயலாடு வான மேத்த விருந்தானவ னெம்மிறையே.

*10. வடகுரங்காடுதுறை 3-344-3*

முத்துமா மணியொடு முழைவள ராரமு முகந்துந்தி
எத்துமா காவிரி வடகரை யடை குரங்காடுதுறை
மத்த மா மலரொடு மதி பொதி சடை முடியடி யடிகள்தம்மேல்
சித்தமா மடியவர் சிவகதி பெறுவது திண்ணமன்றே.

*11. தென் குரங்காடுதுறை 2-171-8.*

வரை யார்த் தெடுத்தவ் வரக்கன் வலியொல்க
நிரையார் விரலா னெரித்திட் டவனூராம்
கரை யார்ந்திழி காவிரிக் கோலக்கரைமேல்
குரையார் பொழில்சூழ் குரங்காடுதுறையே.

*12. திருச்சக்கரப்பள்ளி 3-295-4.*

நல மலி கொள்கையார் நான்மறைப் பாடலார்
வயமலி மழுவினர் மகிழுமூர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழிச் சக்கரப் பள்ளியே.

13. *திருச்சாய்க்காடு 2-174-1.*

நித்தலுந் நியமஞ் செய்து நீர்மலர் தூவிச்
சித்த மொன்ற வல்லார்க் கருளுஞ் சிவன் கோயில்
மத்த யானையின் கோடும் வண் பீலியும் வாரித்
தத்து நீர்ப் பொன்னி சாகர மேவு சாய்க் காடே.

*2-174-3.*

ஊறு தேங்கனி மாங்கனி யோங்கிய சோலைத்
தாறு தண் கதலிப் புதல் மேவு சாய்க்காடே.

14. *திருச்சிவபுரம் 1-112-3.*

மலை மகள் மறு கிட மத கிரியைக்
கொலை மல்க வுரிசெய்த குழகனகர்
அலை மல்கும் அரிசிலின் அதன் அயலே
சிலை மல்கு மதிளணி சிவபுரமே.

*1-113-1.*

பொன்கரை பொருபழங் காவிரியின்
தென்கரை மருவிய சிவபுரமே.

15. *திருச்செம்பொன் பள்ளி 1-25-3.*

வரையார் சந்தோடகிலும் வரு பொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி மேவிய
நரையார் விடையொன் றூரு நம்பனை
உரையா தவர்மே லொழியா வூனமே.

16. *திருச்சோற்றுத்துறை 1-28-5.*

பிறையும் மரவும் புனலும் சடை வைத்து
மறையு மோதி மயான மிடமாக
உறையுஞ் செல்வ முடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத்துறை சென்றடைவோமே.

17. *திருத்துருத்தி (குற்றாலம்) 2 - 234 - 1.*

வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்க ளுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்தியங்கு காவிரிக்
கரைக்கலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே.

18. *தென்குடித்திட்டை 3 - 243 - 1.*

மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செந்நெலார் வளவயற் றென்குடித் திட்டையே.

### 19. திருநல்லூர் 3 - 341 - 11.

திரைகளிரு கரையும்வரு பொன்னி நிலவுந் திருநலூர் மேல்
பரசு தரு பாணியை நலந்திகழ்செய் தோணி புரநாதன்
உரை செய்* தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழிவார் போய்
விரைசெய் மலர் தூவவிதி பேணுகதிபேறு பெறுவாரே.

### 20. திருநாகேச்சரம் 2 - 255 - 7.

வேயுதிர் முத்தொடு மத்தயானை மருப்பும் வராய்ப்
பாய் புனல் வந்தலைக்கும் பழங் காவிரித் தென்கரை
ஞாயிறுந் திங்களுங் கூடி வந்தாடு நாகேச்சரம்
மேயவன்றன் னடிபோற்றி யென்பார் வினை வீடு மே

### 21. திருநெய்த்தானம் (தில்லைஸ்தானம்) 1 - 25 - 2.

பறையும்பழி பாவம்படு துயரம்பல தீரும்
பிறையும்புன லரவும்படு சடையெம்பெரு மானூர்
அறையும்புனல் வருகாவிரி அலைசேர்வட கரைமேல்
நிறையும்புனை மடவார்பயி னெய்த் தானமெ னீரே.

### 22. திருப்பழனம் 1 - 67 - 5

குலைவெஞ் சிலையான் மதில் மூன்றெரித்த
கொல்லே றுடையண்ணல்
கலவ மயிலுங் குயிலும் பயிலுங்கடல்
போற் காவேரி
நலமஞ் சுடைய நறுமாங் கனிகள்
குதிகொண் டெதிருந்திப்
பலவின் கனிகள் திரைமுன் சேர்க்கும்
பழன நகராரே.

### 23. பாண்டிக் கொடுமுடி 2 - 205 - 7

ஊனமர் வெண்டலையேந்தி யுண்பலிக் கென்றுழல் வாரும்
தேன்மரு மொழி மாதுசேர் திருமேனி யினாரும்
கானமா மஞ்ஞை களாலுங் காவிரிக் கோலக்கரைமேல்
பானல நீறணிவாரும் பாண்டிக் கொடுமுடி யாரே.

### 24. திருப்புள்ள மங்கை (திருவாலந்துறை) 1 - 16 - 2

மலையான்மகள் கணவன் மலிகடல் சூழ்தரு தன்மைப்
புலையாயின களைவானிடம் பொழில்சூழ்புன மங்கைக்
கலையான்மலி மலையோரவர் கருதித்தொழு தேத்த
அலையார்புனல் வருகாவிரி யாலந்துறை யதுவே

## 25. திருமங்கலக்குடி 2 - 146 - 1

சீரினார் மணியும்மகில் சந்துஞ் செறிவரை
வாரிநீர் வருபொன்னி வடமங் கலக்குடி
நீரின் மாமுனிவன் னெடுகங்கை கொடுநீர்தனைப்
பூரித்தாட்டி யர்ச்சிக்க விருந்த புராணனே.

## 26. திருமயிலாடு துறை (மாயூரம்) 3 - 329 - 10

மிண்டுதிற லமணரொடு சாக்கியரு மலர்தூற்ற
மிக்க திறலோன்
இண்டைகுடி கொண்டசடை யெங்கள் பெருமான
திடமென்ப ரெழிலார்
தெண்டிரை பரந்தொழுகு காவிரிய தென்கரை
நிரந்து கமழ்பூ
வண்டவை திளக்கமது வந்தொழுகு சோலைமயி
லாடு துறையே.

## 27, திருமாந்துறை 2 - 246 - 5

கோங்கு செண்பகங் குருந்தொடு பாதிரி
குரவிடை மலருந்தி
ஓங்கிநீர் வருகாவிரி வடகரை
மாந்துறை யுறைவானைப்
பாங்கி னாலிடுந் தூபமுந் தீபமும் பாட்டவிழ்
மலர் சேர்த்தித்
தாங்கு வாரவர் நாமங்க ளுவின்னிற் றலைப்
படுந்தவத் தோரே.

## 28. திருமுல்லைவாயில் (தென்) 2 - 224 - 8

விரைவந் தெடுத்த வலிவா ளரக்கன்
முடிபத்து மிற்று நெரிய
வரைவந்த பொன்னி னுருவந்த மேனி யுமைபங்க
னெங்கள் அரனூர்
வரைவந்த சந்தோ டகிலுந்தி வந்து
மிளிர்கின்ற பொன்னி வடபாற்
றிரைவந்து வந்து செறிதேற லாடு
திருமுல்லை வாயி லிதுவே.

### 29. திருவலஞ்சுழி 2 - 138 - 6

பூச்சநீர் பொழியும் புனற்பொன்னியிற் பன்மலர்
வாசநீர் குடைவாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி

### 30. திருவிளநகர் 2 - 214 - 5

பன்னினார் மறை பாடினார்பாய சீர்ப் பழங் காவிரித்
துன்னு தண்டுறை முன்னினாற் தூநெறி பெறுவாரெனச்
சென்னி திங்களைப் பொங்கராக் கங்கை யோடுடன் சேர்த்தினார்
மின்னு பொன்புரி நூலினார் மேயது விள நகரே.

## காவிரியின் கிளை நதிகள்பால் சொல்லப்பட்ட தலங்கள்

*அரிசொல்லாறு* (அரிசொல் ஆறு - அரிசொல்ல வந்த ஆறு அரிசிலாறு என்று வழங்கும்)

### 1. அம்பர் (திருவம்பர்) 3 - 277 - 1

எரிதர வனல்கையி லேந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்ட மாடுவர்
அரிசிலம் பொருபுன லம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே

### 2 அம்பர் மாகாளம் 2 - 239 - 1

புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூடிப்
பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையம் பிணையல்
செய்தவர் மேய
மல்கு தண்டுறை யரிசிலின் வடகரை வருபுனன் மாகாளம்
அல்லும் நன்பகலுந் தொழு மடியவர்க் கருவினை யடையாவே

### 3. அரிசிற் கரைப்புத்தூர் 2 - 194 - 1

மின்னுஞ் சடைமே லிளவெண் டிங்கள் விளங்கவே
துன்னுங் கடனஞ் சிருள்தோய் கண்டர் தொன்மூதூர்
அன்னம் படியும் புனலாரரி சில்லை கொண்டு
பொன்னும் மணியும் பொருதென் கரை மேற்புத் தூரே

### 4. திலதைப்பதி 2 - 254 - 2

தெண் டிரைப் பூம்புன லரிசில் சூழ்ந்த திலதைப் பதி
வண்டு கொண்டுற் றிசை பயிலுஞ் சோலைமதி முத்தமே

### 5. சிவபுரம் 1-112-3

மேலே பார்க்க 14-வது தலம்

### 6. பாம்புரம் 1-41-8

விடைத்தவல் லரக்கன் வெற்பினை யெடுக்க
மெல்லிய திருவிர லூன்றி
அடர்த்தவன் றனக்கருள் செய்தஅடிக ளனலது
வாடுமெம் மண்ணல்
மடக்கொடி யவர்கள் வருபுனலாட வந்திழி
யரிசிலின் கரைமேல்
படப்பையிற் கொணர்ந்து பருமணி சிதறும்
பாம்புர நன்னக ராரே.

### 7. பேணி பெருந்துறை 1-42-5

பணிவாயுள்ள நன்கெழு நாவின் பத்தர்கள்
பத்திமை செய்யாத்
துணியார் தங்க ளுள்ள மிலாத சுமடர்கள்
சோதிப் பரியார்
அணியார் நீல மாகிய கண்ட ரரிசிலுருஞ்சு
கரை மேல்
மணிவாய் நீலம் வாழ்கமழ் தேறன் மல்கு
பெருந்துறை யாரே.

### 8. கடுவாய் (குடமுருட்டி)

### (1) திருக்குடவாயில் 2-158-11

கடுவாய் மலிநீர் குடவா யிறனில்
நெடுமா பெருங்கோ யினிலா யனைத்
தடமார் புகலித் தமிழர் விரகன்
வடமார் தமிழ் வல்லவர் நல்லவரே.

(2) கடுவாய்க் கரைபுத்தூர்

(அப்பர் தேவாரம் பார்க்க.)

### 9. கோட்டாறு சீர்காழி அல்லது கொச்சை 3-347-4

கந்தமார் கேதகைச் சந்தனக் காடுசூழ் கதலி மாடே
வந்துமா வள்ளையின் பவரளிக் குவளையைச் சாடியோடக்
கொந்துவார் குழலினர் குதிகொள் கோட்டாறு சூழ்கொச்சைமேய
எந்தையா ரடிநினைந் துய்யலாம் நெஞ்சமே யஞ்சல் நீயே,

*10. கொள்ளிடம். (1) அன்பிலாலந்துறை 5 - 194 - 6.*

வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்
கள்ள முள்ள மனத்தவர் காண்கிலா
அள்ள லார்வய லன்பி லாலந்துறை
உள்ள வாறறியார் சிலர் ஊமரே

*11. வெட்டாறு. (1) திருக்கொள்ளம்புதூர் 3 - 264 - 7.*

ஆறு வந்தணையுங் கொள்ளம் பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தையார் தொழ
நல்கு மாறருள் நம்பனே.

## 2. அப்பர் தேவாரம்

*காவேரியின் பெருமை:*

1. விசேட தீர்த்தங்களாகக் கடல், குமரி, காவேரி மூன்றையும் கூறி "கடவுள் எங்கும் உள்ளார்" என்னும் சிந்தனையில்லாதவர்கள் இப்புண்ணிய தீர்த்தங்களில் ஆடினாலும் பயனில்லை என்கிறார் அப்பர் சுவாமிகள்.

"கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண் குமரித் துறை யாடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்
எங்கும் ஈசன் எனாதவர் இல்லையே"

பிறிதோரிடத்தில் ஈசனே கங்கையாகவும், காவேரியாகவும் விளங்குகின்றார் எனக் கூறியுள்ளார்.

இக்கருத்தை—

"கங்கையாய் காவிரியாய்க் கன்னியாகிக்
கடலாகி மலையாகி கழிவுமாகி,
எங்குமாய் ஏறூர்ந்த செல்வனாகி,
எழுஞ்சுட ராகி, எம்மடிகள் நின்றவாரே."

எனவரும் திருத்தாண்டகத்துட் காண்க.

2. கும்பகோணத்தில் குடந்தைக் கீழ் கோட்டம் என்பது ஸ்ரீ நாகேஸ்வர ஸ்வாமி கோயில் ஆகும். இத்தலத் திருத்தாண்டகத்தில் புண்ணிய தீர்த்தங்கள் மாசிமாதத்திற் சூழ்வதை,

"காவிரி நல் யமுனை கங்கை சரஸ்வதி பொற்றாமரை
புட்கரணி தெண்ணீர்க்
கோவிலொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்
கோட்டத்தெங் கூத்தனாரே"

என விளக்கியுள்ளார்.



திருஞான சம்பந்தர்



சுந்தரர்



அப்பர்



திருப்பாணாழ்வார்

## 1. காவேரி

**தலங்கள் :**

### 1. திருமங்கலகுடி 5 - 187 - 2

காவிரியின் வடகரைக் காண்டகு மாவிரியும் பொழில்
மங்கலக்குடித்
தேவரியும் பிரமனுந் தேடொணுத் தூவெரி சுடர்ச்
சோதியுட் சோதியே

### 2. திருக்குரக்குக்கா 5 - 159 – 1

மரக் கொக்காமென வாய்விட் டலறிநீர்
சரக் குக்கா வித்திரிந் தயராதுகால்
பரக்குங் காவிரிநீ ரலைக்குங் கரைக்
குரக்குகா வடையக் கெடுங் குற்றமே!

### 5 - 189 - 2

கட்டாறே கழிகாவிரி பாய்வயல்
கொட்டாறே புனலூறு குரக்குக்கா.

### 3. திருப்பழனம் 4 – 12 - 8

கூவைவாய் மணிவரன்றிக் கொழித்தோடுங் காவிரிப்பூம்
பாவையாய் முத்திலங்க பாய்ந்தாடும் பழனத்தான்
கோவையாய் மலைமகள்கோன் கொல்லேற்றின் கொடியாடைப்
பூவைகாள் மழலைகாள் போகாத பொழுதுளதே.

### 4. திருஐயாறு 4 - 13 - 9

முத்திசையும் புனல்பொன்னி மொய்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கி பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்க ளெம்பெருமா னெனவிறைஞ்சும்
அத்திசையா மையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

### 5. திருவிடைமருதூர் 4 - 35 - 3

காருடை கொன்றைமாலை கதிர்மணி யரவினோடு
நீருடைச் சடையுள் வைத்த நீதியார் நீதியாய
போருடை விடையொன் றேற வல்லவர் பொன்னித்தென்பால்
ஈருடைக் கமல்மோங்கும் இடைமருதிடங் கொண்டாரே.

### 5 - 128 - 1

பாசமொன்றிலராய் பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னும்பெருமா னிடை மருதினில்
பூச நாம்புகு துப்புன லாடவே,

6. *திருத்துருத்தி (குற்றாலம்) 4 - 42 - 3*

உன்னியப்போது நெஞ்சு ளொருவனை யேத்துமின்னோ
கன்னியை ஒருபால் வைத்து கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியி னடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றும்
துன்னிய துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.

7. *திருப்பராய்த்துறை 5 - 144 - 1*

கரப்பர் கால மடைந்தவர் தம்வினை
சுருக்கு மாறு வல்லார் கங்கை செஞ்சடைப்
பரப்பு நீர்வருகாவிரித் தென் கரைத்
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே.

8, *திருவலஞ்சுழி 5 - 180 - 9*

கண்பனிக் குங்கை கூப்புங்கண் மூன்றுடை
நண்ப னுக்கெனை நான் கொடுப் பேனென்னும்
வண்பொ னித்தென் வலஞ்சுழி மேவிய
பண்ப னிப்பொனை செய்த பரிசிதே.

*திருவலஞ்சுழியும் 6 - 287 - 9*

*திருக்கொட்டையூர் திருத்தாண்டகம்*

வளங்கிளர் நீர்பொன்னி வலஞ்சுழியான் கண்டாய்
மாமுனிக டொழுதெழு பொற்கழலான் கண்டாய்.

9. *திருக்குடந்தை கீழ்கோட்டம் 6 - 289 - 5*

நீலவுரு வயிரநிரை பச்சை செம்பொ னெடும்பளிங்கென்
றறிவரிய நிறத்தாற் போலும்
கோலமணி கொழித்திழியும் பொன்னி நன்னீர்க் குடந்தைக் கீழ்
கோட்டத்தெங் கூத்த னாரே.

10. *திருவானைக்கா 6 - 276 - 6*

திரையாரும் புனற்பொன்னித் தீர்த்தமல்கு
திருவானைக் காவிலுறை தேனே."

*கடுவாய் (குடமுருட்டி)*

*கடுவாய்க்கரை புத்தூர் 5 - 176 - 3*

அன்பனை யடையாரிடர் நீக்கியைச்
செம்பொனை திகழுந் திருக்கச்சியே
கம்பனை கடுவாய்க் கரைதென் புத்தூர்
நன்பொனைக் கண்டுநா னுய்யப் பெற்றேனே,

,, ,, *5 - 176 - 8*

மாசார் பாசமயக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்த மணாளனைப்
பூச நீர் கடுவாய்க்கரை தென்புத்தூர்
ஈச னேயென வின்பத மாயிற்றே.

*(கொள்ளிடம் - கோவந்தபுத்தூர்)*
*கொள்ளிடக்கரை - கோவந்தபுத்தூர் அரிசில் ஆறு*
*அரிசிற் கரைபுத்தூர் 5 - 175 - 1*

முத்தூ ரும்புனல் முய்யரி சிற்கரைப்
புத்தூ ரன்னடி போற்றியென் பாரெலாம்
பொய்த்தூ ரும்புல னைந்தொடும் புல்கிய
மைத்தூ ரும்வினை மாற்றவும் வல்லரே.

,, ,, *6 - 301 - 4*

அரிசிற் பெருந்துறை யாட்சி கொண்ட
சிவபுரத் தெஞ்செல்வ னன்றுனே.

## 3. சுந்தரர் தேவாரம்

*1. காவேரித் தலங்கள் 1. திரு ஆனைக்கா*

உறையூர்ச் சோழன் மாலை தரித்துக்கொண்டு காவேரியில் ஸ்நானம் செய்தபோது அது நதியில் விழுந்துவிட, அவன், "சிவ பெருமானே கொண்டருளும்" என்று பிரார்த்திக்க அந்த மாலைப் பதக்கம் திருமஞ்சனக் குடத்திலே அகப்பட்டு அபிஷேகத் தின்போது ஸ்வாமியின்மேல் வீழ, அதனை சுவாமி அணிந்து அரசனுக்கு திருவருள்புரிந்த ஸ்தலம் திருவானைக்கா.

,, *3 - 311 - 7*

தாரமாகிய பொன்னித்தண்டுறை யாடிவிழுந்து
நீரினின்றடி போற்றி நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங்கொண்ட வெம்மானைக் காவுடை யாதியை நாளும்
ஈரமுள்ளவர் நாளும் எம்மையு மாளுடை யாரே.

என சுந்தரர் பாராட்டியுள்ளார்.

## திருவையாறு 7 - 77 - 7

மலைக்கண் மடவாளொரு பாலாய்ப்பற்றி
யுலகம் பலிதேர்வாய்
சிலைகொள் கணையாலெயிலெய்த செங்கண்
விடையாய் தீர்த்தன் நீ
மலைக்கொள்ளருவி பலவாரி
மணியுமுத்தும் பொன்னுங்கொண்
டலைக்குந் திரைக்காவிரிக் கோட்டத்தை
யாளுடை அடிகளோ

## 3. திருவிடைமருதூர் 7 - 60 - 10

அரைக்குஞ் சந்தனத்தோ டகிலுந்தி
யைவனஞ் சுமந்தார்த் திருபாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன் மேலிடை
மருதூறை யெந்தைபிரானை
உரைக்கு மூரனொளி திகழ்மாலையுள்ள
தாலுகந்தேத்த வல்லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையுமின்றி
நாதன்சேவடி நண்ணுவர்தாமே.

## 4. திருத்துருத்தி (குற்றாலம்) 7 - 74 - 2

கூடுமாறுள்ளன கூடியுங் கோத்துங்
கொய்புனலே னலோடை வனஞ்சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது மலையெனக்
குலைகளை மறிக்குமா றுந்தி
ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேன் நாயேன்
பாடுமாறறி கிலேனேம் எம்பெருமானைப்
பழவினையுள்ளன பற்றறுத்தானை.

## 7 - 74 - 3

கொல்லுமால் யானையின் கொம்பொடு
வம்பார் கொழுங்கனிச் செழும்
பயன்கொண்டு கூட்டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும்
போந்து தவம்செய்யும் போகரும்
[illegible]

செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்குடியுளார்
அடிகளைச் செடியனே ஞயேன்
சொல்லுமா றறுகிலேன் பெருமானைத்தருங்
கரும்பிணித்தொடர் வறுத்தானை.

இந்தப் பதிகத்தில் போகரும் யோகரும் காலையில் காவேரியில் ஸ்நானம் செய்ய வருகிறார்கள் என்று சொல்லப்படுவதால் காவேரியின் பெருமை வெளிப்படுகிறது.

3. காவேரியில் வரும் பொருள்கள் : சந்தனம், துண்டம் அகில், தினை, மலைநெல் (ஐவனம்) கோங்கம், மருதம், யானைக் கொம்பு, பழவகைகள், மிளகு, வேங்கைமலர், பொன்மணி, மாங்கனி, வாழைக்கனி, மராமரம், முத்து, கவரிமா மயிர், பளிங்கு, பெருமரம் முதலியவை. இவைகள் சுந்தரர் பதிகங்களில் முக்கியமாய் திருத்துருத்திப் பதிகத்தில் காவேரி வர்ணனை காணக் கிடைக்கும்.

*6. கொள்ளிடம் (காறுட்டு முள்ளூர்) 7 - 40 - 6*

விடையரவக் கொடியேந்தும் விண்ணவர்தங்கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுதலானும்,
அடியினையுந் திருமுடியுங் காணவரிதாய சங்கரனை
தத்துவனைத் தையல்மடவார்கள்
உடையவிழக் குழலவிழக் கோதைகுடைந் தாடக்குங்குமங்க
ளுந்திவருங் கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங்கழனி
காறுட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே.

## 3. மண்ணி நதி

*திருப்பழமண்ணி படிக்கரை 7 - 22 - 2*

வெண்டிங்கள் வெண்மழுவன் விரையார் கதிர்மூவிலைய
பண்டங்கள் மேயவிடம் பழமண்ணிப்படிக் கரையே.

*2. திருவாழ்கொளி புத்தூர் 7 - 57 - 2*

சடைக்கட் கங்கையைத் தாழவைத்தானைத் தண்ணீர்
மண்ணிக் கரையானைத் தக்கானை
மடைக்கண் நீலமலர் வாழ்கொளிபுத்தூர்
மாணிக்கத்தைமறந் தென்னினைக் கேனே.

*3. திருவாய்ப்பாடி (திருநாவுக்கரசு) 4 - 48 - 5*

"மந்தமாம் பொழில்கள் சூழ்ந்தமண்ணித் தென்கரைமேன் மன்னி
அந்தமோடள விலாத வடிகளாப் பாடியாரே."

## திருப்புகழ்

காவிரியின் பெருமையை விளக்கும் அருணகிரிநாதர் திருப்புகழ் சிலவற்றைக் காண்க.

சுவாமிமலை

குளிர்கான் மிகுத்த வளர்போதமுற்ற
வடபால்வாழ் குடகாவிரிக்கு
திருமாறனுக்கு மருகா வுமைக்கோர்
சிறுவாகரிக்கு மிளையோனே
திருவேரகத்தி லுறைவா யரக்கர்
சிரமே துணித்த பெருமாளே.
சூதமிகவளர் சோலை வரவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூரனுடலற வாரி சுவறிட
வேலைவிடவல பெருமாளே.
மனு நியாய சோணாடு
தலைமையாக வேமேலை
வயலி மீதுவாழ் தேவர் பெருமானே
மடல் சீற்றினி லெழ
விரைபூப் பொழில்செறி
வயலூர்ப் பதிதனில்

(வயலூரை பற்றிய திருப்புகழ்)

சோமனொ டரக்கன் மீனுலவுமிக்க
சோலைபுடை சுற்று வயலூரா
சக்ரதர அரிமருகா முருகா
உக்ர இறையவர் புதல்வா முதல்வா
தட்பமுளதட வயலூர் இயலூர் பெருமாளே.
பருசரங் கொஞ்சுங் கிளிவந்து வந்தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா.

(திருப்புகழ் - வயலூர் முருகன்)

வளை குலமலங்கு காவிரியின் வடபுறஞ் சுவாமி
மலைமிசை விளங்குதேவர் பெருமாளே.

(சுவாமிமலை, திருப்புகழ்.)

மதுகரமிடைந்து வேரி தருநறவ முண்டுபூச
மலர்வள நிறைந்தபாளை மலரூடே
வகைவகை யெழுந்து சாமவதி மறைவியந்துபாட
மதிநிழலிடுஞ் சுவாமி மலைவாழ்வே
ஏலமிலவங்க வர்க்க நாமம் வகுளம்படப்பை
பூகமுரு தந்தழைக்க கரவீரம்
யாவுமலை கொண்டு கைத்த காவிரிபுறம் சுற்றும்
ஏரகம மர்ந்தபச்சை மயில்வீரா.
நிறையதேன் விழு பூக்கொத்திலேகனி
கிழையதான் விழுகாயக் கொத்திலே மயில்
நடனக்கால் படுதோப்புக்குள்ளே வயல் கயலூடே
நதியைக்காவிரி யாற்றுக்குள்ளே வரு
வளமைச் சோழநன்னாட்டு குள்ளே ரக
நகரிற் சீர்பெறு மோட்சத்தையே தருபெருமாளே.
(சுவாமிமலை, திருப்புகழ் பாடல்கள்)

ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கம்பீர நாடாளு நாயக வயலூரா.

*10. திருவானைக்கா திருப்புகழ்*

மனித்தராதி சோறுடு தழைக்கமேவு காவேரி
மகப்ரவாக பானீயம் அலைமோதும்
மணத்த சோலைசூழ் காவை அனைத்துலோக மாள்வாரு
மதித்த சாமியே தேவர் பெருமாளே.
ஆவிச் சேல்கள் பூக மடலிள பாளைத்தாறு கூறுபட
உயராலை சோலைமலை வயலில்—உறைவோனே.

*12. கும்பகோணம் - நெரூர் - திருப்புகழ் பாடல்கள்*

(i) கொண்டல்சூழ்க் கழனி சங்குலாவிப்பரவு
கும்பகோணத்திலுறை பெருமாளே.
(ii) நிலவு சொரி விளைவயல்களு நெடுகிய
குடக தமனியு நளினமு மருவிய
நெருவூவ நகருறை திருவுருவழகிய பெருமாளே.

*காவேரி வர்ணனம்*

திவ்விய பிரபந்தத்திலிருந்து எடுக்கப்பட்டவை.

*பெரியாழ்வார்* திருமொழி,

1. வண்டுகளித் திரைக்கும் பொழில்சூழ்
வரும்புனற் காவிரித் தென்னரங்கன்.

## *2 - 9 - 11*

2. கன்னி நன்மாமதிள் சூழ்தருபூம்
பொழிற் காவிரித் தென்னரங்கம்.

## *3 - 3 - 2*

3. தோதவத்தித் தூய்மறையோர்
துறைபடியத் துளும்பியெங்கும்
போதில் வைத்ததேன் சொரியும்
புனலரங்க மென்பதுவே.

## *4 - 8 - 1*

4. சேவலொடு பெடையென்னம்
செங்கமல மலரேறி யூசலாடி
பூவணைமேல் துதைந்தெழுசெம்
பொடியாடி விளையாடும் புனலரங்கமே.
5. திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி
திரைக்கையாலாடி பள்ளிகொள்ளும்

பெருமாள் திருமொழி.

6. இலைத்தலை சரந்துரந் திலங்கைகட் டழித்தவன்
மலைத்தலைப் பிறந்திழிந்து வந்துநுந்து சந்தனம்
குலைத்தலைத் திறுத்தெறிந்த குங்கும குழம்பினோடு
அலைத்தொழுகு காவிரி யரங்கமேய வண்ணலே!

திருச்சந்த விருத்தம் – 54

7. பரந்துபொன் நிரந்துநுந்தி வந்தலைக்கும்
வார்புனல் அரங்கம்.

திருச்சந்த விருத்தம் - 51

8. வேயின் முத்தும் மணியுங் கொணர்ந்தார் புனற்காவிரி

பெரிய திருமொழி 5 - 4 - 9

9. புனைவளர் பூம்பொழிலார் பொன்னிசூழ ரங்கநகருள்

பெரிய திருமொழி 9 - 9 - 2

## *பெரியாழ்வார் திருமொழி*

### *திருவரங்கம் கோயிலின் மகிமை*

1. தோதவத்தித் தூய்மறையோர் துறைபடியத்
துளும்பி யெங்கும்
போதில்வைத்த தேன்சொரியும்
புனலரங்க மென்பதுவே.

2. ... ... ...
சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்க மென்பதுவே.

4. ... ... ...
தேன்தொடுத்த மலர்ச்சோலை திருவரங்க மென்பதுவே.

5. ... ... ...
குரவரும்ப கோங்கலரக் குயில் கூவும் குளிர்பொழில்சூழ்
திருவரங்கமென்பதுவே யென்திருமால் சேர்விடமே.

7. தழுப்பரிய சந்தனங்கள் தடவரை வாயீர்த்துகொண்டு
தெழிப்புடைய காவிரி வந்தடிதொழும் சீரரங்கமே.

### *9-ம் திருமொழி மரவடியை*

4. ... ... ...
பொதுநாயகம் பாவித் திறுமாந்து
பொன்சாய்க்கும் புனலரங்கமே.

5. .. .. ..
பூமருவிப் புள்ளினங்கள் புள்ளரையன்
புகழ்குழறும் புனலரங்கமே.

## *நாச்சியார் திருமொழி*

### 11-ம் திருமொழி தாமுக குந்தங்கை

6. .. .. ..
கைப்பொருள் முன்னமே கைக்கொண்டார்-காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச் செல்வனார்.

.. .. ..

## *குலசேகரப் பெருமாள்*

### 1-ம் திருமொழி இருளிய சுடர்மணிகள்

1. .. .. ..
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி
திரைக்கையாலடி வருடப் பள்ளிகொள்ளும்
கருமணியை கோமளத்தைக் கண்டுகொண்டேன்.

8. .. .. ..
காலார்ந்த கதிக்கருட னென்னும் வென்றிக்
கடும்பறவை யிவையனைத்தும் புறம்சூழ்காப்பச்
சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்.
.. .. ..

2 - ம் திருமொழி

3. ... ... ...
வன் பொன்னிப்பே
ராறுபோல்வரும் கண்ணநீர்கொண்
டரங்கன் கோயில் திருமுற்றம்.

8 - ந் திருமொழி - மன்னுபுகழ்

3. .. .. ..
கங்கையிலும் தீர்த்த மலிகண புரத்தென் கருமணியே!

6. .. .. ..
கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே!

8. .. .. ..
கலைவலவர் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே!

9. .. .. ..
களைகழுநீர் மருக்கலரும் கணபுரத்தென் கருமணியே!

10. .. .. ..
காவிரி நல்நதிபாயும் கணபுரத்தென் கருமணியே!

*தொண்டரடிபொடி ஆழ்வார், திருமாலை*
*திருவரங்கத்து எம்பெருமான் விஷயம்*

14. வண்டினை முரளும் சோலைமயிலின மாலும்சோலை-
கொண்டல் மீதணவும் சோலை குயிலினம் கூவும்சோலை
அண்டர்கோன மரும்சோலை.
... ... ...

18 இனி திரைத்திவலை மோதவெறியும் தன்பரவைமீதே-
தனிகிடந்தரசு செய்யும் தாமரை கண்ணனெம்மான்.
.. .. ..

23. கங்கையிற் புனிதமாய காவிரி நடவுபாட்டுப்
பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள்
... ... ...

37. தெளிவிலாகலங்கல் நீர்சூழ் திருவரங்களோங்கும்

## திருப்பாணாழ்வார்

3. சதுரமாமதிர் சூழிலங்கைக் கிறைவன்றலைத்
துதிரவோட்டி - ஓர்வெங்கணை
யுய்த்தவனோத வண்ணன்
மதுரமாவண்டுபாட மாமயிலாட
ரங்கத்தம்மான் திருவயிற்
றுதரபந்த மென்னுள்ளத்துள்
நின் றுளாகின்றதே.

## திருமங்கை ஆழ்வார்

### முதற்பத்து

.... .... ...

6. வம்புலாஞ்சோலை மாமதிள் தஞ்சைமாமணிக்
கோயிலே வணங்கி
நம்பிகாள் - உய்யநான் கண்டுகொண்டேன்
நாயணனென்னும் நாமம்.

2. .. .. ..
தூவி சேரன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனர் குடந்தையே
தொழுதுஎன் நாவினலுய்ய நான்கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

### 8 - ந் திருமொழி

3. ... ... ...
ஆளரியால் அலைப்புண்ட யானைமருப்பும் மகிலும்
அணிமுத்தும் வெண்சாமரையோடு—பொன்னிமலைப்
பண்டமண்டத்திரையுந்து நாங்கடர் மணிமாடக்
கோயில் வணங்கெண் மனனே!

### 9 - ம் திருமொழி

3. ... ... ...
எண்டிசையும் பெருஞ்செந்நெலிளந்
தெங்குகதலிஇலை கொடியொன்
குலைக்கமு கோடிகலிகளம் சொரிய

வண்டுபல விசைபாட மயிலாலு
நாங்கூர் வைகுந்த விண்ணகரம்
வணங்குமட நெஞ்சே!

*10 - ந் திருமொழி*

1. .. .. ..
பொருதுபுனல் துறை துறைமுத்து நதிநாமனத்தால்
மந்திரங்கள் நால்வேதம் ஐந்து வேள்வியோ
நடாவுங்கம் நவின்று கலைபயின்று - அங்
காமனத்து மறையவர்கள் பயிலுமணி நாங்கூர்
அரிமேய விண்ணகரம்
வணங்கும் மடநஞ்சே!

*நான்காம் பத்து*

*5 – ந் திருமொழி*

1. பூம்புனற் பொன்னி முற்றும்
புகுந்து பொன்வரண்ட எங்கும்
தேம்பொழில் கமழும் நாங்கூர்த்
திருமணி கூடத்தானே.

4. .. .. ..
மாங்கனி நுகர்ந்தமந்தி வந்துவண்டிரிய - வாழைத்
தீங்கனி நுகருநாங்கூர் திருமணிக் கூடத்தானே.

*4 - ம் பத்து. 9 - ம் திருமொழி*

*திருவிந்தளூர்*

10. ஏரார் பொழில்சூழிந்த ளூரிலெந்தை பெருமானே.

*திருவெள்ளியங்குடி*

.. .. ..

1, ... ... காய்த்த நீள்கமுகும் கதலியும் தெங்குமெங்குமாம்
பொழில்களினடுவே - வாய்த்த நீர்பாயும்
மண்ணியின் தென்பால்
திருவெள்ளியங்குடி யதுவே.

*ஐந்தாம் பத்து*

*திருப்புள்ளம் பூதங்குடி*

9. .. .. ..
மின்னுசோதி நவமணியும் வேயின் முத்தும் சாமரையும்
பொன்னும்—பொன்னி கொணர்ந்தலைக்கும்
புள்ளம்பூதங் குடிதானே.

## திருவெள்ளறை

1. .. .. ..
மன்றில் மாம்பொழில் நுழைதந்து மல்லிகை மௌவலின்
போதலர்த்தித்
தென்றல் மாமணம் கமழ்வருதிரு
வெள்ளறை நின்றானே!

## திருவரங்கம்

### 5 - ம் பத்து திருமொழி

1. ... ... ...
சந்திரேடு மணியும் கொழிக்கும் புனற்காவிரி -
அந்திபோலும் நிறத்தார் வயல்சூழ் தென்னரங்கமே.

3. ... .. ...
வண்டு பாடும் மதுவார் புனல்வந்திழி காவிரி
அண்டநாறும் பொழில் சூழ்ந்தழகார் தென்னரங்கமே.

4. ... ... ...
தொளைக்கையானை மருப்பும் அகிலுங் கொணர்ந்துந்திமுன்
திளைக்குஞ் செல்வப்புனற் காவேரிசூழ் தென்னரங்கமே.

9. ... ... ...
வேயின் முத்தும் மணியுங் கொணர்ந்தார் புனற்காவேரி
ஆயபொன் மாமதிற் சூழ்ந்தழகார் தென்னரங்கமே.

### 7 - ம் திருமொழி

10. பொன்னுமா மணியும் முத்தமும் சுமந்து
பொருதிரை மாநதி புடைசூழ்ந்து
அன்னமா டுலவு மலைபுனல் சூழ்ந்த
வரங்கமா நக ரமர்ந்தானே.

... ... ...

## திருமழிசை ஆழ்வார்

### திருச்சந்த விருத்தம்

கொண்டைகொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகின்
உண்டைகொண்டு அரங்க வோட்டி உள்மகிழ்ந்த நாதனூர்
நண்டையுண்டு நாரைபேர வாளைபாய நீலமே
அண்டைகொண்டு மேயும் அந்தணி ரரங்கமே.

ம் – 50

எண்திசைக் கணங்களும் இறைஞ்சியாடு தீர்த்தநீர்
வண்டிரைத்த சோலைவேலி மன்னு சீரரங்கமே.

*திருக்குடந்தை*

சாலிவேலி தண்வயல் தடங் கிடங்கு பூம்பொழில்
கோலமாட நீடுதண் குடந்தைமேய கோவலா,
... ... ... இரும்பொழில் சூழ்
நன்றுயபுனல் நறையூர் திருவாலி குடந்தை
தடம்திகழ் கோவல் நகர்—பெரிய திருமொழி. 2-ப. 4-தி. 1-பா.

குயிலாலும் வளர்பொழில்சூழ் தண்குடந்தை
கொந்தார் பைம்பொழில்சூழ் குடந்தை. 8-9-5.

தோடவிழ்நிலம் மணம் கொடுக்கும் சூழ்புனல் சூழ்குடந்தை
9-2-2.

...நெல்கவரி வீசும் செழுநீர் திருக்குடந்தை 5-8-1.

*திருக்கண்ணபுரம்*

திரை எடுத்து வருபுனல் சூழ்திருக்கண்ணபுரத் துறையும்.

*திருக்கண்ணமங்கை*

கழுநீர் மலரும் வயல் கண்ணமங்கை
களிவண்டறையும் பொழில் கண்ணமங்கை.

பெரியதிருமொழி.

*திருவெள்ளியங்குடி*

காய்த்தநீள் கமுகும் கதலியும் தெங்கும்
எங்கும் மாம்பொழில்களின் நடுவே
வாய்த்த நீர்பாயும் மண்ணியின் தென்பால்
திருவெள்ளியங் குடியதுவே. 4-10-1.

*8 - ம் திருமொழி. திருவழுந்தூர்*

மலைத்திகழ் சந்தகில் கனகமணியும் கொண்டுவந்துந்தி
வயல்கள் தொறும் மடைகள்பாய அலைத்துவரும்
பொன்னிவளம் பெருகும் செல்வத்திணியழுந்தூர்
......நின்று கந்தவமரர் கோவே.

... ... ...

தமிழ் இலக்கியங்களில் காவேரியின் சிறப்பு:—தமிழ் இலக்கியங்கள் காவேரியின் சிறப்பை தெய்வத்தின் மாறாத கருணை வெள்ளம் எனக் கூறியிருக்கின்றன.

பழங்காலத்துப் புலவர்கள் காவேரி, பாரத பூமியைப் புனித மாக்க வந்த தெய்வப் பெண் என்று வருணித்துள்ளார்கள். புராணங்கள் காவேரியின் அருள் செல்வத்தை கதைகளின் மூலம் புலப்படுத்தியுள்ளன. காவேரி தன் வெள்ளப்பெருக்கினால் ஜீவராசிகளின் வாழ்க்கைக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கரவாமல் அளித்து, மானிட வாழ்க்கையில் அறம், பொருள், இன்பம் இவைகள் குன்றாது பேணி வளர்க்கும் தாய்போல் விளங்குகிறாள்.

இலக்கியப் பகுதிகளில் சிலவற்றை இங்கு குறிப்பிட்டுள்ளோம்.

### *1. பட்டினப்பாலை 1 - 6 வரிகள்*

வசையில் புகழ்வயங்கு வெண்மீன், திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய களியுணவின், புட்டேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினும் தான்பொய்யா, மலைத்தலைஇய கடற்காவிரி.

*பொருள்:* வெள்ளி எனப்படும் நக்ஷத்திரமானது தான் செல்லுவதற்குரிய திசையாகிய வடக்கு செல்லாது தெற்கு நோக்கிச் சென்றாலும், வானம்பாடி என்னும் பறவை மழை துளி யாகிய உணவைப் பெறாமல் வருந்தும்படி மேகம் பொய்த்த பஞ்ச காலம் உண்டானாலும் தான் தவறாமல் காலந்தோறும் பெருக் கெடுத்து வருகின்றதும், குடகுமலையினிடத்தே தோன்றி கடலில் சென்று விழுவதுமான காவேரியாறு என்றும் நீர் வருவதின் தவறாத் தன்மையும் அந்த ஆறு தோன்றி விழும் இடமும் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

### *2. புறநானூறு*

புனிறு திர்குழவிக்கிலிருந்து பசும் பயிறுவளர்த்துபொன்கதிருக
ஆக்குபொன் கொழிக்கும் காவேரியே.

### *3. பத்துப் பாட்டு*

பொருநராற்று படையில் 238 - 248 வரிகளில் காவேரியின் மகிமையால் சோழநாடு நெற்களஞ்சியம் என்று விளக்கப்படு கிறது.

நரையும் நரந்தமும் அகிலுமாரமும்
துரைதரைதோறும் பொறையுயிர் தொழுகி
துரைத்தலைக் குறைப்புனல் வரைப்பகம்புகு தொறும்
புனலாடு மகளிற்கதுமெனக் குடையக்
கூளிக்குயத்தின் வாய்நெல்லரிந்து
சூடு கோடாக பிறக்கி நாடொறுங்
குன்றெனக்குவை இயக்குன்றுக் குப்பை
கடுந்தெற்று மூடையனிடம் கெடக்கிடக்குஞ்
சாலிநெல்லின் சிறை கொள்வேலி
யாயிரம் விளையுட்டாகக்
காவேரிபுரக்கு நாடுகிழவோனே.

## 4. - *சிலப்பதிகாரம்*

*நாடுகாண் காதையில்*: கடல்வனனெதிர்க் "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும் கயவாய் நெரிக்கும்", எனக் கூறி புனலொடு எப்பொழுதுமிருந்து நின்நாட்டைப் புனல் நாடென பெயர் எடுக்கசெய். நின்னுட்டில் "தாம்பியும், கிழாரும் வீங்கிசையேத்தமும்" ஒலிக்கவேண்டாம் என்று காவேரியை பற்றிக் கூறப்படுகிறது.

"சிலப்பதிகார ஆசிரியர், காவேரியாறு வாழிகாலம் வரை சோழநாட்டிற்கு தன் வற்றுத வளஞ்சுரக்கும் ஈகையினை அழகுற எடுத்து மொழிந்துள்ளார்."

"வாழி அவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும்
தாயாகி ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழிகாவேரி"

மற்றும் இளங்கோவடிகள் காவேரி தரும் வளத்தை சித்தரித்து காட்டுகிருர். (சிலப்பதிகாரம்)

"உழவர் ஒதை மதுகு ஒதை; உடைநீர் ஒதை; தண்பதங்கொள்
நடந்தாய் வாழி காவேரி விழவர் ஒதை சிறந்தார்ப்ப."

"மருங்குவண்டு சிறந்தார்ப்ப மணிப்பூவாடை அதுபோர்த்து
கருங்கயற்கண் விழிதொல்கி நடந்தாய் வாழிகாவேரி."

பூவார்சோலை மயிலாலப்புரிந்து குயில்களிசைபாடக்
காமர்மாலை அருகசைய நடந்தாய்வாழி காவேரி.

(*சிலப்பதிகாரம் - கானல்வரி 29*)

*பொருள் :* பூக்கள் நிறைந்த சோலைகளில் மயில்கள் கூட்டங் கூட்டமாக ஆடவும், குயில் அதற்கேற்ப இசைபாடவும் உள்ள பக்கங்களையுடைய காவேரி என்றும் மகளிர் காவேரி யம்மனை புதுநீர் பெருக்கின்போது தூபதீபங்காட்டி வழிபட்டு வழி யனுப்பும்போது இடும் பூமாலைகளை தாங்கிச் செல்லும் காவேரி யென்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

5. *மணிமேகலை* ஆசிரியராகிய சீத்தலை சாத்தனார் கூறுவ தாவது :

(i) "கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப்பாவை."

தமிழ் நாட்டின் வளத்துக்கு காவேரி காரணமாயிருப்பதால் தண்தமிழ்பாவை யெனக் கூறப்பட்டுள்ளது.

*மணிமேகலை*

(ii) துறக்க வேந்தன் துய்ப்பிலன் கொல்லோ
அறக் கொல்வேந்தன் அருளிலன் கொல்லோ
சுரந்துகாவேரி புரந்து நீர்பரக்கவும்
நலத்தகையின்றி நல்லுயிர் கெல்லாம்
அலத்தற் காலையாகியது ஆயிழை—

ஆசிரியர் "பாத்திரங்கொண்டு பிச்சைபுக்க காதை" என்ற பகுதியில், காவேரி எப்படிப்பட்ட காலத்தும் நீர்வளம் குன்றுத லில்லை யென்று அதன் சிறப்பை விளக்குகிறார்.

(iii) அதே நூலில், காவேரிப்பட்டின தேவதையான சம்பாதேவி காவேரியை வரவேற்கும்போது "காவேரி! ஆகாய கங்கை வேணவா தீர்த்த விளக்கே, வா" என்று சொல்வதாக கூறப் படுகிறது.

(ஜ்யோதிரும்ஷி ஆப:) என்ற வாக்குபடி காவேரி நெற்களஞ் சியம் பொற்களஞ்சியம் மட்டும் அல்லாமல் வருங்காலத்தில் மின்னொளி எடுத்து நாடெங்கும் மக்கள் விளக்கிட்டு ஒளி யைப் பரப்ப போகின்றது என்பதையும் அறிவிக்கின்றது போலும்!

6. செங்கதிர்ச்செல்வன் திருக்குலம் விளக்கும்
கஞ்சவேட்கையிற் காந்தமன் வேண்ட
அமரமுனிவன் அகத்தியன் தனது
காகம் கவிழ்த்த காவிரிப்பாவை
ஆனுவிசும்பின் ஆகாய கங்கை வேணவாத் தீர்த்தவிளக்கு.

## 7. திவாகரம்

காவேரியைப்பற்றி புகழுங்கால்,
''வருநற் கங்கை வடதிசைப் பெருமையும்,
தென்திசைச் சிறுமையும் போக்கி.''

எனக் கூறப்படுகிறது.

## 8. பாரதம்

'காவேரி யென்னத் தப்பா கருணை' என புகழப்படுகிறது.

## 9. கம்பராமாயணம்

(i) 'காவேரி நாடன்ன கழனிநாடு' என ஆசிரியர் கூறுகிறார். கோசல நாட்டின் சிறப்பைக்கூற வந்த கம்பர் நதியின் பெருமையால் விளக்குகிறார். காவேரி நதி பாய்கின்ற சோழ நாட்டைப் போன்ற 'கோசலநாடு' என்று நதியின் மூலமாய் நாட்டின் பெருமை விளக்கப்படுகிறது. நாட்டின் பெருமையை விளக்குவதற்கு எடுத்துக் காட்டாக நிற்பது காவேரியே. நதி என்றாலே காவேரி நதியை தான் குறிக்கும். அது அத்தகைய சிறப்புவாய்ந்தது. சங்கல்பம் செய்து கொள்ளும்போதுகூட சிறு வாய்க்காலாக இருந்தாலும் 'காவேரி நீரே' என்று கூறுவதை நாம் இன்றும் பழக்கத்தில் வைத்துக்கொண் டிருக்கிறோம்.

(ii) அகத்தியப்படலம்

''கன்னியில வாழைகனி யீவகதிர்வாலின்
செங்நெலுள தேனொழுகு போதுமுளதெய்வம்
பொன்னியென லாயபுனலாறு முளபோதா
அன்னமுள பொன்னிவளொடன் பின்விளையாட.''

என்று கூறுமிடத்து, தாய்நாட்டுப் பற்றுடைய கம்பர் புண்ணியத் தன்மை பொருந்திய காவேரி நதியை 'தெய்வப் பொன்னி' என குறித்துள்ளமையால் காவேரியின் ஏற்றம் புலனாகும்.

(iii) கம்பராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம் - நாட்டை விட்ட படலம். 29

சுக்ரீவன் சீதையைத் தேடும்படி வானரர்களை தென்பால் சென்று பார்க்கவேண்டிய இடங்களைக் குறிப்பிடுகையில் காவேரி பிரதேசத்தை குறிப்பிடுகிறார்கள்.

.. .. ..
.. .. அதற் பிள்ளையவை நளிநீர் பொன்னிச்
சேடுறு தண்புனற் றெய்வத் திருநதியின்
யிருகரையுஞ் சேர் திருமாதோ,''

(iv) கம்பர் அகத்திய படலத்தில் அகத்திய முனிவனது சிறப்புக்களைப் பற்றி கூறுமிடத்து,

"எண்டிசையும் ஏழுலுலகம் எவ்வுயிர்க்கும் வுய்யக்
குண்டிகையினில் பொருஇில் காவேரி கொணர்ந்தீன்."

என்று புகழ்கின்றார். இதன்மூலம் காவேரியானது எட்டு திக்குகளும், ஏழுலுலகங்களும், அவற்றிலுள்ள எல்லா உயிர்களும் நற்கதி அடையும்படி ஒப்புயர்வற்றுத் தவழ்ந்து செல்கின்றது என்பது தெள்ளெனத் தெரிகிறது.

(ஆரணிய காண்டம் - அகத்தியப் படலம் - 46-ம் செய்யுள்.)

*10. சேக்கிழார்*

பெரிய புராணத்தில் காவேரி நதியை பூமகளின் மார்பில் திகழும் முத்துமாலையாக வர்ணிக்கிறார்.

1. "ஆதி மாதவமுனி யகத்தியன்தரு
பூதநீர்க்கமண்டலம் பொழிந்த காவேரி
மாதர் மண்மடந்தை பொன்
மார்பிற் ருழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத்தாம மொக்குமால்."

2. திங்கள் சூடியமுடிச் சிகரத்துச்சியிற்
பொங்கு வெண்டலை நுரைபொருது போதலால்
எங்கணுயகன் முடிமிசை நின்றேயிழி
கங்கையாம் பொன்னியாங் கன்னிநீத்தமே.

3. மாவிரைத் தெழுந்தார்ப்ப வரைதரு
பூவிருத்த புதுமதுப் பொங்கிட
வாவியிற் பொலிநாடு வளந்தரக்
காவேரிப்புனல் கால்புரந் தோங்குமால்.

(v) மற்றும் சில புலவர்களின் சிறப்புரைகள்.

(i) ஔவை பிராட்டி, சோழன் ஔவையை நோக்கி நீ எங்கிருந்து வந்தாய் என்று கேட்க, அம்மையார் சொல்கிறாள்.

... ... ...
... ... கூனல்
கருந்தேனுக்குக் கண்ணுறந்த காவேரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கேயிடம்."

அதாவது சங்கினங்கள் காவேரி நதியின் மருங்கிலுள்ள மலர் சோலைகளில் வாழ்கின்ற மேன்மையுடைய செழுந் தேனை நோக்கி வளம்பொருந்திய காவேரி தீரத்தில் சஞ்சரிக்கின்றன என்பதை சொல்கிறாள்.

மற்ருெரு சமயம் சிலம்பி என்னும் தாசிக்கு கம்பன் பொன் வாங்கிக்கொண்டு எழுதிக்கொடுத்த அரைப்பாடலை ஔவை பிராட்டியார் கூழுக்காகப் பூர்த்தி பண்ணிப் பாடினுள். முதல் இரு அடிகள் பின்வருமாறு:

"தண்ணீருங் காவேரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவதும் சோழமண்டலமே."

... ... ...

மற்ருெரு இடத்தில் 'சோழவள நாடு சோறுடைத்து' என்றும் கூறுகிருர்.

*ஒட்டக்கூத்தர்*

வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்துளியோ டிறங்குஞ் சோணாடா.

*பொருள்:* காவேரி நீர் பிரவாகத்தில் கோபங்கொண்ட வாளை மீன்கள் வேலிகளாக அமைந்துள்ள கமுக சோலைகளின் மீதேறி துள்ளி மேகபடலத்தை பிளந்து மழை துளியோடு இறங்கும் சோழநாடு.

(iii) *புகழேந்திப் புலவர்*

பங்கப் பழனத்து முழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறிய குரங்கிள நீர்தமைக்கொண் டெலியுந்தமிழ்நாடா."

நீர்வளமும் சோறும் பொருந்திய காவேரி தீர கழனிகளில் உழவர்கள் சுவை நிறைந்த பலாபழங்களை குரங்குகள் பிடுங்கின வென்று கழனிகளில் விளைந்த சங்குகளைக் கொண்டு வீசவும், குரங்குகள் இளநீர்தமைகொண்டு எறிகின்ற பிரதேசத்தை யுடைய சோழநாடு என்று கூறப்படுகிறது. மற்ருெரு சமயம் புகழேந்திப் புலவர் காவேரி கரையிலமர்ந்துள்ள திருநெய்தானத் துப் பெருமானை புகழ்ந்து பாடுகையில் காவேரியின் சிறப்பைக் குறிப்பிடுகிருர்.

... ... ... ...

வட்டா நெட்டோ டைப்பாரைச்சேல் மைப்பூ ...
கத்தே றித்தா விப்போய்
நெற்ருளுற்ருலைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தானைத் தியானித்தே.

*பொருள்:* நீர் வற்றுதலில்லாத ஓடைகள். பாரை என்னும் மச்சங்கள், மேகத்தை தொட்டுள்ள கமுக விருக்ஷங்கள் மச்சங்கள் மேலே தாவிப் பாக்கு குலைகளை உதிரும்படி செய்கின்றன. பின்னர் திரும்பி நெல் வயல்களில் தாளடியில் வீழ்

கின்றன. மீண்டும் கரும்பாலைகளின் பாகு வெள்ளத்திற் பாய்ந்து விளையாடுகின்றன. இவ்வளவு காட்சிகளுடன் பொருந்திய இடத்தில் கோயில் கொண்டருளிய திருநெய்த்தானத்தான் சிவ பெருமான் எனப் புகழ்கிறார்.

## சொக்கநாதப் புலவர்

இவர் தொண்டை நாட்டில் பிறந்தவராயினும் அவருடைய தனிப்பாடல்களில் ஒன்றில் திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் துதிக்கும் வகையில் காவேரியின் சிறப்பையும், உருப்படுத்தியிருக்கிறார்.

அவர் சொல்லுவதாவது குளிர்ச்சி பொருந்திய குவளை மலர் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த காவேரி நதி பாய்கின்ற சோழ நாட்டில் ஓர் அதிசயம் உண்டு. கண்ணெதிராக நாரையின்மீது வெண்காடைக்கு இடப்புறத்தே பசுமையாகிய அன்னப்பறவை சேர்ந்திருப்பதையும் பார்த்தோம் என்கிறார்.

சிவபெருமானின் வெள்ளை எருது திருவெண்காட்டு சிவ பெருமான் - பச்சை அன்னம் பார்வதிதேவி என்றும் பொருள் படும்.

## காளமேகப் புலவர்

ஒரு சமயம் புலவர் காவேரியாற்றுக்கும் ஆட்டக் குதிரைக்கும் சிலேடையிட நேர்ந்தது.

''ஓடுஞ்சுழி சுத்த முண்டாகுந் துன்னவரைச்
சாடும் பரிவாய் தலைசாய்க்கும்—நாடறிய
தேடுபுகழான் திருமலைராயன் வரையில்
ஆடுபரி காவேரி யாமே.''

நீர் விரைவாயோடும், நீர் சுழியுமுடையதாகும், சுத்தம் உண்டாகும், ஸ்நானம் செய்பவருக்கு உள்ளும், புறமும் தூய தன்மையை அளிக்கும், மலர்களை மோதி ஒதுக்கும், உயர்ச்சியுள்ள அலைகளை பக்கங்களில் வீசும். இது ஆற்றைப் பற்றிய வரையில் உள்ள பொருளாகும்.

# காவேரி வளர்த்த மகான்கள்

1. எக்குலத்தாராயினும் பக்தியின் பெருமை கொண்டு பரமனடி சேர்ந்தோர், நாயன்மார்கள், ஆழ்வாராதிகள். இவர்களைப்பற்றிய சரித்திரங்கள் எழுதப்படாமல் குறிப்பிடப்பட்டுள்ளது.

2. காவேரிதீர தெய்வப் புலவர்களில் சிலர் : கம்பர், கோபால கிருஷ்ண பாரதியார், காளமேகப் புலவர், அருணசலக் கவிராயர், தாயுமானவர், பட்டினத்தார், ஒட்டக்கூத்தர்.

3. காவேரிதீர சங்கீத மும்மூர்த்திகள்.

4. யதீந்திரர்கள்: முக்யமாய் 11 மகான்கள். அவர்களில் நால்வர் சரித்திரங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

5. கிருஹஸ்தாசிரமம் பெற்று *வேதசாஸ்திர விற்பன்னர்களாய்,* எளிய தூய்மை வாழ்க்கையுடன் இராஜசேவை, சமூக சேவை, கலைச்சேவை முதலியவைகளுக்காக பாடுபட்ட மகான்கள், ஸ்ரீ கோவிந்த தீக்ஷதர், ஸ்ரீதர அய்யாவாள், ஸ்ரீராஜு சாஸ்திரிகள்-ஸ்ரீசேஷய்யா சாஸ்திரிகள்.

காவேரிக் கரையிற் பிறந்தோ, காவேரி மருங்கில் வளர்ந்தோ, காவேரி புனித நீரில் ஆடி, நீரைப்பருகி, தலங்களில் வாசம் செய்து பரமனைப் பக்தியுடன் பூஜித்தோ, கலை, கல்வித் துணை கொண்டு எல்லோரும் உய்யும் வழியில் பணிசெய்து கிடப்பதே தாம் எடுத்த ஜன்ம ஸாபல்யம் என்று வாழ்ந்தோ உள்ள மகான்களில் சிலரை இந்த அத்தியாயத்தில் தொகுத்துள்ளோம். அவர்களில் பலரைப்பற்றி நாம் அடிக்கடி கேட்டும் படித்தும் இருக்கிறோம். அம்மகான்களை இங்கும் நாம் குறிப்பிட்டும் நமக்கு அதிகம் அறிமுகமாக்கப்படாத ஒரு சிலரைப்பற்றி மட்டும் விவரித்துள்ளோம்.

பக்தி முதிர்ந்து ஞானம் பெற்று பரமனை எக்குலத்தாரும் தடையின்றி அடையலாம் என்பதற்கு நாயன்மார்கள், ஆழ்வாராதிகள் சரித்திரங்களே பெரிய சான்றுகும். கீழ்க்கண்ட மகான்கள் காவேரி தீரத்தில் அமைந்துள்ள க்ஷேத்திரங்களில் பதிகங்கள் பாடியும், பல விடங்களில் காவேரி நதியின் தெய்வத்

தன்மையைப் புகழ்ந்தும், பாமர ஜனங்களைப் பக்தி மார்க்கத்தில் ஈடுபடச் செய்தும் ஜன்மம் உய்யுமாறு சன்மார்க்கத்தைக் காட்டியுள்ளார்கள்.

ஞானசம்பந்தர், சுந்தரர், அப்பர் சுவாமிகள், இயற்பகை நாயனர், அமர்நீதி நாயனர், கணநாதர், சிறுத்தொண்டர், முருக நாயனர், சண்டேசுர நாயனர், காரைக்கால் அம்மையார், குங்கிலியக்கலய நாயனர், திருநாளைப் போவார், அப்பூதியடிகள், திருமூலநாயனர், சோமாசிமாறநாயனர், கோச்செங்கட்சோழன்; திருப்பாணழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், திருமங்கையாழ்வார், முதலியோர்.

(2) தெய்வப் புலவர்களாகிய கம்பர், பட்டினத்தார், தாயுமானவர், காளமேகப்புலவர் முதலான மகான்கள் காவேரியின் தெய்வத்தன்மையை உணர்த்தி பக்தி நெறியைப் புகட்டியுள்ளார்கள்.

(3) சங்கீதக் கலையை திவ்ய கருவியாகக்கொண்டு பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்து பரமனை மனதாரத் துதித்து, வாயாறப் புகழ்ந்து பாமாலை சூட்டிய மகான்கள் பலர். அவர்கள் காவேரிதீரத்தை உறைவிடமாகக் கொண்டு ஜனங்களுக்கு சேவை செய்த பெருமை காவேரித்தாயின் பெருமையென்றே சொல்ல வேண்டும். அவர்களில் கோவிந்த தீக்ஷதர், வேங்கடமகி, ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள், ஸ்ரீ சியாமா சாஸ்திரிகள், ஸ்ரீ முத்துஸாமி தீக்ஷதர், அருணசலக்கவிராயர், கோபாலகிருஷ்ண பாரதியார், முதலானவர்கள் முக்கியமாகும்.

(4) மற்றும் சில மகான்கள் துறவறம்பூண்டு, மெய்ஞ்ஞானம் பெற்று தங்களைச் சூழ்ந்துள்ள மக்களைத் தூய்மைப்படுத்த வேத சாஸ்திரங்களை பிரகடனம் செய்து, சமரஸ மார்க்கத்தை அறநெறி தவருமல் கிரகஸ்தாசிரமத்திலிருந்து நடத்தவேண்டிய முறைகளையும் உபதேசம் செய்தார்கள். அவர்கள் சித்தம் தெளிந்து, ஞான ஒளிபெற்றது காவேரிதீர வாஸமேயென்று சொல்வது மிகையாகாது. அவர்களில் சிலரைக் கீழே குறிப்பிட்டுள்ளோம்.

1. ஸ்ரீமத் போதேந்திர ஸ்வாமிகள் கோவிந்தபுரம் (1692)
2. ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

3. ஸ்ரீமத் சதாசிவபிரும்மேந்திராள்
திருவிசைநல்லூர் & நெரூர் (1630)

4. ஸ்ரீபிரும்மேந்திர ஸரஸ்வதி பழமானேரி

5. ஸ்ரீராமபிரும்மேந்திர ஸரஸ்வதி கண்டமங்கலம்

6. ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள்
வரகூர் & திருப்பூந்துருத்தி

7. மருதாநல்லூர் சத்குரு சுவாமிகள்

8. ஸ்ரீ வரகூர் ஸ்வாமிகள் வரகூர்

9. ஸ்ரீ கோபால தீர்த்தாள் கணபதி அக்ரகாரம்

10. ஸ்ரீ கிருஷ்ணேந்திர ஸரஸ்வதி கணபதி அக்ரகாரம்

11. ஸ்ரீ வாஸுதேவ பிரம்மேந்திர ஸரஸ்வதி
கணபதி அக்ரகாரம்

12. ஸ்ரீ விஜயேந்திர சுவாமிகள் கும்பகோணம்

(5) ஒரு சிலர் வேதசாஸ்திர விற்பன்னர்களாய், அற நெறியை அடிப்படையாகக்கொண்டு கிரஹஸ்தாசிரமத்தை காவேரி தீரத்தில் எளியவும் தூய்மையும் கொண்ட முறையில் நடத்தி பாமர ஜனங்களுக்கு வழி காட்டியாக வாழ்ந்தவர்கள். அவர்களுடைய பக்தியும் ஞானமும் ஜனசமூகத்தின் க்ஷேமத் திற்கும், வாழ்வின் உண்மையான ஏற்றத்திற்கும் அர்ப்பணம் செய்யப்பட்டன. அவர்கள் எழுதிய உயர்ந்த கிரந்தங்கள் ஆண்டவனைச் சுலபமாய் அடைய வழிகாட்டிகளாக இன்றும் இருக்கின்றன. வேதசாஸ்திரங்களை பாமர ஜனங்கள் அறியும் வண்ணம் உபன்யாஸங்கள் மூலம் அறிவு புகட்டிவந்தார்கள். இத்துறையில் சேவை செய்த மகான்களில் ஸ்ரீ கோவிந்த தீக்ஷ தரை நாம் முதன்மையாகக் கூறலாம். இவர் அரசாங்க விஷயங் களில் ஈடுபட்டு, ஆனல் பற்றற்றவராய், தம் கடமைகளில் வழுவாது நீதிநெறி மார்க்கத்தில் அநேக வருஷங்கள் ஜனங் களின் க்ஷேமத்திற்காக பாடுபட்ட மகான். இவர் காவேரி தீரத்தில் வாசம் செய்தவர். ஸ்ரீதர அய்யாவாள், ஸ்ரீ தியாகராஜ மகி என்ற பிரும்மஸ்ரீ ராஜு சாஸ்திரிகளும் கிருகஸ்த தர்மத்தி லிருந்து கொண்டு உயர்வற உயர்நலம் பெற்ற மகான்கள். மேற்கூறிய மகான்கள் வகையில் உள்ள எல்லா அம்சங்களையும் ஒன்று திரட்டிப் பேருருவாய், யதீந்த்ரராய், தோன்றி தற்காலம் பாரதத்தின் ஜன ஸமூகத்தின் க்ஷேமத்திற்காக தங்கள் இடையரு தபஸினுலும், கர்மா, பக்தி, ஞானம் என்ற துறைகளில் காலத்திற்

கேற்ற வழிகளை வகுத்து ஜனங்கள் ஈடுபட்டுச் செல்லுமாறு இனிய, தெளிவான உறுதியான உபதேச மொழிகளாலும், ஞான விளக்காய், வாழ்க்கைப் படகை தடுமாறாமல் செலுத்த உதவும் மாலுமியாய், இறைவன் தாளன்றி வேறு ஒன்றும் உற்ற துணை யாகாது என்று அறைகூறும் குருவாய் விளங்கும் மகான், ஸ்ரீஜகத் குரு ஸ்ரீ பரமாசாரியாளான சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஆவர். அவரும் தெய்வப் பொன்னி ஈன்றெடுத்த தவப்புதல்வர்தான்.

(6) மேற்கூறிய மகான்களில் சில பெரியார்களை மட்டும் இங்கு விவரிப்பது காவேரித் தாயின் பெருமையைப் புலப்படுத்துவ தாகும்.

*யதீந்திரர்கள் :*

1. ஸ்ரீமத் போதேந்திர ஸ்வாமிகள்.
2. ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திராள்.
3. ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள்.
4. ஸ்ரீ விஜயேந்திர ஸ்வாமிகள்.
5. மருதாநல்லூர் சத்குரு சுவாமிகள்.
6. ஸ்ரீ ஜகத்குரு சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்.

*தெய்வக் கலைஞர்கள் :*

7. சங்கீத மும்மூர்த்திகள்.
8. கோபாலகிருஷ்ண பாரதியார்.
9. அருணாசலக் கவிராயர்.

*தெய்வப் புலவர்கள் :*

10. (a) கம்பர், (b) காளமேகப் புலவர், (c) ஒட்டக்கூத்தர், (d) தாயுமானவர், (e) பட்டினத்தடிகள்.

*கிரஹஸ்தாசிரமம் பெற்று தர்ம பிரசாரம் சமூக சேவை செய்த மகான்கள் :*

11. ஸ்ரீ கோவிந்த தீக்ஷதர்.
12. ஸ்ரீதர அய்யாவாள்.

13. ஸ்ரீ தியாகராஜ மகி என்ற ஸ்ரீ மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள்.

14. ஸ்ரீ சேஷய்யா சாஸ்திரிகள்,

*அத்தியாயம*

# காவேரிதீர யதீந்திரர்கள்

## பகவந்நாம போதேந்திர சுவாமிகள் (1692)

சுமார் 250 வருஷங்களுக்குமுன் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடத்தில் 58-வது பட்டம் பெற்று அலங்கரித்த ஆத்ம போதேந்த்ர ஸரஸ்வதி அவர்களிடம் கேசவ பாண்டுரங்கர் என்ற ஒரு பிராம்மணர் கைங்கர்யம் செய்து வந்தார். அவருக்கு வெகு காலம் வரை புத்திரசந்தானம் ஏற்படவில்லை. பிறகு இறைவன் திருவருளால் ஓர் ஆண் குழந்தை உண்டாயிற்று. இக்குழந்தை காஞ்சியில் மண்டனமிச்ரர் அக்ரகாரத்தில் பிறந்து அக்குழந் தைக்குப் புருஷோத்தமன் என்ற நாமம் சூட்டப்பட்டது. குழந் தையை தம் குருநாதரிடம் காட்ட மடத்திற்கு எடுத்து வந்தார். குருநாதர் அக்குழந்தையை மடத்திற்கு அர்ப்பணம் செய்யும்படிக் கேட்டார். அவ்வந்தணரும் அதற்கு இசைந்தார். புருஷோத்தமர் இளம்வயதிலேயே பகவானிடம் பக்தியோடு தம் சேவையைச் செய்துகொண்டு, 15 வயதுக்குள் வேத, தர்ம, சாஸ்திரங்களை அப்யஸித்து ஸர்வமும் கற்று வந்தார்.

சில வருடங்கள் கழிந்தன. அப்பொழுது ஸ்ரீ ஜகத்குரு காசியாத் திரை சென்ற சமயம்; புருஷோத்தமரும் தம்முடன் முன்பு வேதாத்ய யனம் செய்தவனும், பதினைந்து வயதேயுள்ள மாணவனையும் கூட அழைத்துக்கொண்டு புறப்படும்போது, அவரும் அவருடைய சகா வும் வழியில் அவர்களிருவரில் யாராவது இறக்கும்படி நேர்ந்தால் மற்றவரும் தம் உயிரைத்தியாகம் செய்வதாகச் சங்கல்பம் செய்து கொண்டார்கள். நடுவழியில் சிறுவன் காலமானதைக் கண்டு புரு ஷோத்தமன் தம் சகாவுக்கு கர்மாவைச் செய்துமுடித்தார். பிறகு காசிக்குச் சென்று குருநாதரை சேவித்து தம் சரீரத்தையும் கங்கையில் தியாகம் செய்ய புருஷோத்தமன் தீர்மானித்தார்.

காசியில் ஆசார்யாளைத் தரிசித்து தம்முடைய ஸங்கல் பத்தை தெரிவித்ததும், ஆசாரியாள், 'நீ ப்ராண த்யாகம் செய்ய வேண்டாம். ஸன்யாஸம் வாங்கிக்கொண்டால் மறுஜன்மா வந்து விடுகிறது. ஸன்யாஸம் செய்துகொண்டால், தர்ம சாஸ்தி ரத்தை ஒட்டிச் சத்தியத்தை காப்பாற்றியதாகும்' என்று உப தேசித்தார். புருஷோத்தமனும் அப்படியே ஸன்யாஸம் பூண்டு பகவன்நாம போதேந்திராள் என்ற யோகபட்டம் பெற்று ஆசார்ய ஆக்ஞைப்படி, காஞ்சிக்குத் திரும்பிச் சென்றார். போகும் வழியில் ஜகந்நாதத்தில் தங்கி அன்றிரவு ஒரு வீட்டுத் திண்ணையிலேயே படுத்துக்கொண்டிருந்தார். அந்த வீட்டில் லக்ஷ்மீதரரின் பத்தினியும் புத்திரனும் இருந்தார்கள். லக்ஷ்மீதரர்

காலமாய் விட்டார். நடு இரவில் ஒரு பிராம்மணன் அந்த வீட்டிற்கு வந்து வீட்டிலிருப்பவர்களை எழுப்பி தம் கதையைச் சொன்னார். அதாவது அப்பிராமணன் தம் மனைவியுடன் காசிக்குச் செல்லும் வழியில் ஒரு சத்திரத்தில் தூங்கிக்கொண்டிருந்ததாயும் யாரோ ஒரு இதர மதஸ்தன் அவர் மனைவியை அபகரித்துக்கொண்டு போய்விட்டதாயும், எங்கும் தேடியும் அகப்படவில்லை என்றும், சில காலம் கழித்துத் திரும்பி வருங்கால் ஏதோ ஒரு நதிக்கரையில் அவளைச் சந்தித்ததாயும், அவள் தன்னுடைய துர்கதியை நினைந்து செயலற்ற நிலையைச் சொல்லி புலம்பியதாயும், தன்னை ஒரு வேலைக்காரியாகவாவது வைத்து ரக்ஷிக்கும்படி வேண்டிக்கொண்டதாயும் தெரிவித்தார். விதிப்படி பிராயச்சித்தம் செய்து அவளை சேர்த்துக்கொள்ள சாஸ்திரம் இடம் கொடுக்கிறதா என்பதை அறிவதற்காகத்தான் அங்கு வந்திருப்பதாயும் தெரிவித்தார். அப்பொழுது லக்ஷ்மீதரருடைய புத்திரன் ராமநாமத்தை மூன்றுதடவை அவள் வாயால் உச்சரித்தால் இந்த நிலைக்குத் தகுந்த பரிகாரம் ஆகும் என்று சொன்னார். அச்சமயம் இதைக் கேட்டுக்கொண்டிருந்த அவருடைய தாயார் ராம நாமத்தை ஒருதரம் சொன்னாலே போதுமென்று தன் கணவன் சொல்லக் கேட்டிருப்பதாய்ச் சொன்னாள். விழித்தபடியே இந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த போதேந்திராள், எழுந்து, 'இதற்கு ஆதாரம் உளதா?' என வினவினார். லக்ஷ்மீ தரரின் புத்ரன் தன் தகப்பனார் எழுதிவைத்திருந்த 'பகவந்நாம கௌமுதி' என்ற கிரந்தத்தை போதேந்திராளுக்குக் காட்டினார்.

பொழுது விடிந்ததும், அந்த ஊரிலுள்ள குளத்தில், இரவில் வந்த பிராம்மணர் தன் மனைவியை ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டு ஸ்நானம் செய்யும்படிச் சொல்ல, அந்த அம்மாள் அப்படிச் செய்தவுடன், முன்போலவே, தோடுடைய செவியுடனும், நெற்றியில் குங்குமப் பொட்டுடனும், பழைய புடைவையை உடுத்தியவளாயும் விளங்கினாள். பிரத்யக்ஷமாய் ராமநாம மகிமையைக்கண்ட யாவரும் ஆச்சர்யமடைந்தார்கள். அன்று அவள் கையாலேயே பிக்ஷை ஏற்றுக்கொண்டு அவர்களிடமிருந்து அப்புஸ்தகத்தின் ப்ரதி ஒன்றும் வாங்கிக்கொண்டு போதேந்திராள் காஞ்சி வந்து சேர்ந்தார்.

குருவும் காசியிலிருந்து காஞ்சிக்கு வந்து பகவந்நாம போதேந்திராளை பீடாரோஹணம் செய்வித்தார்கள். பின்னர், போதேந்திராள் (59) ஆசாரிய சுவாமிகளாக பீடாரோகணம்செய்து பகவன்நாம மகிமையை சுமார் 50 வருஷங்கள் எங்கும் பக்தர்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருந்து, பகவந்நாம மகிமையை விவரிக்கும் அநேக கிரந்தங்களைச் செய்தார்கள்.

ஸ்ரீ ஜகத்குரு போதேந்திராளும் அவரது குருவாகிய விசுவாதி கேந்திர ஸரஸ்வதி சரணரும் இராமேசுவர யாத்திரைக்குச் செல்லுகையில், கெருடநதி தீரத்தில் விசுவாதிகேந்திர ஸரஸ்வதி சித்தியடைந்தார்கள். ஸ்ரீமத் போதேந்திர சரணர் குருவின் மனோரதமாகிய இராமேச்வர யாத்ரையைப் பூர்த்திசெய்து, திரும்பி வருகையில் திருவிடைமருதூர் க்ஷேத்திரத்தில் இருந்துகொண்டு, திருவிசைநல்லூர் ஸ்ரீதர அய்யாவாளின் மகிமையை அறிந்தார். அறிமுகம் ஏற்படுத்தப்பட்டு அவர்கள் இருவரும் சிலகாலம் பகவன்னாம கீர்த்தனம் செய்துகொண்டு ஆனந்த பக்தர்களாய் வாழ்ந்தார்கள்.

பிறகு இருவரும் பிரம்பூர் என்ற கிராமத்திற்கு விஜயம் செய்து சிலநாட்கள் தங்கினார்கள். அங்கு ஒரு தினம் ஓர் ஊமைப் பையனை பேசும்படி அருள்புரிந்தார். அந்தப் பையனும் இராம பஜனை பண்ணத் தொடங்கினான். அந்த ஊரில் ஒரு ஆஞ்சனேயஸ்வாமி பிரதிஷ்டை செய்தார்கள். அவ்விடமிருந்து ஒருநாள் கோவிந்தபுரத்தில் பிக்ஷை செய்யப் போனார்கள். அவ்விடத்தில்தான் சாலிவாகன சகாப்தம் 1614 பிரஜோத்பத்தி வருஷம் ப்ரோஷ்டபத மாதம், பூர்ணிமை திதியில் சித்தியடைந்து பிரும்ம ஸ்வரூபமாய் விளங்குகிறார்கள். இது இன்றைக்கு 270 வருஷங்களுக்கு முன் நிகழ்ந்தது.

திருவிடைமருதூருக்குச் சமீபத்திலிருக்கும் கோவிந்தபுரம் என்ற கிராமத்தில் 1692-ம் ஆண்டில் நிர்விகல்ப ஸமாதி அடைந்தார். புரட்டாசி மாதம் மாளயபக்ஷத்தில் 'யதிமகாளயம்' என்று கூறப்படும் கிருஷ்ணபக்ஷ துவாதசியில் வருஷந்தோறும் பகவந்நாம போதேந்த்ராளின் ஆராதனை அவ்வூரில் இன்றும் நடைபெறுகிறது. பக்திமார்க்கத்தில் ஈடுபாடுடையவர்கள் அங்குள்ள பிருந்தாவனத்தில் கூடி, வருடாவருடம் ஆராதனையை மிகச் சிறப்புடன் நடத்தி வருகிறார்கள்.

## 2. ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர்கள்

*(திருவிசைநல்லூர்) 1630 (நெரூர்)*

இவர்கள் காவேரி தீரத்தில் அவதரித்து பால்யத்திலேயே திருவிசைநல்லூர் கிராமத்திலேயுள்ள மஹாவித்வான்களிடம் வித்யாப்யாஸம் செய்தார்கள். பால்யத்தில் வேதாத்யயனம் செய்தபின், யோகமார்க்கத்திலும், ஆத்ம ஞானத்தை நாடும் வேதாந்த விசாரத்திலும் தமக்குத் தகுந்த குரு காமகோடிபீடத்தில் 57-வது பட்டத்தை அலங்கரித்த ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி அவர்கள் என்று கருதி அவர்களுடைய மஹாசன்னிதானத்தில் தங்கி பல ஆண்டுகள் இருந்தார்கள். இவர்கள் யோகஸூத்ர

விருத்தி, சித்தாந்த கல்பவல்லி, ப்ரம்மஸூத்ரவ்ருத்தி, சிவமானஸ் பூஜை, ஆத்ம வித்யாவிலாஸம் முதலிய கிரந்தங்கள் இயற்றி யிருக்கிறார்கள். இவைகளைத் தவிர காமகோடி பீடத்தில் தம் குரு பரமசிவேந்திர ஸரஸ்வதி வரை அமர்ந்திருந்த ஆசார்யர்களின் சரித்திரங்களையும் விளக்கி குரு ரத்னமாலிகையெனும் நூலையும் இயற்றியிருக்கிறார். அந்த நூலில் நமது பாரதநாட்டில் அவ்வப்போது அரசாண்ட பல மன்னர்களைப்பற்றியும், அவர்கள் சபைகளில் வீற்றிருந்த கவிகளைப் பற்றியும் விவரித்துள்ளார்.

ஸ்ரீ குருமூர்த்திகளின் சந்நிதானத்திற்கு வரும் சாஸ்திரக்ஞர் களோடு இவர்கள் அடிக்கடி தர்க்கம் செய்வதைக் கண்ட ஸ்ரீகுரு மூர்த்திகள் ஒரு சமயம் மௌனியாய் இரு என்று ஆக்ஞை செய்தார்களாம். அது முதற்கொண்டு இவர்கள் தீவிர மௌனி களாகவே திகழ்ந்தார்கள். குருமூர்த்திகளிடத்தில் அனுபவ பூர்வமாய்க் கண்டறிந்த ஞான விலாஸங்களைக் கொண்டே இவர்கள் ஆத்மஞானியின் லக்ஷணங்களை "ஆத்ம வித்யா விலாஸம்" என்னும் நூலிலே மிக அழகாக வர்ணித்து இருக்கி றார்கள். சிவமானஸ பூஜையின் பயனாக சந்திர மௌளீச்வரரின் கிருபையைப் பெற்றும், குருமூர்த்திகளின் உபதேசங்களின்படி நடந்தும், அவருடைய பாதுகைகளை சிரமேற்கொண்டும், எல்லா சிந்தைகளும், சங்கைகளும் நீங்கப்பெற்று சமம், தர்மம், கருணை முதலான குணங்களில் நிரம்பியவராகி, இந்திரியங்களை நிக்ர ஹித்தும், காமங்களைவென்றும், உள்ளங்கையை பிக்ஷாபாத்திர மாகக்கொண்டும் அவதூத சந்நியாசிகளாக எங்கும் அலைந்து, காவேரி மணல் மேடுகளிலும், கரையோரத்துப் புதர்களிலும், மரத்தடியிலுமமர்ந்து சர்வதா ஹம்ஸத்யானத்திலேயே ஆழ்ந்திருந் தார்கள்.

ஒரு சமயம் அவர் நெற்குவியலின்மேல் மெய்ம்மறந்து படுத் திருந்த பொழுது திருடன் என்று நினைத்து சிலர் அவரை அடிக்க வந்தார்களாம். ஓங்கின கைகள் அடிக்க முடியாமல் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டனவாம். இன்னொரு சமயம் கொடு முடிக்கருகே, காவேரி மணல் மேட்டின்மேல் ஹம்ஸத்யானத்தில் இருக்கும்பொழுது வெள்ளம் வந்து மேட்டைப் புரட்டிக்கொண்டு போய்விட்டது. இம்மஹானின் தேகத்தை ஒருசிறு துவாரத்தில் மணலுக்குள் அமிழ்த்திவிட்டது. மூன்று மாதத்திற்குப் பின் அவ்விடம் தோண்டப்பட்டபொழுது அதிர்ஷ்டவசத்தால் அவர் தேகம் தென்பட்டது. உடனே அவர் யாதும் அறியாதவராய் தியானத்திலிருந்து எழுந்து சென்று விட்டார்.

மற்றொரு சமயம், கோயில் கர்ப்பகிரஹத்திற்கு வெளியில் நின்றுகொண்டு, இவர் சிவநாமாவளி அர்ச்சனையை உச்சரித்த

பொழுது ஒவ்வொரு நாமத்திற்கும் ஒரு புஷ்பம் மூலஸ்தானத்தின் மீது உதிர்ந்ததாம். ஒரு தடவை இவர்களுடைய கை ஒரு மிலேச்சனால் வெட்டப்பட்டபோது, இவர்கள் அதை உணராமல் சென்றுகொண் டிருந்தாராம். இதைக்கண்ட மிலேச்சன் பயந்து இவர்களைத் தொடர்ந்து சென்று க்ஷமிக்கவேண்டும் எனக் கேட்ட பொழுதுதான் அவர் தன் கை வெட்டுண்டு தொங்குவதைப் பார்த்தாராம். அப்பொழுதும் அவர் அம்மிலேச்சனிடம் கருணை காட்டினாராம். அந்தக்ஷணம் வெட்டப்பட்டு தொங்கிய கை தானாகவே ஒட்டிக்கொண்டு விட்டதாம். இதைக்கண்ட மிலேச்சனுக்கு ஞானோதயம் உண்டாயிற்று.

இவர்கள் இப்படி வெகு காலம் ஜீவன் முக்தாளாய் அத்வைத ஸித்தாந்தத்தை மெய்ப்பிக்கும் நிதர்சனமாய் ஸச்சிதானந்த சுத்த பிரும்மமாகவே விளங்கினார்கள்.

இவர்கள் அருளிய கீர்த்தனங்களிலும், இதர க்ரந்தங்களிலும் காணும் ப்ரும்ம லக்ஷணங்கள் யாவும் இவர்களிடம் காணப் பட்டதால், இவர் ஸதாசிவப்ரம்மம் என்று பிரசித்தி பெற்றார்கள்.

இவர்கள் கடைசியில் காவேரி நதி தீரத்திலுள்ள நெரூர் கிராமத்தில் நிர்விகல்ப ஸமாதி அடைந்தார்.

## 3. ஸ்ரீ நாராயண தீர்த்த சுவாமிகள்

*திருப்பூந்துருத்தி*

குடமுருட்டி ஆற்றுக்கும், நடுக்காவேரிக்கும் மத்தியில் ஒரு பிள்ளையார் கோயில் உள்ளது. அதன் பக்கத்தில் ஒரு ஸ்நான கட்டம் உள்ளது. அவ்வழியாக அனேக ஜனங்கள் போவதும், வருவதும் உண்டு. இப்படியிருக்க ஒருநாள் வடதேசத்து சாதுவான நாராயண தீர்த்த சுவாமிகள் என்பவர் அவ்வழியாக வந்தார். அந்தச் சமயத்தில் காற்றும், மழையும் அதிகமாக அடிக்கவே, இவர் பிள்ளையார் கோயிலுக்குள் புகுந்துகொண்டார். அப்பொழுது அவர் வயிற்று வலியுடன் துடித்துக்கொண் டிருந்தார். அன்று அவர் சொப்பனத்தில் ஸ்ரீகிருஷ்ணன் "நீ பயப்படாதே. உன் வயிற்றுவலி நீங்கிவிடும். அதிகாலையில் நீ யாரைப் பார்க்கிறாயோ, அவரைப்பின் தொடர்ந்து போ, அருள் புரிகிறேன்" என்று சொல்லி மறைந்தார். அதிகாலையில் அவர் த்ருஷ்டியில் ஒரு வராஹம் தென்படவே அதன் பின்னால் செல்ல,

அந்த உருவம் பூபதிராஜபுரம் என்ற ஊரிலுள்ள கோயிலில் புகுந்து மறைந்துவிட்டது. இவரும் கோயிலுக்குள் நுழைந்ததும் வயிற்றுவலியும் நின்றுவிட்டது. வந்த வராஹத்தைத் தேடினர். அகப்படவில்லை. பிறகு ஊர் ஜனங்கள் அவருக்கு நமஸ்காரம் செய்தார்கள். அவரும் நடந்ததை அவர்களுக்குச் சொன்னார். அந்தச் சந்நியாசிக்கு வராஹரூபியாய்த் தோன்றி அவ்வூருக்கு அவரை அழைத்து வந்தமையால், அன்று முதல் பூபதிராஜபுரம் என்பது வராஹபுரம் என்று வழங்கலாயிற்று.

அவர் ஆந்திர தேசத்தவர் என்றும், அவருக்கு ஏற்பட்டிருந்த வயிற்று நோய் எவ்வித சிகிச்சைக்கும் கட்டுப்படாமல் போகவே, அவர் குணசீலப் பெருமாள் சந்நதியில் பெருமானை பக்தியுடன் சேவித்தாரென்றும், ஓர் இரவு அவர் கனவில் பெருமாள் அவரை வரகூர் கோவிலை சீர்படுத்தும்படி கட்டளையிட்டதாயும், ஆக்ஞையை சிரமேற்கொண்டு காலையில் ஒரு வராஹத்தைப் பின்தொடர்ந்து பூபதிராஜபுரம் என்று பெயர் கொண்ட வராஹபுரத்தை அடைந்தாரென்றும் ஆண்டவன் கட்டளைப்படி கோயிலை புதுப்பித்து - கிருஷ்ண லீலைகளை பக்தி பூர்வமாய் பாடும்படியான ஒரு கிரந்தம் செய்தாரென்றும் ஒரு வரலாறு காணப்படுகிறது.

பிறகு அவர் பகவானை வழிப்பட்டு சதா பஜனை செய்து வந்தார். ஒருநாள் அவர் கனவில் பகவான் தோன்றி, "அன்பா, நாம் கிருஷ்ணாவதாரத்தில் செய்த லீலைகளை அமைத்து, ஒரு கிரந்தமாகச் செய்து அதை என் சந்நிதியிலேயே அரங்கேற்றி இங்குள்ள பக்தர்களைக்கொண்டு அக்கதையைப் பஜனைசெய்து அபிநயிக்கச் செய்யவேண்டும்" என்றருளி மறைந்தார். அவ்விதமே சுவாமிகள் "கிருஷ்ணலீலா தரங்கிணி" என்ற ஒரு கிரந்தத்தை இயற்றி அங்குள்ள பக்தர்களைக் கொண்டே நாள்தோறும் பஜனை நடத்திக்கொண்டு வந்தார். இவரையே ஸ்ரீநாராயண தீர்த்த சுவாமிகள் என்றும் கூறுவார்கள்.

இவர் பல காலம் வராஹபுரத்தில் பஜனை செய்துகொண்டும் பகவானைத் தரிசித்துக்கொண்டும் இருந்தார். உற்சவங்கள் ஏற்படுத்தி வைத்தார். அவர்களின் பரம்பரையிலுள்ள பாகவதர்களும், பக்தர்களும் இன்றும் அந்தக் கைங்கர்யங்களைச் செய்து வருகின்றனர். அவர் அங்குள்ள ஜனங்களைக்கொண்டே பஜனைகள் செய்து வந்தார். ஸ்ரீநாராயண தீர்த்தர் பின்பு வராஹபுரத்தை விட்டு பல ஸ்தலங்களுக்கும் சென்று அங்குள்ள மூர்த்திகளையும் தரிசித்து திருவையாற்றிற்கும், நடுக்காவேரிக்கும்

மத்தியிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற திருப்பூந்துருத்தியை அடைந்து வசித்து வந்தார். மாமரத்தின்கீழ் ஒரு பர்ணசாலை கட்டிக்கொண்டு நாராயண தீர்த்த சுவாமிகள் தியானத்தில் இருந்தார். அங்கேயே ஒருநாள் தியானத்தில் இருந்தபடியே சமாதியடைந்தார். அங்கு இவர் பெயரில் ஒரு மடம் உள்ளது.

## 4. ஸ்ரீ விஜயேந்திர சுவாமிகள்

*கும்பகோணம்*

இவர் மத்வ சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு பெரிய மடாதிபதி. அநேக ஸ்தலங்கள் சுற்றி வந்து, கூடியவரையில், அவருடைய மதத்திற்கும், மற்ற இதர மதங்களுக்கும் வேறுபாடு இல்லாமால் பிரசாரம் செய்துவந்தார். அப்படி வரும்பொழுது தஞ்சாவூர் மஹாராஜாவால் ரொம்பவும் அபிமானிக்கப்பட்டு, தஞ்சாவூரிலேயே கொஞ்ச காலம் தங்கியிருந்தார். அப்பொழுது கும்பகோணத்தில் வீரசைவமதம் செழித்தோங்கிற்று. ஆதி கும்பேச்வரர் ஆலயம் வீரசைவர்கள் வசத்தில் இருந்தது. அந்தக் கோயில் அவர்களால் கவனிக்கப்படாமல் ரொம்பவும் சீர்கேடாக இருந்து வந்தது. மங்களாம்பிகாதேவி, ஒரு சந்தர்ப்பம் சொப்பனத்தில் மஹாராஜாவுக்குத் தோன்றி, அக்கோயிலை அவர்கள் கவனிக்காததினால் மத்துவாசாரியாரான விஜயேந்திர ஸ்வாமியை அனுப்பி சௌகர்யப்படுத்தும்படியாக ஆக்ஞாபித்து மறைந்தாள். இதே மாதிரியாக விஜயேந்திர சுவாமிக்குச் சொப்பனம் ஆனது. உடனே மஹாராஜா சுவாமிகளை வணங்கி, கும்பகோணத்துக்கு விஜயம்செய்து கும்பேஸ்வரர் சுவாமி கோவிலை கவனிக்குமாறு ரொம்பவும் அன்புடன் பிரார்த்தித்தார். அப்படியே அவர் கும்பகோணத்திற்கு வந்து வீரசைவர்களை வாதத்தில் ஜயித்து மங்களாம்பாள் சன்னதியை மிகவும் கவனித்தார். அதுமுதல் விஜயேந்திர ஸ்வாமிகளுக்கு அக்கோயிலில் மரியாதை ஏற்பாடு ஒழுங்காக நடந்து வந்தது. சுவாமிகள் கொஞ்ச காலத்தில் சில ஊர்கள் சுற்றிவிட்டு இவ்வூரிலேயே சோலையப்பன் தெருவில் காவேரிக் கரையின்மேல் சமாதி கொண்டார். வருஷத்திற்கு ஒருதரம் அவருடைய ஆராதனையும் பிராம்மண சமாராதனையும் கும்பகோணத்தில் மிகவும் விமரிசையாக இப்போதும் நடந்து வருகிறது.



ஸ்ரீமத் போதேந்திர சுவாமிகள்



ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திராள்



ஸ்ரீ விஜயேந்திர சுவாமிகள்
அதிஷ்டானம்








ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதி

## 5. மருதாநல்லூர் ஸத்குரு ஸ்வாமிகள்

• இவர் காவேரி வடகரையில்உள்ள திருவிசைநல்லூரில் பிறந்தவர். சிறுவயது முதல்பகவத்பக்தியில் ஈடுபட்டிருந்தவர். பகவன்னும மகிமையைப்பற்றிஅநேகக்ரந்தங்கள் எழுதினபோதேக் திராளின் ஸம்பிரதாயத்தை தேசத்தில் பரப்பி தென்தேசத்தில் பஜனை ஸம்பிரதாயங்களை ஏற்படுத்தினவரும்-இவரே. திருவிசை நல்லூரில் இருக்கும்போதே அவ்வூருக்கு மேற்கே இரண்டுமைல் தூரத்திலிருக்கும் மணஞ்சேரியில் ஒரு தோட்டத்திற்கு சென்று அங்கு ஏகாந்தமாய் அமர்ந்து ராமநாம ஜபம் செய்து கொண்டிருப் பது வழக்கம். சிலகாலம் கழித்தபின் கும்பகோணத்திற்கு தெற்கில் மூன்று மைலில் இருக்கும் திருக்கருக்குடி என்னும் மருதாநல்லூர் சென்று அவ்வூரிலேயே உஞ்சவிருத்திசெய்து கொண்டு ஸதா ராமநாமஜபத்துடன் பகவத்பஜனை செய்து கொண்டு காலத்தை கடத்தினர். அங்கேயே பகவான் பாதத்தை அடைந்தார். அவர் இருந்த இடத்தில் ஒருமடம் ஏற்படுத்தப்பட்டு அதில் பஜனை முதலியவைகள் நடந்து வருகின்றன.

### *6. ஸ்ரீ காமகோடி பீடாதிபதி*

### *ஸ்ரீ ஜகத்குரு பகவத் பாதாசாரியாள்*

## ஸ்ரீ சந்த்ர சேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்

### 1894—

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் இதுவரை 67 ஆசாரி யர்கள் எழுந்தருளியதாகச் சொல்லப்படுகிறது. அவர்களில் பலர் பெரிய தவசிகள்: பலர் சிறந்த கவிஞர்கள்: பலர் தலை சிறந்த யோகிகள்: பலர் சாஸ்திரங்கள் பல கற்றவர்கள்: பலர் பக்தி மார்க்கத்தை உலகிற் பரப்பியவர்கள். இப்பொழுது ஸ்ரீ காம கோடி பீடத்தில் 68-வது ஆசார்ய ஸ்வாமிகளாக பிரகாசிக்கும் ஸ்ரீ சந்தர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ ஆதி சங்கரரின் அவதாரமாக கருதப்படுகிறுர்.

இம்மகான் 1894-ம் வருடம் மேமீ 20உ (ஜயவருடம் வைகாசிமீ 8உ) ஞாயிற்றுக்கிழமை அனுஷ நக்ஷத்திரத்தில் விழுப்புரம் நகரத்தில் நவாப் தோப்புக்கு அருகிலுள்ள அக்ர காரத்தில், சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்னும் அந்தணப் பெரியாருக்கும், அவர் தருமபத்தினி மகாலக்ஷ்மி அம்மையாருக் கும் இரண்டாவது குமாரராய் அவதரித்தார். அவர் குடும் பத்தின் முன்னோர்கள் காவேரியாயும் மகாலிங்க க்ஷேத்ரமாகிய

திருவிடைமருதூரில் குடியேறியிருந்தார்கள். இவருடைய முன்னோர்கள் கன்னடத்தை தாய் பாஷையாகக் கொண்ட ஹொஸைல கர்ணுடக ஸ்மார்த்த பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்களெனத் தெரிகிறது. அவ்வகுப்பைச் சேர்ந்தவர்களில் சிலர் தஞ்சையில் ஆண்டு வந்த மகாராஷ்டிர மன்னரான அமர சிம்ம மகாராஜாவின் தர்பாரில் கௌரவமுள்ள பதவிகளை வகித்து வந்தனர் எனச் சொல்லப்படுகிறது. தாய் வழியில் இவர் கோவிந்த தீக்ஷதரின் மரபைச் சேர்ந்தவர் என்றும் தெரியவருகிறது.

பூர்வாசிரமத்தில் இவருக்கு 'சுவாமிநாதன்' என்ற நாமம் சூட்டப்பட்டிருந்தது. உரிய காலத்தில் உபநயனமும் வீட்டிலேயே 8-ம் பிராயம் வரையில் கல்வி கற்பதும் நடைபெற்றது. சங்கீதப் பயிற்சியும் கொடுக்கப்பட்டது. பின்னர் திண்டிவனத்தில் அமெரிக்கன் மிஷன் ஹைஸ்கூலில் நான்காவது பாரம் முடிய கல்வி பயின்ருர். இளமையிலேயே அவரது மேதா விலாஸம் பல வழிகளில் புலப்பட்டது. ஆண்டவனின் கடாக்ஷம் பெற்ற திருமகனுய் 13-2-1907-ல் தனது 13-ம் வயதில் துறவு பூண்டு, உபதேசம் பெற்று காமகோடி பீடத்தில் ஆரோகணம் செய்து ஆசாரியாளாக விளங்கிக்கொண்டிருக்கிருர்கள். குறுகிய காலத்தில் சகல சாஸ்திரங்களையும் கற்ருர். மடத்தின் நிர்வாகத்தைச் சிறந்த முறையில் அமைத்தார். ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி ஆங்கிலம் முதலான பாஷைகளை அவர்கள் எளிதில் கையாளும் வன்மையை யாவரும் கண்டு வியப்படையக் கூடியதாகும். 1919 முதல் 1939-ம் வருஷம் முடிய தெற்கில் குமரிமுதல் வடக்கே காசி வரையில் யாத்திரை செய்தார். அவர்கள் விஜயம் செய்த இடங்களில் மகா பண்டிதர்களும் பாமர ஜனங்களும் எளிதில் வியக்கத்தக்கவாறு சாஸ்திர ஞானத்தை பரவச் செய்துகொண்டேயிருக்கிருர். ஆங்காங்குள்ள மக்களுக்கு தரிசனமளித்தும், அவர்களை அனுக்கிரகித்தும் வருகிருர்கள். பாமரர்களும் அறியும் வண்ணம் அத்வைத சித்தாந்தத்தை ஸ்வாமிகள் கூறி வருவது தனிச் சிறப்பு வாய்ந்ததாகும்.

அம்மகான் தினந்தோறும் வைதிக மார்க்கத்தையும், வேதாந்த தத்துவத்தையும் பாதுகாக்கச் செய்துவரும் முயற்சிகளையெல்லாம் இச்சிறு பகுதியில் விவரிக்க இயலாது. உலக க்ஷேமத்தை முன்னிட்டு அவர்கள் இன்றும் ஆடம்பரமற்ற முறையில் கண்ணுங் கருத்துமாய் சமூகம் சீர்திருத்தமடைய அருள் மொழிகளாலும், நவீன முறையில் உயர்ந்த நோக்கங்கொண்ட சபைகளை

ஏற்படுத்தி பிரசாரம் செய்வதாலும் அரும்பணிகளை இன்றும் செய்து கொண்டேயிருக்கிறார்.

பாரத மக்கள், அவருடைய ஜீவிய சரித்திரம், அவருடைய உபதேச மொழிகள் கொண்ட புத்தகங்களைப் பெற்று, சிரத்தை யுடன் படித்து, அவர்கள் உபதேசங்களை அனுசரித்துக் கையாளும் வகையில் ஈடுபடுவதே நன்றியறிவுடன் அவருக்குச் செய்யும் குரு சேவையாகும்.

''காவேரி மகாத்மியம்'' என்ற இப்புஸ்தகத்தை வெளியிட வேண்டுமென்று பல விடங்களிலிருந்து விஷயங்களை சேகரித்து உருவாக்கியதும் இம்மகானின் அரிய தொண்டுகளில் ஒன்றாகும்.

## தெய்வக் கலைஞர்கள்

### 7. சங்கீத மும்மூர்த்திகள்

*தியாகராஜ சுவாமிகள் (திருவையாறு)*

*80 வருஷங்கள் (1767 to 1847) காலம்*

(a) இவர் 1767-ம் வருஷத்தில் தஞ்சாவூர் ஜில்லாவில் தியாகராஜ க்ஷேத்திரமாகிய திருவாரூரில் த்ரிலிங்க வைதிக தெலுங்கு பிராமணரான ராமப்ரம்மம் என்ற பெரியாருக்கு மூன்றாம் புத்திரனாகப் பிறந்தார். திருவாரூரில் பிறந்ததனால்தான் இவ ருக்கு தியாகராஜன் என்ற அவ்வூர் ஈசன் நாமத்தைத் தாய் தந்தையர்கள் சூட்டினார்கள். இவர் ராம பக்தியில் ஈடுபட்ட வராய் இருந்தார். இவரது 18-வது வயதிற்குள்ளேயே வேதாத்ய யனம், ஸம்ஸ்கிருதம், தெலுங்கு இவைகளில் அதிகப் பயிற்சி அடைந்தார். ஸ்ரீகோபாலதாஸ் என்னும் பெரியார் ஒருவர் காஞ்சியிலிருந்து தியாகராஜரைத் தேடி வந்தார். அவர் இவ ருக்கு தாரக நாமத்தை உபதேசித்து, அதைத் தொண்ணூற்று ஆறு கோடி தடவை உச்சரிக்கும்படியும், அப்படி உச்சரித்தால் ஸ்ரீராமர் பிரசன்னமாவார் என்றும் சொல்லிச் சென்றார். தியாக ராஜரும் அவர் உபதேசித்தபடியே 21 வயதிற்குள் 96 கோடி தாரக நாமஜபத்தை முடித்தார். அதே சமயத்தில் அவர் வீட்டுக் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தவுடன் ஸ்ரீராமர், லட்சுமணர், ஸீதை இவர்களின் தர்சனம் கிடைத்தது. உடனே அவர்களும் மறைந்து விட்டனர். உடனே அவர் (ஏல நீ தயராது?) என்னும் கீர்த்தனத்தைப் பாடினார். அதுமுதல் அவர் ஸ்ரீராமன்மீது அனேக கீர்த்தனங்கள் பாடிக்கொண்டிருந் தார். ஒரு சமயம், ஒரு கிழவர் இவருடைய தெய்வீக கானத் தைக் கேட்கவேண்டும் என்று சொல்லவே அவரும் பெரியார்

விருப்பத்திற்கிணங்கி சுருதி சுத்தமாகப் பாட ஆரம்பித்தார். இவர் பாட்டைக் கேட்டு மிக்க சந்தோஷமடைந்த கிழவர் இவரிடம் ஒரு ஓலைச் சுவடியை கொடுத்துவிட்டு சாப்பிடுவதற்குத் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ருர். வெகுநேரமாகியும் அக் கிழவர் திரும்பி வரக்காணோம். அவருடைய சொப்பனத்தில், நாரதர், நான்தான் கிழவனுக வந்து ஓலைச்சுவடியைக் கொடுத்தேன். அதைப் படியுங்கள் என்று சொல்லி மறைந்தார். பிறகு எழுந்திருந்து அதை வாசித்து இன்னும் அதிகப் புகழ்பெற்ருர். பிறகு ராமபக்தி அதிகமாகி, பஜனை செய்துகொண்டிருந்தார். ஸரபோஜி மகாராஜா இவரை ஆஸ்தான வித்வானுக இருக்க வேண்டும் என்று கேட்க அவர் அதற்கிணங்கவில்லை. அரசன் வற்புறுத்தவும், அரசனுக்கு வயிற்றுவலி வந்தது. தியாகராஜரை மன்னிப்புக் கேட்ட பின்னரே அவருடைய வயிற்றுவலி நின்றது. ஒரு சமயம் இவர் திருப்பதிக்கு சுவாமி தரிசனத்திற்குச் செல்லும் பொழுது, அர்ச்சகர்கள் உள்ளேவிட மறுத்தனர். மத்தியில் திரை இருந்தது. ''தெரதீயக ராதா'' என்ற கீர்த்தனையைப் பாடினவுடன் திரை கீழே விழுந்தது. அவர் தரிசனம் செய்து சென்றுவிட்டார். திருப்பதியிலிருந்து காஞ்சீபுரம் செல்லும் மார்க்கத்தில் புத்தூர் என்ற கிராமத்தின் சமீபத்தில் இறந்து போன பாலனை உயிர்ப்பித்தார். தன் கடைசி காலத்தில் துரீயாச்ரமம் ஸ்வீகாரம் செய்துகொண்டார். 1847-க்குச் சரியான பராபவ வருஷத்தில் தைமாதத்து பகுள பஞ்சமியன்று திருவையாறு ஸ்தலத்திலே தியாகராஜ சுவாமிகள் சித்தியாகி மோக்ஷத்தை அடைந்தார். இவருடைய சமாதி திருவையாறு க்ஷேத்திரத்திலிருந்து அரை மைல் தூரத்தில் காவேரிக் கரையோரமாகக் கோயிலாக கட்டப்பட்டிருக்கிறது. அவருடைய ஆராதனை காலத்தில் இவ்விடத்தில் பிரபல வித்வான்கள் பலரும் வந்து, தங்களுடைய சங்கீத ஞானத்தைக் கொண்டு பூஜை செய்து அவருடைய அருளைப் பெற விரும்புகிருர்கள்.

## *ஸ்ரீச்யாமாசாஸ்திரிகள் 1763—1828,*
## *65 வருஷங்கள்*

(b) இவருடைய பூர்வீகர்கள் விஜய நகரத்திலிருந்து குடியேறியதாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் பரம்பரையாக காஞ்சீபுரத்தில் ஸ்ரீ காமாக்ஷியை பூஜைசெய்து பிறகு காஞ்சியிலிருந்து வந்த வடமர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்றும் பின்னர் அவர்கள் திருவாரூரில் சிலகாலம் தங்கி தஞ்சையில் வந்து குடியேறியதாகவும் தெரியவருகிறது.

## சங்கீத ம்மூர்த்திகள்



ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்



ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர்



ஸ்ரீ ச்யாமா சாஸ்திரிகள்



ஸ்ரீ தாயுமானவ சுவாமிகள்



ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரும
அவரது பார்யாளும—படடீசுவரம்



ஸ்ரீதர அய்யாவாள்

ச்யாமா சாஸ்திரி 1763-ம் வருஷம் சித்திரை மாதம் கிருத்திகா நக்ஷத்திரத்தில் பிறந்தவர். சுப்ரமண்ய சுவாமிக்கு உகந்த நக்ஷத்திரமாகையால் முதலில் வெங்கட சுப்பிரமண்ணியன் என்று பெயரிடப்பட்டது. ஆனால் அவருக்கு 'சியாம கிருஷ்ண' என்ற செல்லப் பெயர் விளங்கலாயிற்று.

ஆரம்பத்தில் இவர் இரகசியமாகவே தகப்பனார் அறியாமல் சங்கீதப் பயிற்சி செய்து வந்தார். இச்சமயம் காசியிலிருந்து வந்த ஒரு சந்நியாசி இவர் தகப்பனாரைக் கேட்டு இவரை தன்னுடைய சீடனாக அமர்த்திக்கொண்டு சங்கீத சாஸ்திரம் கற்பித்தார்.

இவர் சங்கீத ஞானத்தைக்கொண்டு பங்காரு காமாக்ஷி தேவியைப்பற்றிய ஸ்தோத்திரப் பாடல்கள் செய்து வந்தார். அவருடைய பக்தியின் சிறப்பினால் 'பொப்பிலி' கேசவய்யா என்ற சங்கீத வித்வானையும் நாகப்பட்டினம் 'அப்புக்குட்டி' என்ற வித்வானையும் சங்கீதப் போட்டியில் ஜெயித்து அரசனின் புகழைப் பெற்றார். அவருடைய ஒவ்வொரு கீர்த்தனமும் ஸ்ரீகாமாக்ஷியினிடத்திலுள்ள அபார பக்தியை விளக்கும்.

## *ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் 1777 to 1836*
## *59 வருஷங்கள்*

(c) இவர் சுமார் 1777-ம் வருஷம் திருவாரூரில் பிறந்து முத்துகுமாரஸ்வாமி பக்தராய் விளங்கி பல க்ஷேத்திரங்களுக்குச் சென்று, வடமொழியில் அநேக கீர்த்தனைகளைச் செய்தார். தஞ்சாவூர் நாயக வம்சத்து அரசர்களிடம் அமைச்சராய் விளங்கிய ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் குமாரனும், பேரனும் காட்டிய சங்கீத வழிகளைப் பின்பற்றினார். குரு சிதம்பரயோகிகளிடம் சீடனாயமர்ந்து ஸ்ரீ வித்யோபதேசம் பெற்று, அவருடன் பல க்ஷேத்திரங்களுக்குச் சென்று, சங்கீதத்திற்கும், மோக்ஷசாதனத்திற்கும் உரிய சிறந்த வழிகளை அறிந்து அனுஷ்டித்து வந்தார்.

அவர் திருத்தணி சென்று முருகக் கடவுளின் அருள்பெற்று தன் குருவின் ஆக்ஞைப்படி கர்நாடக சங்கீதத்தையும், யோக, ஜ்யோதிஷ சாஸ்திரங்களையும் உலக க்ஷேமத்துக்கு அர்ப்பணம் செய்தார். அவர் செய்த கீர்த்தனங்களிலெல்லாம் அந்தந்த க்ஷேத்திர மகாத்ம்யம் முழுவதும் கூறப்பட்டிருக்கின்றது. திருவாரூர் ஸ்ரீ கமலாம்பிகையின் பேரிலும், மாயூரம் அபயாம்பிகையின் பேரிலும் நவாவரண கீர்த்தனங்கள் செய்திருக்கிறார்.

கமலாம்பாள் கீர்த்தனங்களில் ஸ்ரீ வித்யா விஷயம் நன்ருய் கூறப் பட்டு இருக்கிறது. அவருடைய கீர்த்தனங்கள் வடமொழியில் அமைந்திருந்ததால் அநேக ஜனங்கள் அவற்றின் மகிமையை அறிந்துகொள்ள முடியவில்லை.

அவர் செய்த நவக்ரஹ கீர்த்தனங்கள் மிகவும் பிரசித்தியும், சக்தியும் பெற்றுள்ளவையுமாகும். அவருடைய கீர்த்தனங்களை அறிந்தவர்களும், அவருடைய சீடர்களாய்க் கருதப்படுபவர்கள். தஞ்சை பொன்னையா, சின்னையா, திருவாங்கூர் பிடில் வித்வானு யிருந்த வடிவேலுவும் பாடகரான சிவானந்தம் முதலியவர்க ளாகும்.

தனது 59-வது வயதில் மதுரை மீனுக்ஷியின் பேரில் ஒரு கீர்த்தனம் பாடிக்கொண்டே பரமபதம் அடைந்தார். (1836-ம் ஆண்டு.)

## 8. கோபாலகிருஷ்ண பாரதியார்

இவர் ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பு, நாகப்பட்டினத்திற்கு அருகிலுள்ள நரிமணம் என்னும் ஊரிலே பிறந்தவர். இவருடைய தந்தையின் பெயர் ராமசுவாமி பாரதி. வடமர் என்னும் வகுப்பினர். இவருடைய முன்னோர்கள் சங்கீதப் பயிற்சியுடையவர்கள்.

பாரதியார் இளமையில் நன்னிலத்துக்குப் பக்கத்திலுள்ள முடிகொண்டான் என்னும் கிராமத்தில் சில வருஷங்களும், பிறகு ஆனதாண்டவபுரத்தில் சில காலமும் இருந்து வந்தார். இவ் விடங்களில் வாத்திமப் பிராமணர்கள் இவரை ஆதரித்து வந்தார்கள். அவர்களில் *அண்ணுவையர்* என்பவர் அளவிறந்த அன்புகொண்டு பழகிவந்தார்.

இளமையில் பாரதியார் வடமொழியை முறையாகப் பயின்று காவிய நாடகங்களைக் கற்ருர். அன்றியும் அத்வைத நூல்களிற் சிலவற்றையும் படித்தார். பிரமசரிய நெறி தவருமல் ஒழுகி, உச்சிக்காலத்தில் பிக்ஷாடனம் செய்து உண்டுவந்தார்.

இவருடைய ஆசிரியர் மாயூரத்தில் இருந்த *கோவிந்த சிவமென்னும்* பெரியார். அவர் அனுபவஞானி. பாரதியார் அவரை அண்டி வேதாந்த நூல்களையும் யோக சாஸ்திரங்களையும்

பயின்றார். அடிக்கடி சங்கீத வித்வான்களோடு பழகி அவர்களுடைய ஆதரவைப் பெற்றார்.

பின்னர் இந்துஸ்தான் சங்கீதத்தில் பயிற்சி பெறவேண்டும் என்று எண்ணினார். திருவிடைமருதூரில் அமரசிம்ம மகாராஜாவினால் ஆதரிக்கப்பெற்ற *ராமதாஸ்* என்ற மகானிடமிருந்து இந்துஸ்தான் சங்கீதத்தின் மார்க்கத்தையும் அருமையான முறைகளையும், சாகித்ய விசித்திரங்களையும் கற்று உணர்ந்தார். பின்னர் அவர் திருவிடைமருதூரில் தங்கி, ஸ்ரீ மகாலிங்க மூர்த்தி கோவிலில் அசுவமேத பிரதக்ஷிணம் செய்து வந்தார். அவ்வப்போது அம்மூர்த்தி விஷயமாய் சில கீர்த்தனங்களும் இயற்றியுள்ளார்.

பிறகு, ஆஸ்தான வித்வான் *கனம் கிருஷ்ணய்யர்* அவர்களோடு பழகி அவரிடமிருந்து பல கீர்த்தனங்களைக் கற்றார். தாமும் தமிழில் பல கீர்த்தனங்களை இயற்றினார். பாரதியார் பிக்ஷையெடுத்து உண்பதும், சிவதரிசனம் செய்து கீர்த்தனங்களை இயற்றிப் பாடுவதும் தவறாமற் செய்து வந்தார். தேவப் பெருமாள் நல்லூர் வித்வான்கள் இவருடைய கீர்த்தனங்களை பாடம் பண்ணி பாடலாயினர்.

கோபாலகிருஷ்ண பாரதியார் இளமைப் பருவம் முதல் சிதம்பர ஸ்தலத்தில் அபிமானம் உடையவர். ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு ஆண்டுதோறும் நடைபெறும் ஆறு அபிஷேகங்களுக்கும் தவறாமற் சென்று தரிசித்து வந்தார். திருவிடைமருதூரில் தசமஸ்கந்த கீர்த்தனைகளை இயற்றிய ஸ்ரீ வைஷ்ணவ சங்கீத வித்வானுடன் நெருங்கிப் பழகி வந்ததால் - பரஸ்பரம் கீர்த்தனங்கள் அமைப்பதில் பயனடைந்தார். இவர் ஸ்ரீ நடராஜமூர்த்தி விஷயமாக மனமுருகி பல கீர்த்தனங்கள் பாடினார். நாளடைவில், மாயூரத்தில் தங்கி அங்கு கலியாண காலங்களுக்குரிய நலங்கு, ஊஞ்சல், லாலி, கும்மி முதலிய வகைகளில் பல பாட்டுக்களை இயற்றினார். இவர் வள்ளலார் கோயிலில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் தியானம், யோகம்செய்து வருவதுண்டு.

பிறகு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளைத் தரிசித்து அவருடைய ஆசியைப் பெற்றார். இவருக்கு ஏழைகளிடத்தில் கருணை அதிகம். சில கதைகளைச் செய்து சிறிது வருவாயும் பெற்று வந்தார். பாரதியார் சில காலம் நாகப்பட்டினத்தில் தங்கி *நந்தனார் சரித்திரத்தை* இயற்ற ஆரம்பித்து மாயூரத்தில் பூர்த்தி செய்து தன் புகழை ஜனங்களிடம் பரவச் செய்தார். ஸ்ரீ மீனாக்ஷி

சுந்தரம் பிள்ளை, வேதநாயகம் பிள்ளை இவர்களுடைய நட்பும் ஆதரவும் இவருக்கு உண்டாயிற்று. இவருடைய பிரமசரிய விரதமே இவருடைய தீர்காயுசுக்கும், கீர்த்திக்கும் ஆதாரமாய் இருந்தது. அவர் தொண்ணூற்றைந்தாவது பிராயத்தில் ஒரு சிவராத்திரி' தினத்தில் சிவபெருமான் திருவடி நிழலிற் கலந்தார். இவர் அனேக நாயன்மார்களின் சரித்திரங்களை கீர்த்தன ரூபமாக செய்திருப்பதாகத் தெரிகிறது. இவைகளில், நந்தனார் சரித்திரம் பெயர் போனது.

## 9. அருணாசலக் கவிராயர்

*(1634—1701)*

சோழமண்டலத்தில் தில்லையாடியில் கார்காத்த வேளாண் மரபில் பிறந்தவர். சிறுவயதில் பெற்றோர்களை இழந்தார். தருமபுர ஆதீனத்தில் அம்பலவாணக் கவிராயரிடம் எல்லா சாத்திரங்களையும் கற்றார். கல்வியறிவுடன் புத்திநுட்பம் ஒழுக்கம் இவைகளோடு சிறந்து விளங்கினார். சீர்காழியில் வாசம் செய்தார். இராமாயணத்தை தமிழில் கீர்த்தனைகளாகப் பாடினார். "அருணாசலக்கவிராயர்" என்ற பட்டம் அவருக்கு அளிக்கப் பட்டது. கி. பி. 1701-ல் காலமானார்.

## 10. தெய்வப் புலவர்கள்

### (a) *கம்பர்*

கம்பர் சோழமண்டலத்தில் உள்ள தேரழுந்தூரில் பிறந்தார். அவர் தந்தையார் பெயர் ஆதித்தர். பெரும் செல்வரும், வள்ளலு மாக அக்காலத்தில் வெண்ணெய் நல்லூரில் விளங்கிய சடையப்ப முதலியாரிடம், கம்பர் உணவு, உடை உறையுள் முதலியன பெற்று கல்வி கற்று புலமை முற்றி சிறப்பெய்தினார். கம்பர் உவச்சர் குலத்தில் பிறந்தார் என்று சிலரும், அரசர் குலத்தில் பிறந்தவர் என்று சிலரும் கூறுவர்.

கம்பர் ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்தவர் என்றும் பன்னி ரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர் என்றும் இரு கருத்துக்கள் உள்ளன.

தாம் இயற்றிய ராமாயணத்திற்கு கம்பர் இட்ட பெயர் இராமாவதாரம் என்பதே. கம்பருடைய புலமையின் சிறப்பையும்

கவிபாடும் திறத்தையும் நன்கு விளக்கும் நூல்கள் பல உள்ளன. அவை ஏரெழுபது, சிலை எழுபது, சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி ஆகியவையாம். அவர் காலத்திய புலவர்கள் புகழேந்தி, ஔவையார், ஒட்டக்கூத்தர், பேராசிரியர் நேமிநாதர். அவர் காலம் இரண்டாம் குலோத்துங்க சோழன் பிரதாபருத்திரன் என்ற அரசர்கள் வாழ்ந்த காலமாகும்.

## (b) ஸ்ரீ காளமேகப் புலவர்

இவர் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்த திருமலைராயன் என்னும் மன்னன் காலத்தவர். இவர் கும்ப கோணத்தை யடுத்துள்ள நந்திக் கிராமத்தில் அந்தணர் குடியில் பிறந்தவர். திருவானைக்கா அகிலாண்ட நாயகியின் அருளால் கவிபாடும் வன்மை பெற்றவர். இவர் வசைக்கவி பாடுவதில் வல்லவர் ஆதலால் "வசைபாடக் காளமேகம்" என்றழைக்கப் பெற்றார். திருவானைக்கா உலா, சித்திரமடல் முதலிய நூல்களும் தனிப்பாடல்கள் பலவும் இவரால் பாடப் பெற்றுள்ளன.

ஒரு சமயம் புலவர் காவேரியாற்றுக்கும் ஆட்டக் குதிரைக் கும் சிலேடையாகப் பாடநேர்ந்தது. அப்பொழுது அவர் காவேரி யின் பெருமையை கீழ்கண்டவாறு புகழ்கிறார்.

"ஓடுஞ்சுழி சுத்தமுண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும்—நாடறியத்
தேடுபுகழான் திருமலைராயன் வரையில்
ஆடுபரி காவிரி யாமே."

## (c) ஒட்டக்கூத்தர்

கி. பி. பத்தாண்டு முதல் இரண்டு நூற்றாண்டுகளில் இடை காலத் தமிழ் சோழநாட்டில் செழித்தது. சோழர்கள் ஆதரவில் தமிழும், சமயமும் ஒருங்கே வளர்ந்தன. விக்கிரம சோழனுக்குப் பின் அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கனுக்கு ஒட்டக்கூத்தர் ஆசிரியராக விளங்கினார். அவனுக்குப் பிறகு முடி பூண்ட இரண்டாம் இராசராசன் காலத்திலும் புலமையரசை நடாத்தி வந்தார். சாளுக்கிய சோழர்களாகிய இவ்வம்சத்து அரசர்கள் காலத்தில் ஜயங்கொண்டார், தண்டியாசிரியர், அமிதசாகரர், ஒட்டக்கூத்தர், நம்பி காளி, சேக்கிழார், கம்பர், புகழேந்தி முதலிய பெருமக்கள் வாழ்ந்தார்கள்.

ஒட்டக்கூத்தர் மூன்று உலாக்கள், இரண்டு பரணிகள், ஒரு பிள்ளைத் தமிழ் ஆகிய அரிய நூல்களை இயற்றிய காலம் இதுவே. மிகச் சிறந்த காவியமாகிய கம்பராமாயணம் இடைக்காலச் சோழர் காலத்தில்தான் கம்பரால் இயற்றப்பட்டது. இக்காலத்தில் தோன்றிய ஒட்டக்கூத்தர் புலமைபெற்று மூன்று தலை முறைகள் கவியரசு செலுத்தி நூறு ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்ததாக சொல்லப்படுகிறது. ஒட்டக்கூத்தரின் பிறந்து வாழ்ந்த ஊர் முதலியன நூல்களின் மூலம் முடிவாக சொல்ல இயலவில்லை. ஆனாலும் கூத்தர் பிறந்து வளர்ந்தது சோழ மண்டலம் என்று பொதுப்படத் துணிந்து கூறலாம். தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் என்ற ஊருக்கு அருகில் கூத்தனூர் என்று ஓர் ஊர் அரிசிலாற்றங்கரையில் உள்ளது. இங்கே ஒட்டக்கூத்தர் தம் வழி படு தெய்வமாகிய கலைமகளுக்கு ஒரு கோயிலை அமைத்துச் சில ஆண்டுகள் தாமும் தங்கியிருந்ததாக ஒரு வரலாறு உண்டு.

இவர் சைவ சமயத்தில் பற்றுடையவர். நடராஜப் பெருமானாகிய "சிதம்பரக் கூத்தரை" ஒட்டி இவருக்கு கூத்தர் என்று திருநாமம் சூட்டப்பட்டதாகக் கூறுகிறார். மேலும் விக்கிரம சோழன் விருப்பப்படி அவர் ஒரு நயம் பொருந்திய கண்ணியை ஒட்டி ஒரு வெண்பா பாடி அரசனை மகிழ்வித்தார். அதனால் புலவர் 'ஒட்டக்கூத்தர்' என அழைக்கப் பெற்றார். மற்றும் சிலர் அவர் வெட்டுண்ட தலைகளை முண்டங்களோடு "ஈட்டி எழுபது" என்ற பாடல்களின் மூலம் ஒட்டச் செய்ததால் ஒட்டக்கூத்தர் என்ற பெயர் பெற்றதாகவும் கூறுகிறார்கள்.

சைவ சமயத்தில் மிகுந்த பற்றுடையவராதலால், சிவதீக்ஷை பெற்று விபூதி, உருத்திராட்சம் முதலியவற்றையே சிறந்த அணிகளாகக் கொண்டு சைவப் பழமாகத் திகழ்ந்தார். ஓர் இடத்தில் மடம் ஏற்படுத்திக்கொண்டு அங்கே தனியே வசித்து வந்தார் கூத்தர். கூத்தர் வடமொழியிலும், தென்மொழியிலும் வல்லவர். "கவிச்சக்கரவர்த்தி" கொடைப் புலவர் என்ற பட்டங்கள் இவருக்கு உண்டு. "கவி யொட்டக்கூத்தன்" என்ற பட்டம் பல பாடல்களில் காணப்படுகிறது.

ஒட்டக்கூத்தர் அழியாத செல்வமாகிய நூற் செல்வத்தை உலகுக்கு கொடுத்து பெருமையடைந்தது காவேரியின் கருணை வெள்ளமேயென்று கருதுவது மிகையாகாது.

### (d) ஸ்ரீ தாயுமானவ சுவாமிகள்

இப்பெரியார் சோழநாட்டின் தென்கோடிக்கணுள்ள ஸ்ரீ வேதாரண்யபுரியில் சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் வேளாள

குலத்தில் தோன்றிய கேடிலியப்ப பிள்ளைக்கு திருமகனாய் பிறந்தார். பிள்ளையவர்கள் திரிசிரமலையில் அரசுபுரிந்த ஸ்ரீமாந் முத்துவிஜய ரகுநாத சொக்கலிங்க நாயகர் என்ற வேந்தனிடம் சிறந்த சம்பிரதி உத்தியோகத்தில் அமர்ந்தார். தாயுமானேசுவரரின் அருளாலுதித்தமையால் குழந்தைக்கு தாயுமானவன் என நாமகரணம் செய்யப்பட்டது. குழந்தையும் வடமொழி, தென் மொழிக்கணுள்பட இலக்கிய இலக்கணங்களையும், நன்கு கற்று வல்லவராயினர். தனது பதினான்காம் வயதில் தாயுமான சுவாமிகள் சம்பிரதி உத்தியோகந்தை அரசனின் கட்டளைப்படி ஏற்று செவ்வனே நடத்தி வந்தார். அரசனும் இவரது ஒழுக்கத்தைக் கண்டு வியந்தான். திரிசிரமலைக்கு இறைவன் அருளால் வந்த "மௌனகுரு சுவாமிகளிடம்" இவர் உபதேசம் பெற்று சிவபெருமானே பரமபதியென்றும், அவருடன் இரண்டறக் கலத்தலே அத்வைதமுக்தி யென்றும் நாளடைவில் உணர்ந்தார். "மௌனதேசிகர்" உபதேசப்படி சிலகாலம் இல்லறம் நடத்தி ஒரு மகனைப் பெற்றவுடன் சிவயோகத்தில் ஈடுபட்டார். சுவாமிகள் தத்துவோபதேசம் செய்துகொண்டே இராமநாதபுரஞ் சென்று அங்கேயே சிவத்தோடு இரண்டறக் கலந்தார். வேதாரண்யத்தில் பிறந்து காவேரியின் கண்ணுள்ள திரிசிரபுரத்தில் வளர்ந்து, அதன் புனித நீரில் ஆடி, அதைப் பருகி, பக்தி வெள்ளத்தை தென் திசை பரப்பி இராமனாதபுரத்தின் மருங்கிலுள்ள கடலில் ஒன்றுபட்டதுபோல் தோன்றும் இம்மகானின் சரித்திரம் காவேரியின் பெருமையைச் சார்ந்ததாகும்.

## (உ) பட்டினத்து அடிகள்

இவர் காவேரிப்பூம்பட்டினம் என்னும் ஸ்தலத்தில் வணிகர் குலத்தில் பிறந்தவர். இவருக்கு திருவெண்காடர் என்று பெயர். சிவபக்தர். சிவபிரானே இவருக்கு உலகமாயையை உணர்த்தும் பொருட்டு "மருதவாணர்" என்னும் பெயருடன் தோன்றி அவரிடத்தே பிள்ளையாய் வளர்ந்தார். மருதவாணர் வயது வந்த பிறகு வியாபாரத்திற்காக அநேக தீவுகள் சென்று பெட்டி நிறைய விரட்டியைக் கொண்டு வந்தார்.

கொண்டு போன பொருள்களை எல்லாம் விற்று அந்த த்ரவ்யத்தைக் கொண்டு பெட்டி நிறைய விரட்டிகொண்டு வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டு திருவெண்காடர் பெட்டியைத் திறந்து பார்க்க பெட்டி நிறைய மாணிக்கமாய் இருந்தது. இந்த அதிசயத்தைக் கண்டு திருவெண்காடர் மருதவாணரைப் பார்க்க வேண்டுமென்று சொல்ல அவர் காணப்படவில்லை. அச்சமயம்

அவருடைய மனைவி மருதவாணன் அவளிடம் ஒரு பெட்டியைக் கொடுத்துவிட்டு போனான் என்று சொல்லி ஒரு பெட்டியை அவரிடம் கொடுத்தாள். அவர் அந்த பெட்டியைத் திறந்து பார்க்க அதனுள் ஒரு காதற்ற ஊசியும், ஒரு ஓலையும் இருந்தன.

ஓலையைப் பிரித்துப் பார்க்க அதில் "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவர் மனதில் உலக வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டது. தன் பொருள்களை எல்லாம் மக்களுக்கு கொடுத்து விட்டு துறவறம் பூண்டார்.

சிவபிரானின் அருளால் அநேக வேதாந்த பாடல்களை தமிழில் பாடியிருக்கிறார். இவை பட்டினத்தார் பாடல் என்று புகழ் பெற்றன. திருவிடைமருதூரில் கொஞ்சநாள் இருந்தார். உலகத்தில் மாயை வலையில் விழாமல் வாழ்நாளை மானிடர்கள் நடத்த பற்றற்ற வழியை பாடல் மூலமாக போதித்து தாமே நடத்தையில் காட்டி கடைசியில் திருவொற்றியூரில் சிவனடி சேர்ந்தார்.

*கிரஹஸ்தாசிரமம் பெற்று தர்மபிரசாரம், சமூக சேவைசெய்த மஹான்கள்:*

## 11. ஸ்ரீ கோவிந்த தீக்ஷதர்

கோவிந்த தீக்ஷதர் கர்னாட ஸ்மார்த்த பிராமண வகுப்பைச் சேர்ந்தவர். வசிஷ்ட கோத்ரம், ருக்வேதி, ஆசுவலாயன சூத்ரம். அவருடைய தர்ம பத்னி ஸ்ரீமதி நாகாம்பாள். அவர் ஒரு தெய்வீகப் பிறவியென்றும், அவதார புருஷர்களில் ஒருவர் என்றும் கருதும் படி தன் வாழ்நாட்களை நடத்தி வந்தார். பதினாறுவது நூற்றாண்டில், தஞ்சையைத் தலை நகராகக் கொண்டு அரசாண்டு வந்த செவ்வப்ப நாயக்கர் முதலான மூன்று மன்னர்கள் காலங்களில் சிறந்த அமைச்சராயும், கீர்த்தி பெற்ற ராஜதந்திரியாகவும் சுமார் 70 வருஷகாலம் சேவைசெய்து வந்தார். இவர் சேவை செய்த காலத்தில் சோழதேசம் பலதுறைகளிலும் மேம்பாடடைந்து பெருமையுற்றிருந்தது.

அவர் கும்பகோணத்திற்கு அருகாமையிலுள்ள திருமலை ராஜன் ஆற்றங்கரையில் அமைந்துள்ள பட்டீசுவரத்தில் வாசம் செய்து சாஸ்திர விதிப்படி அக்னிஹோத்ரம், யாகங்கள் இவைகளைக் காலந் தவருது செய்துகொண்டு, இராஜகைங்கரியங்களையும் நெறி பிறழாது நடத்திக்கொண்டிருந்தார். சகலவிதமான போக்ய வஸ்துக்களின் மத்தியில் வசித்தும், தன்னலமற்றவராய் பொது ஜன சேவையையே உயர்ந்த தியாகத்தைப் போல் கருதி

சிறந்த முறையில் கிரஹஸ்தாசிரமத்தை நடத்தி வந்துள்ளார். இவர் காலத்தில் பொது நலத்தை உத்தேசித்து அநேக சாஸ்திர பாடசாலைகள், கோவில்கள், குளங்கள், படித்துறைகள், ஏரிகள், கால்வாய்கள் முதலியவை ஏற்படுத்தப்பட்டன. இவர் காலத்தில் சோழதேசம் கலை, கல்வி, நீதி, நெறி, விவசாயம் முதலியவை களில் பொலிவுற்று விளங்கியது. தஞ்சை, கும்பகோணம், திருவிடைமருதூர், மாயூரம், திருவண்ணுமலை முதலிய க்ஷேத்திரங்களில் அரசனுடைய கீர்த்தியும், இவருடைய பெயரும் விளங்கும்படி, பல சின்னங்களும், சில கல் வெட்டுக்களும் காணப்படுகின்றன. இவரை ஜனங்கள் 'அய்யன்' என்றே அழைப்பர். அய்யன் ஏரி, அய்யன் தெரு, அய்யங்கடை என்றும் இவ்விதமே மற்ற க்ஷேத்திரங்களிலும் பெயர்கள் விளங்குகின்றன. கும்பேசுவரர் கோயில், பட்டீசுவரம் கோயில், திருவையாறு கோவில், திருவண்ணுமலை கோவில் முதலிய இடங்களில் திருப்பணிகள் செய்துள்ளார். அரசருடைய சிலையுடன் தீக்ஷதர் சிலையும், அவர் தர்ம பத்தினி உருவமும் சில கற்றூண்களில் காணப்படுகின்றன. சோழநாட்டில் பல க்ஷேத் திரங்களில் ஸ்நான கட்டிடங்களும், கருங்கல் படிகட்டுகளும், மகாமக குளத்திற்கு படிக்கட்டுகளும், பல மண்டபங்களும், ஏற்படுத்திய பெருமை இவரைச் சேர்ந்ததாகும்.

அவர் பல சாஸ்திரங்களில் நிபுணர். அவர் அத்வைத வித்யாசாரியார் என்று ஸ்ரீ ராஜ சூடாமணி தீக்ஷதர் கூறுகிருர். அவருக்கு எட்டுப் பிள்ளைகளும் ஒரு பெண்ணும உண்டு. அவர் மூத்த குமாரர் யக்ஞநாராயண தீக்ஷதர் "ஸாகித்ய ரத்ஞகரம்" என்ற நூல் எழுதியுள்ளார். அவருடைய மற்ருெரு குமாரரான வேங்கடமகி "வார்திகாபரணம்" என்னும் மீமாம்ச க்ரந்தமும், "சதுர்தண்டி ப்ரகாசிகை" என்னும் சங்கீத நூலும் எழுதியிருக் கிருர். அந்தக் கிரந்தங்களிலும், ஸ்ரீமதி ராமபத்ராம் பாளால் எழுதப்பட்ட "ரகுநாதாப்யுதயம்" என்ற கிரந்தத் திலும், கோவிந்த தீக்ஷதரின் பெருமைகள் தெரிய வருகின்றன. அவர் அரசியலில் ஈடுபட்டிருந்த காலம் 1575 - 1634 என்று தெரிய வருகிறது. காவேரி தீரங்களில் சாஸ்திர விற்பன்னர் களுக்காகப் பல கிராமங்களைக் கொடுத்துக் கல்விச்சாலைகளை அபி விருத்தி செய்தார் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இந்திய சரித்திரப் பெரியார்களில் இவரும் ஒருவர் என்று நாம் பெருமைப் படவேண்டும். கோவிந்த தீக்ஷதர் திருவையாறு புராணத்தை தமிழில் மொழி பெயர்க்கும்படி செய்தார். இது 1605-ம் வருஷம் நடை பற்றது என்பதைக் கீழ்க்கண்ட செய்யுள் விளக்கு கிறது.

மலிபுனல்சூழ் சோணாடு தஞ்சையிற் காத்திடுமரசர்
மதியமைச்ச னொலிமறைதேர் கோவிந்த தீக்ஷதராயன்
திருவாக் குடைமையாலே கலியுகத்துச் சகராண்டு
மூவைஞ் ஞூற்றிருபதின்மேல் காணுமேழாய் பொலி
வருடத்தையாற்றுப் புராணவடமொழி தமிழாற் புகலலுற்றேன்.

என்பது விளக்குகிறது. தஞ்சாவூர் ஆந்திரராஜலு சரிதமு என்ற கிரந்தத்தில் அவருடைய சாஸ்திரமேதை புகழப்பட்டுள்ளது. ஸ்ரீ ராஜ சூடாமணி தீக்ஷதர் ருக்மிணி பரிணயம் என்ற கிரந்தத்தில் கோவிந்த தீக்ஷதர் மக்களின் சௌகரியத்தை முன்னிட்டு, மாயூரம், மத்யார்ஜுனம், கும்பகோணம், மன்னார்குடி க்ஷேத்திரங்களில் மண்டபம் படிக்கட்டுகள் கட்டுவித்தார் என்றும், உத்தம சீலர்களான வித்வான்களுக்குப் பூதானம் கிரகதானம் முதலியவைகளைச் செய்வித்தார் என்றும் அவருக்கு நிகரான குணசீலர்கள் பூவுலகில் மிகவும் அரிது என்றும் புகழ் சூட்டியுள்ளார்.

கடைசி காலத்தில் அவர் அமைதியாயும், சிறந்த தியாகியாயும் கும்பகோணத்தில் ஸ்ரீ மங்களாம்பிகா சன்னதியில் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்து, இம்மானிட உடலைத் துறந்து பரமபதம் ஏகினார் என்று சொல்லப்படுகிறது.

## 12. ஸ்ரீதர அய்யாவாள்

(*திருவிசைநல்லூர்*)

இவர் தெலுங்கு பிராம்மணர். பெற்றோர்கள் காலமானவுடனே மந்திரி பதவியை அளிக்க மைசூர் மஹாராஜா கூப்பிட அவர் தனக்கு வேண்டாம் என்று பதிலளிக்க மைசூர் அரசன் கோபித்து, அவருடைய ஆஸ்திகளைப் பறிமுதல் செய்யும்படி உத்தரவிட்டான். அதற்கு முன்னால் அவர் இல்லம் வந்து தன் வீடு முழுவதையும் திறந்து விட்டு ஜனங்கள் எல்லாச் சொத்துக்களையும் எடுத்துக் கொள்ளும்படிச் செய்துவிட்டார். அவரும், அவருடைய பத்தினியும் வீட்டைவிட்டு, உஞ்சவிருத்தி ஜீவனம் செய்ய ஆரம்பித்தார்கள். அரசன் அவர்கள் காலில் விழுந்து க்ஷமிக்கவேண்டும் என்று கேட்க, அவர்களும் மைசூர் மகாராஜனை க்ஷமித்தார்கள்.

பிறகு அவர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு தீர்த்த யாத்திரை செய்தார். திருச்சி, ஜம்புகேச்வரம், ஸ்ரீரங்கம் முதலியவை

களுக்கும் போனார். திருச்சியில் மாத்ருபூதேச்வர சதகம் பாடினார். அதுபோலவே இன்னும் பல ஸ்தல தெய்வங்கள்மீது துதிகள் பாடினார். கடைசியில் கும்பகோணத்திற்குக் கிழக்கில் காவேரி தீரத்தில் "சகாஜீ ராஜபுரம்" என்று சொல்லப்பட்ட திருவிசை நல்லூரை அடைந்தார். இவ்வூர் அவர் மனத்துக்குப் பிடிக்கவே அவ்விடத்திலேயே தங்கலானார் அச்சாதுவின் மஹிமையை அறிந்து மஹா ஜனங்கள் தஞ்சாவூர் அரசனிடம் சொல்லி ஒரு வேலி நிலமும் ஒரு வீடும் சர்வமான்யமாக வாங்கித் தந்து அவரை அவ்விடமே இருக்கச் செய்தார்கள். இவைகள் அவருக்குத் தெரிந்தால், அவர் போய் விடுவார் என்று எண்ணி அவருக்குத் தெரியாமல் அவரை அவ்வீட்டில் இருக்கும்படி செய்தார்கள். அவர் நித்தியம் உஞ்சவிருத்தி செய்து சாப்பிடுவது வழக்கம். பகலில் "கர்க்கடேச்வரர்" தர்சனம் பண்ணி மாலையில் திருவிடைமருதூர் மஹாலிங்கத்தைத் தரிசனம் தவறாமல் செய்வார்.

தினமும் அவரிடம் வரும் பிராம்மணப் பையன்களுக்கு ஸம்ஸ்க்ருதம் சொல்லிக் கொடுப்பார். அவர் இப்படி இருந்து கொண்டிருக்கையில், ஒருநாள் தன் மாதா சிரார்த்த தினத்தன்று அவர் ஸ்நானத்துக்கு காவேரிக்குப் போகையில், சண்டாளன் ஒருவன் கயிற்றினால் கட்டப்பட்டு அடித்துப் போடப்பட்டிருப்பதை பார்த்து அவன் காயங்களுடன் இரண்டு நாள் பட்டினியாய் இருப்பதை அறிந்து பிராமணர்களுக்காகச் சமைத்து வைத்திருந்த அன்னத்தை அவனுக்குக் கொடுத்து, திருப்திசெய்து அனுப்பினார். பிறகு அவர் கிரஹத்தை அடைந்து, சுத்தி செய்து, அன்னம் வடித்து சிரார்த்தத்திற்குத் தயாராய் இருந்தும், ஊர் பிராமணர்கள் உன் வீட்டுக்கு வரமாட்டோம் நீ சிரார்த்ததினத்தன்று சண்டாளனுக்கு அன்னம் போட்டாய்" என்று சொல்லி "கங்காஸ்நானம் செய்தால் வருவோம்" என்று சொன்னார்கள். அதற்கு அவர் சிறிதும் பயப்படாமல் பிராமணரின்றி கூர்ச்சம் போட்டதும், சிரார்த்தம் செய்ய மந்திரங்கள் சொன்னவுடன் கூர்ச்சத்தில் திருமூர்த்திகள் ப்ராம்மணர்களாக வந்தார்கள். அவர்களை வைத்துக் கொண்டு அவர் சிரார்த்தத்தைச் செய்து முடித்தார். இதை அறிந்த ஊரார் பார்த்து அதிசயப்பட்டார்கள்.

பின்பு ஊர் அபவாதம் நீங்க வேண்டி கங்கா யாத்திரை செய்யக் கிளம்ப, கங்கையானவள் முன்னால் வந்து "நான் கார்த்திகை மாதம் அமாவாசை தினம் உம்முடைய வீட்டுக் கிணற்றில் வருகிறேன்" என்று சொல்ல அதே மாதிரி கார்த்திகை அமாவாசையன்று அவர் வீட்டுக் கிணற்றிலிருந்து கங்கை

பொங்கி ஊரில் வெள்ளம் ஓடிற்று. எல்லோரும் ஸ்நானம் செய்தார்கள். இன்றும் அத்தினத்தில் கங்கை பொங்குகிறது. யாவரும் அன்றையதினம் ஸ்நானம் செய்வதற்கு வருகிறார்கள். அவர் வடமொழியில் பல நூல்களை இயற்றியுள்ளார். அவைகளில் 'ஆக்யா ஷஷ்டி', 'குளிராஷ்டகம்' 'தாராவளி—கங்காபஞ்சகம்' என்பவை முதன்மையானவை. பகவந்நாமத்தின் மகிமையை உணர்த்தும் "பகவந்நாமபூஷணம்" என்னும் கிரந்தமும் அவர் எழுதியதாகக் கூறப்படுகிறது. ஆனால் அது இப்போது கிடைப்பதில்லை.

அவர் தாராவளி ஸ்துதி செய்து பாம்பு கடித்த மைந்தனை எழுப்பியதும், மழையில்லாத பஞ்ச காலத்தில் 'குளிராஷ்டகம்' பாடி, ஒரு ஜாமத்தில் மழை வரவழைத்ததும், திருட்டுக் கொள்ளைக்காரர்களுக்கு பஜனை செய்து திருடின ரத்ன குவியல்கள் கொடுக்கப்பெற்று, மஹாலிங்க மூர்த்திக்கு நாகாபரணம் செய்ததும், தன்னை அவமதித்து வந்த கோவிந்தசாமி வேஷ தாரியைக் காவேரிக்கரையில் பகவான் சொப்பனத்தில் விரட்டியதும், அவன் திருந்தி பக்தனானதும், பெரிய கதைகளாக வழங்குகின்றன.

கடைசியாக, ஒரு நாள் மஹாலிங்க மூர்த்தியை தரிசனம் செய்துகொண்டிருக்கையில், சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யும் பொழுது, மறைந்து பகவானுடன் ஐக்யமானார்கள். ஊர் ஜனங்கள் யாவரும் ஆச்சரியப்பட்டார்கள்.

ஸ்ரீதர அய்யாவாள் காவேரி நதியின் பெருமையை கீழ்க் கண்டவாறு விவரித்துள்ளார். "காவேரி கங்கையை விடப் புனிதமானது. காவேரி திருமாலின் தலை, இடை, கடை என்ற மூவிடங்களிலும் பெருமை பெற்று விளங்குகிறாள். மைசூர் ஸ்ரீரங்க பட்டணம், ஸ்ரீரங்கம், கொள்ளிடக்கரை அரங்கம் என்ற மூவரங்கங்களும் காவேரி நதியைப் புனிதமாக்குகின்றன. காவேரித் தண்ணீர் அன்பையும், அறிவையும், அருளையும் பெருக்குகின்றன. இறைவன் அருளே காவேரி. உலகத்திலுள்ளோர் தொடர்ந்து செய்யும் எல்லா பாபங்களையும் ஒரு நொடிப்பொழுதில் ஸ்நானம் செய்த மாத்திரத்தில் காவேரிநீர் நீக்கிவிடுகிறது." ஸ்ரீதர அய்யாவாளை பரமேசுவர அவதார ரூபம் என இன்றும் கொண்டாடுகிறார்கள்.

## 13. ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள்

*ஸ்ரீ தியாகராஜ மகி* என்ற மகாமகோபாத்யாய பிரும்ப ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் தஞ்சை ஜில்லா ராஜ மன்னார்குடியில் வசித்தவர். அவர் 19-ம் நூற்றாண்டில் சுமார் 1813 கி. பி,



மன்னார்குடி
மஹாமஹோபாத்யாய பிரும்மஸ்ரீ ராஜு சாஸ்திரிகள்



கும்பகோணம் டவுன் ஸ்ரீ காசி விச்வநாதர்
ஆலயத்திலுள்ள ஸ்ரீ காவேரியம்மன்

ஆண்டில் தோன்றிய மகான். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷதர் பரம்பரையைச் சேர்ந்தவர். ஒரு சிறந்த சாஸ்திர வல்லுனர். ஸ்ரீ நாராயண தீர்த்தாளிடம் தர்க்க சாஸ்திரத்தையும், ஸ்ரீகோபாலாசாரியாளிடம் முக்தாவளி கிரந்தத்தையும், கும்பகோணம் சின்னண்ண தீக்ஷதரிடம் வியாகர்ண சாஸ்திரத்தையும், ஸ்வயம் பிரகாச சுவாமிகளிடம் வேதாந்த சாஸ்திரத்தையும் இளமையிலேயே கசடறக் கற்ருர். அவர் ஜீவியகாலத்தில் முப்பது கிரந்தங்கள் எழுதப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அவைகளில் சிறந்ததாய்க் கருதப்படுவது "ஸ்த்வித்யாவிலாஸம்" என்ற நூலாகும். அவர் "ஸஹ்யஜாரத்ன மாலிகா" என்ற கிரந்தத்தில் காவேரியின் பெருமையை எடுத்துக் காட்டியுள்ளார். வெகுகாலம் ஜீவித்து 20-வது நூற்ருண்டின் ஆரம்பத்தில் காலமானுர்.

அவருடைய சிறந்த வித்யார்த்தியாய், சகல சாஸ்திர சம்பன்னராயும், அத்வைத சித்தாந்த பரமாய் பல கிரந்த கர்த்தாவாயும், "வேதாந்த கேஸரி" என்ற விருது பெற்றுக் கும்பகோணம் அத்வைத சபாவுக்கு அத்யக்ஷகராயும், குருவின் பரிபூர்ண அருளைப் பெற்றவராயும் விளங்கியவர் பைங்காநாடு மகாமகோபாத்யாய பிரும்ம ஸ்ரீ கணபதி சாஸ்திரிகளாகும்.

## 14. திவான் சேஷய்யா சாஸ்திரிகள்

தஞ்சை மகாராஜாவிஞல் மான்யமாக விடப்பட்ட அமராவதி கிராமத்தில், இவர் ஒரு சுரோத்ரிய குடும்பத்தில் பிறந்தவர். இக் கிராமம் காவேரி தீரத்தைச் சேர்ந்த பாபவிஞசம் தாலுக்காவிலுள்ளது. அவர் குடும்பம் ஏழ்மையாயிருந்தபடியால், அவர் சிறு வயதிலேயே தன் திறமையினுலும், பந்துக்களின் உதவியினுலும், அதி சீக்கிரம் படிப்பில் தேர்ச்சியடைந்தார். கும்பகோணம் கவர்ன்மெண்டு காலேஜ் பிரின்ஸ்பால் பவல் என்ற துரை அவரை உயர்ந்த கலாசாலே படிப்பை முடித்துக்கொள்ள மிகவும் உதவி புரிந்தார். கவர்ன்மெண்டு உத்தியோகங்களில் படிப்படியே தன் சிறந்த குணங்களாலும், திறமையினுலும் உயர்ந்து தஞ்சை கஜாஞ டிப்டி கலெக்டராக வந்தார். அச்சமயம் நேர்ந்த பஞ்சக் கஷ்டத்தை நிவர்த்தி செய்ய அரும் பாடுபட்டார். கவர்ன்மெண்டார் இவருடைய மேதையையும், நிர்வாகத் திறமையையும் அறிந்து இவரை திருவாங்கூர் சமஸ்தான திவாஞக அமர்த்திஞர்கள். எட்டு வருஷங்கள் சேவை செய்து "பேச்சிபார்" அணையைக்கட்டி விவசாய அபிவிருத்தி செய்தார். ஊட்டுப் பிரைகளையும், பத்மஞப தீர்த்தத்தையும், சீர்படுத்திஞர். பின்னர்

புதுக்கோட்டை சமஸ்தான திவாஞக அமர்த்தப்பட்டார். இக் காலத்தில் அவர் எல்லா திருக்குளங்களையும் சீர்படுத்தி ஜனங் களுக்குக் குடிதண்ணீர் வசதி அளித்துள்ளார். மற்றும் பலவித மான சீர்திருத்தங்களால் ஜனங்கள் கொண்டாடும்படி நடந்து சேவை புரிந்தார். பின்னர் காவேரிக்கரை ஓரமாய் இல்லம் அமைத்துக்கொண்டு ஓய்வு காலத்தை ஜனங்களின் பொது நலனுக்காக பல வழிகளில் ஈடுபட்டார். திருவாங்கூரில் சித்திர கலா நிபுணராயிருந்த 'ரவிவர்மா' உலகப் புகழ் பெறும் வண்ணம் உதவி செய்தவர் இம்மகானே.

இவர் 1902-ம் ஞூ பரமபதம் அடைந்தார். அவருடைய சந்ததியார்கள் இன்றும், தர்ம, சமூக சேவைகளில் ஈடுபட்டு தூய்மையுடனும், பெருமையுடனும் வாழ்கிருர்கள்.

## காவேரியின் செல்வங்கள்

காவேரி, அருள், பொருள், கலைச் செல்வங்களைத் தொகுத்து பாரத மக்களின் அழியாத தெய்வீகச் செல்வமாக அளித்திருப் பது, இங்கு சுருக்கமாய் எழுதப்பட்டுள்ளது.

காவேரி பாரத தேசத்தின் மேற்குமலைப் பிரதேசத்தில் குடகு ராஜ்யத்தில் உற்பத்தியாகிறது. குடகு, பாரதத்தில் மைசூர் ராஜ்யத்திலுள்ள ஒரு சிறு மலைப் பகுதியாகும். இது வட அக்ஷ ரேகை 12° - 13°-க்கும் கிழக்கு தீர்க்க ரேகை 75° - 76°-க்கும் உட்பட்ட மலைப்பிராந்தியமாகும்.

காவேரி இம் மலைப் பகுதியில் உற்பத்தியாகிறது. இந்த பாகத்தை ஸஹ்யாத்திரி பர்வதம் என்றும் கூறுவர். உற்பத்தி ஸ்தானம் கடல் மட்டத்திற்கு 5000 அடிக்குமேல் உள்ளது. இதே ஸஹ்யாத்திரி பர்வதத்திலும் அதன் பக்கங்களிலும் பல நதிகள் உற்பத்தியாகின்றன. காவேரி உற்பத்தியாகிற பாகம் தலைக் காவேரி ஸ்தலத்திலிருந்து சற்று உயர்ந்த பாகத்தில் உள்ளது. இதைப் பிரும்மகிரி என்றும் சொல்வார்கள். ஸஹ்யாத்திரியின் கிழக்கு பாகத்தில் பவானி என்ற நதி நீலகிரியில் ஹைதர் அரண் மனைக்குச் சமீபத்திலும், கபிலா என்ற நதி, மானந்தவாடிக்குச் சமீபத்தில் உள்ள பாஞசுர பர்வதத்திலும், லக்ஷ்மண தீர்த்தம் பொள்ளம்பிடி குடகுமலை பிரதேசத்திலும், ஹேமாவதி, எகடி நதிகள் மாடகரெக்கு சமீபத்திலும், துங்கையும், பத்ரையும் அங்குள்ள கலசமலையிலும் உற்பத்தியாகிப் பல்வேறு வழிகளில் செல்லுகின்றன.



காவேரி நதி - குடகு மாகாணம்
உடுப்பி
மங்களூர்
புதூர்
மஞ்ஜராபாத்
சுப்ரமண்யா
மெர்க்காரா
காவேரி நதி
பிரேசர்பேட்டை
தலைக்காவேரி
காவேரி
பாகமண்டலம்
பெரியபட்ன
சித்தாபூர்
விராஜ்பேட்
ஹன்சூர்
ஸ்ரீரங்கப்பட்ட
மைசூர்
நஞ்சன்கூடு
இர்பு ஆலயம்
கண்ணனூர்
தலைச்சேரி
மலபார்
நான்நான்லோடி
வைத்ரி
கள்ளிக்கோட்டை
குறிப்பு
சாலை
நதி
ஆலயம்

ஸஹ்யாத்ரியின் மேற்கு பாகத்தில் குமாரதாள நேத்ராவதி என்ற நதிகள் உற்பத்தியாகி மேற்கு முகமாய் ஓடுகின்றன.

காவேரி உற்பத்தியாகும் குடகு ராஜ்யம் உயர்ந்த மலைப் பிராந்தியங்களுடனும், பள்ளத்தாக்குகளுடனும், கண் கவரும் காக்ஷிகளை அளிக்கவல்ல காடுகளுடனும் பொலிவுற்று விளங்கு கிறது. இங்கு வருடந்தோறும் நூறு அங்குலங்களுக்கு மேற்பட்ட மழை பொழிவதால், கிழக்குபக்க சரிவுகளின் மூலம் ஜலப்பெருக்கு ஏற்பட்டு ஆறுகளுக்கு உற்பத்தி ஸ்தானமாக விளங்குகிறது. மழைப் பெருக்கினால் அடர்ந்த காடுகளும், காடுகளில் யானை, புலி, சிறுத்தை, காட்டெருமை போன்ற துஷ்ட மிருகங்களும் காணப்படுகின்றன.

தலைக்காவேரி அல்லது பிரும்மகிரிப் பிரதேசத்தில் ஜனத் தொகை மிகவும் குறைவு. அங்குள்ள நெல்லிமரம் விஷ்ணு ரூபம் என்றும், அதனடியிலிருந்து ஜலம் குமிழ்களிட்டு கிளம்பு வதால் கங்கையைப்போல் புனிதமானது என்றும் சொல்லப் படுகிறது. அதன் ஓட்டத்தின் கீழ்பாகத்தில் சுமார் நான்கு மைல்கள் தூரத்தில் 'பாக மண்டலம்' என்ற புண்ணிய க்ஷேத்திரம் உண்டு. கங்கைக்கு, யமுனை சரஸ்வதி என்ற உபநதிகள் இருப்பதுபோல் காவேரிக்கும், கனகா, சுஜோதி என்ற உபநதிகள் இவ்விடத்தில் சேருகின்றன. இந்த பிரதேசம் சுமார் 4000 அடி உயரத்தில் உள்ளது. குடகு ராஜ்யத்தின் தலைநகராயுள்ள மர்க் காராவுக்கும், இதற்கும் 24-மைல்கள் உள்ளன. மர்க்காரா விலிருந்து பாகமண்டலத்திற்கு பஸ்கள் ஓடுகின்றன. கள்ளிக் கோட்டை, தலைச்சேரி, மைசூர், மங்களூர் முதலிய இடங்களி லிருந்தும் விராஜ்பேட்டைமூலமாய் பாகமண்டலத்திற்கு பஸ்கள் செல்கின்றன. துலாமாதத்தில் 66 கோடி நதிகளும் காவேரியில் கலந்து கொள்வதாய் ஐதீகம். துலாமாதத்திலும், பல புண்ய காலங்களிலும், பக்தி சிரத்தையுடன் விதிப்படி ஸ்நானம் செய்வதால் சகல ஜீவராசிகளும் கடவுளின் அருளைப் பெற முடியும். அவ்வருள் பெற்றவர்கள் சகலவித பாபங்களையும் ரோகங்களையும் அகற்றி தேஜஸ்ஸுடன் மனத் தூய்மையும் புத்தி கூர்மையும் பெற்று பொலிவுடன் விளங்குவார்கள். இவ்விதம் அருள் செல்வங்களை பெற்ற பெரியார்களின் கதைகளை புராணங்கள் கூறுகின்றன. மானிடர்களை போலவே திரியக்கூடிய ஜந்துக்களாகிய காக்கை, தவளை, கீரி, பாம்பு, மீன் முதலானவைகளும் மோக்ஷம் பெற்றுள்ளன. அருள் செல்வத்தை விவரிக்க இயலாவிடினும், ஆங்காங்கே புராணங்களில் கூறப்பட்ட மகான்கள் அருள்பெற்ற வற்றை இங்கு குறிப்பிடுகிறோம். கவேர முனிவர் காவேரியின்

மகிமையால் கங்கையில் சாபத்தை தீர்த்துக்கொண்டார். 'ஹரிச்சந்திர மகாராஜா' கிந்தமர் கொடுத்த சாபத்தை துலா ஸ்நான விசேஷத்தினாலும், ஒரு முனிவர் தன் குருவின் அஸ்திகளை கும்பகோணத்தில் காவேரி ஜலத்தின் மகிமையால் மலர்களாக மாறச் செய்ததின் மூலமாயும், காவேரியின் பெருமையை காண்கிறோம். திருச்சி ஜில்லா கருப்பத்தூர் என்ற சிவ ஸ்தலத்தில் வித்யாதரன் என்ற அந்தணன் தன் பிதாவின் அஸ்திகளை ஜலத்தில் கரைத்து பிதிர்க்களைத் திருப்தி செய்ததும், திருவிசைநல்லூர் அய்யாவாள் கங்கையை தன் இருப்பிடத்திற்கே வரவழைத்ததும், ஸ்ரீமத்போதேந்திர சுவாமிகள் பாமர ஜனங்களுக்கு 'ராம நாம' மகிமையை உணர்த்தி உய்யும் வழியைக் காண்பித்ததும், காவேரியின் உத்தம தீர்த்தத்திற்கே உரியவையாகும். ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணியைப் பாடி பகவானை ஆனந்த நர்த்தனம் செய்யும்படி காண்பித்த ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் இருந்தது காவேரிக் கரையிலுள்ள வரகூர் க்ஷேத்திரமாகும். ஆத்ம ஞானமும் அஷ்டமா சித்திகளையும் பெற்ற சதாசிவ பிருமேந்திராள் முக்தியடைந்ததும் காவேரிக் கரையிலுள்ள நெரூர் என்ற புண்யஸ்தலமே.

அருள் செல்வத்தைப்போல் பொருள் செல்வமும் காவேரி தீரத்தில் எண்ணிறந்தவை. உற்பத்தி ஸ்தான முதல் கடலில் சங்கமம் ஆகும் வரையில் இருபுறங்களிலும் காட்டுச் செல்வமும், கனிச்செல்வமும், உணவுப் பொருள்களும் மானிடர்களுக்குத் தேவையான அளவு கிடைக்கின்றன. நெல், கரும்பு, மஞ்சள், கமுகு, வாழை, வெற்றிலை, தென்னை இன்னும் மற்ற புன்செய் தானியங்களும், ஏராளமாய்ப் பயிராகின்றன. இரும்பு, மண்ணெண்ணை, நிலக்கரி போன்ற கனிச் சுரங்கங்களும் இருப்பது தோன்றுவதாய் சமீபகாலத்தில் தெரிவிக்கப் படுகின்றன. உற்பத்தி ஸ்தானமாயுள்ள மலைப்பிரதேசங்களில் பலவித மரங்களும், பழவர்க்கங்களும் இயற்கையாக வளர்கின்றன. மலைச் சரிவுகளில் காபி, தேயிலை, ரப்பர் தோட்டங்களில் பயிர் செய்யப்படுகின்றன. இன்னும் சிலவிடங்களில் மிளகு, ஏலம், கிராம்பு ஜாதிக்காய் முதலான பொருள்கள் பயிராக்கப்பட்டு வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. மலைப்பிரதேசத்தில் ஓடும்பொழுதே ஜலம் வீணாக்காமல் மைசூர் ராஜ்யத்தில் பல அணைக்கட்டுகளின் மூலம் நீர்ப்பாசன வசதி அளித்துள்ளார்கள். அவைகளில் மிகவும் விசேஷமானது *கிருஷ்ணசாகர அணைக் கட்டே*யாகும். காவேரி மலைப்பிரதேசத்தில் நுழையுமுன் சிவ சமுத்திர நீர்வீழ்ச்சியுள்ளது. அதன் மூலம் மின் சக்தியை ஏராளமாய் அளித்து இயந்திரத் தொழில் சிறந்து இயங்கும்படி செய்வதும் காவேரியே. இந்த மின் சக்தியை உபயோகித்து

கோலார் வயலிலிருந்து தங்கத்தை வெட்டி எடுக்கிறார்கள். காவேரி பிரதேசத்தை ஒட்டியே பத்ராவதி என்ற எ஁ு தொழிற் சாலையும், காகித உற்பத்தி தொழிற்சாலையும் நடைபெறுகின்றன. பின்னர் சென்னை ராஜ்யத்தின் ஆரம்பத்தில் மேட்டூர் அணைக் கட்டு ஏற்பட்டுள்ளது. அதன் மூலமும் விவசாய அபிவிருத்தியும், இயந்திரத் தொழில்களும் நடைபெற்று வருகின்றன. அங்கிருந்து காவேரி, திருச்சி, தஞ்சை ஜில்லாக்களின் ஊடே சென்று பூமியை தண்வளம் பொருந்திய வண்டல், நீர் முதலான செல்வத்தினால் 'சோழவளநாடு சோறுடைத்து' என்ற புகழுக்கு உரியதாக விளங்கச் செய்கிறது. சுருங்கக்கூறின் காவேரியன்றி தக்ஷிண இந்தியா ஒரு பாலைவன பிரதேசமாகவே புலப்படும்.

அருள் செல்வமும், பொருள் செல்வமும் ஒருங்கே கூடிய காவேரிப் பிரதேசத்தில் கலை, கல்வி, தெய்வ நெறி, இவைகள் தழைத்தோங்கியிருப்பது ஆச்சர்யமில்லை. அத்துடன் வாழ்க்கைக்குரிய பல கைத்தொழில்களும் இயற்கையிலேயே தோன்றி வளர்ச்சிபெற்று ஜனங்களின் தேவைகளை வேண்டிய அளவிற்குப் பூர்த்தி செய்துகொண்டு வருகின்றன. அருள் நெறியும், இயற்கைச் செல்வமும் பொருந்திய இப்பிரதேசத்தை புண்ய பூமியாகக் கருதி வெளிப் புறங்களிலிருந்து பல்வேறு கலை ஆசிரியர்களும் வித்வான்களும், சாஸ்திரக்ஞர்களும் காவேரி தீரத்தை நாடி அங்கேயே பரம்பரையாக வசித்து, இதையே தங்கள் மாதுர் பூமியாகவும் கருதி வந்துள்ளார்கள். உழவுத் தொழிலுடன், நெசவு, மரவேலை இரும்பு, பித்தளை, ஈயம், வெண் கலம், வெள்ளி தங்கம் முதலிய பட்டறை வேலைகளும் நாட்டில் பரந்து ஓங்கி வளர்ச்சியடைந்திருந்தன. தற்காலத்திலும் அந்தப் பழமையான நுண்கலைக் கல்வி அழியாவண்ணம் மறு மலர்ச்சியை அடைந்திருக்கிறது.

நாட்டியம், சங்கீதம், சிற்பம், ஓவியம் போன்ற நுண் கலைகள் காவேரி தீரத்தில் பரந்து, வளர்ந்து வெளிநாடுகள் பெருமைப்படும் வகையில் சிறப்புற்றிருந்தன. இன்றைக்கும் அவைகள் அழியாவண்ணம் பழைய நிலையின் சிறப்பை உலகிற்கு காண்பிக்கும் சர்வகலா காட்சிகளாய் திகழ்கின்றன. புலவர்கள், வித்வான்கள், நூலாசிரியர்கள், சாஸ்திர நிபுணர்கள் காவேரி பிரதேசத்தில் பெருமையடைந்ததுபோல் வேறெங்கும் ஏற்பட வில்லையென்றே சொல்லலாம். தனிப்பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள மகான்கள், முனிவர்கள், கலா நிபுணர்கள், பக்தி மான்கள், புலமைப் பெரியார்கள் இவர்களின் சுருக்கமான சரித்திரங்களை படிக்குங்கால் இது நன்கு புலப்படும். இன்றைக்கும் இச்செல்வங்கள்

மங்காமல் புதிய மறுமலர்ச்சிபெற்று உலகத்திற்கு வழிகாட்டியாக இருப்பதற்கு பல பெரியார்கள் பல வழிகளிலும், முயன்று வருகிறுர்கள். சுருங்கக்கூறின் காவேரி சூழ் சோழ மண்டலம் கல்வி, கலை, ஆசாரம்,. தர்மம், தெய்வ பக்தி இவைகளுக்கு தொன்றுதொட்டு ஆதார பூமியாய் இருந்து வருகிறது.

காப்பிய காலத்திலுள்ள பல புலவர்கள் காவேரி தீர வாசிகளாய் விளங்கினூகள். காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்த பட்டினத்தாரும் சீரங்கத்தில் மடைப்பள்ளி வேலைபார்த்து, பின்னர் சிவனருளால் தமிழ்ப் புலமை பெற்ற காளமேகப் புலவரும், திருச் சக்தி முற்றம் என்ற ஊரில் பிறந்த சக்திமுற்ற புலவரும், தேரழுந்தூரில் உதித்த கம்பர் பெருமானும், நாடகத் தமிழை புதுப்பிக்க சீர்காழியில் தோன்றிய அருணுசலக் கவிராயரும், பிற் காலத்தில் நால்வகைக் கவி பாடுவதில் வல்லவரான திரு. மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களும், தமிழ்க் கீர்த்தன ஆசிரியரான கோபாலகிருஷ்ணபாரதியாரும் தமிழ் வளர்த்த உ. வே. சாமிநாத அய்யரவர்களும காவேரியின் பொருள் செல்வத்தை உண்டு கல் விச் செல்வத்தை ஈன்று பெருமைப் படுத்திய மகான்களாவார்கள்.

தென்னுட்டில் அருள், கலைச் செல்வங்களைப் போற்றி வளர்க்கும் அறநெறிச் சாலைகளும் காவேரி தீரத்தில்தான் இன்னும் புகழுடன் விளங்கி வருகின்றன. மறைஞான சம்பந்தரின் மாணுக்கராகிய உமாபதி சிவாசாரியார், இவரது ஞான பரம் பரையில் வந்தவரே. திருவாடுதுறை யாதீனத் தலைவர் சிவஞான போதம் என்ற சைவ சித்தாந்த முதல் நூலை தோற்றுவித்த மெய் கண்ட தேவரது ஞான பரம்பரையில் வந்த ஞானசம்பந்த தேசிகரே தருமபுர ஆதீனததை நிறுவியராவார். பிற்காலத்தில் திருச் செந்தூர் முருகப் பெருமானின் அருள் மெற்று பல அருள் செறிந்த நூல்களை இயற்றி, காசியில் ஏற்படுத்திய மடத்தின் கிளையாக தஞ்சை ஜில்லாவில் காவேரி கொள்ளிடத்திற்கு இடையே திருப்பனந்தாள் மடத்தை நிறுவிய மகான் ஸ்ரீகுமரகுருபர ஸ்வாமிகள் ஆவார். ஆதிசங்கரப் பகவத்பாதாளினுல் ஏற்படுத்த பட்ட ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடமும் தற்காலம் காவேரிக்கரை யிலுள்ள கும்பகோணத்தில் அமைந்துள்ளது. இவ்விதம் காவேரிக் கரைகளில் இரத்தினங்கள்போலும், அறம், பொருள், கலைகளுக்கு பெரிய அரண்களாகவும் பிரகாசிக்கின்ற மடங்கள் காவேரியின் புனிதத் தன்மையை நன்கு விளக்குகின்றன.

சோழ மண்டலத்தில் அறம், பொருள், கலை செல்வங் களை ஒன்று திரட்டி, சோழ தேசத்தை ஒரு நந்தவனமாயும்,

தெய்வ நெறி பரந்த திருக்கோயிலாயும், நீதி நெறி தவறாத அரசியல் கூடமாகவும், கலைச் செல்வங்களை வளர்த்து அவை புகழ்பெற்று விளங்கச் செய்யும் ஓர் அரங்காகவும் அமைத்த பெருமை சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் ஆண்டு வந்த நாயக்க மன்னர்களின்கீழ், 60 ஆண்டுகள் அமைச்சராயிருந்து, சேவை புரிந்த *கோவிந்த தீக்ஷிதர்* அவர்களுக்கு உரியதாகும். அதுவும் தெய்வப் பொன்னியின் அருளேயாகும்.

10 தற்பொழுதும், சைவ மடங்களும், ஸ்ரீவைஷ்ணவ மடங்களும், ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீட மடமும், ஜனங்கள் என்றும் சுகமாய் வாழ்வதற்கு வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்களையடைவதற்கு தெய்வநெறி மூலமாய் ஈடு படுத்தி வேண்டிய மார்க்கங்களை காண்பித்து வருகிறார்கள் பாரத மக்களாகிய நாம் அவர்களால் பிரசுரிக்கபடும் நூல்களை சிரத்தையுடன் படித்தும், அவர்களால் காட்டப்படும் அறநெறி, பக்தி, உழைப்பு, சமூக சேவை முதலிய தெய்வ வழிபாடுகளைப் பாதுகாத்தும் அனுஷ்டித்தும் நமது ஜன்ம பூமியை ஜீவகளை பொலிவுறும்படி செய்வது நம்முடைய முதற் கடமையாகும்.

## *குடகு—வடபுறம், மைசூர்—வடபுறம்*

காவேரிதீர க்ஷேத்ராடன விதியில் பிரதக்ஷண மார்க்கமாக வரிசைக்கிரமத்தில் *வடபுறம்* அமைந்துள்ள க்ஷேத்திரங்கள், மேற்கிலிருந்து கிழக்குமுகமாக *ஒன்றுக்கொன்று* உள்ள தூரத்துடன் வரையப்பட்டுள்ளது. முன்னுள்ள க்ஷேத்திரத்திலிருந்து, அடுத்தபடியாகக் குறிப்பிட்ட க்ஷேத்திரம் *எவ்வளவு மைல்* என்று—தலைப்பில் எழுதப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | குடகு பிரதேசம்— | 11 |
| 2. | மைசூர் ராஜ்யம்— | 31 |
| 3. | சேலம்—கோயம்புத்தூர் ஜில்லாக்கள்— | 18 |
| 4. | திருச்சி ஜில்லா— | 23 |
| 5. | தஞ்சை ஜில்லா— | 54 |

*தலைக்காவேரி*: பிரதக்ஷண விதியின் ஆரம்பமாகும் ஸ்தலம். இது குடகு தேசத்தின் மத்தியில் உள்ளது. குன்றுகள், பள்ளத்தாக்குகள், கண் கவரும் இயற்கை வனப்புப் பொருந்திய பிரதேசம். மலையின் உச்சியிலிருந்து 100 அடி தாழ்ந்தவிடத்தில் பிரும்மகிரி என்று வழங்கி வரும் தாழ்வரையில் காவேரி உற்பத்தி

யாகிறதென்று சொல்லப்படும். இவ்விடம் சமுத்திரமட்டத்திற்கு 4000 (நான்கு ஆயிரம்) அடி உயரத்தில் இருக்கிறது. இங்கு நெல்லிமரங்களும், சந்தனமரங்களும் அதிகம். இந்த வனப்பிர தேசத்தில், ஸ்ரீ தத்தாத்ரேயர் அநேக யோகிகளுக்கு உபதேசம் செய்துகொண்டிருப்பதாகக் கருதப்படுகின்றது. மஹாவிஷ்ணு இந்த ஸ்தலத்தில் ஒரு நெல்லிமர உருவாக விளங்குவதாயும், அம்மரத்தை பிரும்மா, ருத்ரன் முதலிய தேவர்கள், ரிஷிகணங்கள் பூஜை செய்வதாயும் புராணங்கள் கூறுகின்றன.

அங்கு நான்கடி சதுரம், நான்கடி ஆழமுள்ள ஒரு சிறிய குண்டம் இருக்கிறது. இந்தக் குண்டத்தில், நெல்லிமரத்தின் அடியிலிருந்து ஜலம் ஊற்றுகள் மூலம் வெளிக்கிளம்பி சிறு ஓட்டங்களுடன் குண்டத்தில் சதா விழுந்துகொண் டிருக்கும். அந்தக் குண்டம் வழிந்து சரிவான, குறுகிய பாறைகள் வழியாக ஓடிக் கீழே உள்ள மற்றொரு பெரிதான குண்டத்தில் நீர் விழுந்து கொண்டிருக்கும். அந்தக் குண்டம் சுமார் 60 அடி நீளமும், 40 அடி அகலமும், 4 அடி ஆழமுள்ளதாயிருக்கிறது. இப்பெரிய குண்டம் நிரம்பி சரிவான பாறைகளின் மூலமாய் ஓடி, நீர் தாரை யானது 'பாகமண்டலம்' என்ற இடத்தை அடைகிறது. அங்கு இந்நீரோட்டம் 20 அடி அகலமும், 4 அடி ஆழமுள்ளதாக பிரவகிக்கிறது. உற்பத்தி ஸ்தானத்தை 'ஸஹ்ய பர்வதம்' அல்லது 'பிரும்மகிரி' என்று புராணங்கள் கூறுகின்றன.

காவேரி, விஷ்ணுவின் ஸர்வாங்க ஸ்பர்சத்தினாலும், அந்த ஸ்தலத்தில் சகல புண்யதீர்த்தங்கள் ஒன்று சேர்வதினாலும், எல்லா புண்ய நதிகளைக்காட்டிலும் மகிமை பொருந்தியவள் எனச் சொல்லப்படுகிறது. இந்தவிடத்தில் அகஸ்திய பகவான் கமண்டலுவில் ஆவாஹனம் செய்யப்பட்டுள்ள எல்லா புண்யதீர்த்தங்களும் காகரூபமாய் வந்த விக்னேசுவரரால் கவிழ்க்கப்பட்டு காவிரி (காக–விரி) என்று புகழ் பெற்று, நதி ரூபமாய் பிரவஹிப்பதாயும் சொல்கிறார்கள்.

காவேரியின் உற்பத்தி ஸ்தானமாகிற 'தலைக்காவேரி' ஸ்தலத்தில் விஷ்ணு பாததீர்த்தமும், உலகிலுள்ள ஸகல புண்ய தீர்த்தங்களும் ஒன்றுசேருவதால் யாத்ரீகர்கள் துலா சங்கிரமண காலத்தில் ஸ்நானம் செய்ய பெருவாரியாக கூடுகிறார்கள். உற்பத்திஸ்தானத்தில் 15 புண்ய தீர்த்தங்கள் உளதாய்ப் புராணங்கள் கூறுகின்றன. அவைகளில் ஸ்நானம் செய்துவிட்டு, மகாவிஷ்ணு ஸ்வரூபமான நெல்லி விருக்ஷத்தையும், காவேரி லோபாமுத்ராவுடன் கூடிய ஸ்ரீ அகஸ்தீசுவரர் ஆலயத்தையும்,



பிரும்மகிரியின் தோற்றமும்
பாகமண்டலத்திற்குச் செல்லும் வழியும்



அகஸ்தியரின் கமண்டலுவைக்
காகம் கவிழ்க்கும் காட்சி



தலைக்காவேரி—குண்டமும் கோவிலும்



அகஸ்தியர் கோவில்



பாக மண்டலம்





ஸப்தஸாகரம் என்ற ஸப்தரிஷி ஆசிரமங்களையும், பிரும்மகிரியின் சிகரத்தையும் தர்சனம் செய்ய வேண்டும்.

*பாகமண்டலம்* - வடகரை. 4 மைல். இந்த இடம் தலைக் காவேரியிலிருந்து 4 மைல் தூரமுள்ளது. இங்கு 'கனகா' என்ற நதியும், அந்தர்வாஹினியாக சுத்ஜ்யோதி என்ற நதியும் காவேரி யுடன் கலக்கின்றன. எனவே, இதை திரிவேணி சங்கமம் எனக் கூறுவர். பாகண்டரிஷி தபசு செய்து இங்கு சிவபெருமானை பிரத்யக்ஷமாக தரிசித்ததால் பாகண்டக்ஷேத்ரமெனவும் அழைக் கப்படும். இங்குள்ள ஸ்கந்தவனத்தில் அகஸ்தியர் தபசு செய்து ஸ்ரீசுப்பிரமணியக் கடவுளிடம் வரப் பிரஸாதம் பெற்றார். இங்கு அகஸ்தியர் ஆலயம், ஸ்ரீமகாவிஷ்ணு, கிருஷ்ண ஆலயங்கள் உள்ளன.

யாத்ரீகர்கள் துலாசங்க்ரமணம், சிவராத்திரி, மஹோதயம் ஆன புண்ய காலங்களில் விசேஷமாய்க் கூடுவார்கள். ஸ்நானம் செய்து பிதிர்க்களுக்கு தர்ப்பணங்களும், பிண்டதானங்களும் செய்வது அவசியமாகும். இந்த இடத்தைப் 'பிரேதாரண்யம்' என்றும் அழைப்பது உண்டு.

இந்த க்ஷேத்திரத்தில் தர்மசாலைகள், கடைகள், போலீஸ், தபால், தந்தி ஆபீஸ்கள் பொதுஜனங்களின் நன்மைக்காக ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

*பாலூரு:* வடகரை—14 மைல்கள் உள்ளன. பாலூர் அப்பா என்ற சிவக்ஷேத்ரம். மேஷவிஷூ ஸங்க்ரமணகாலத்திலும், துலாஸங்க்ரமண காலத்திலும் பெரிய உற்சவம் நடைபெறுகிறது. இங்கு ஹரிச்சந்திர மஹாராஜாவினால் பூஜிக்கப்பட்ட சிவலிங்கம் எப்பொழுதும் காவேரி ஜலத்தால் மூடப்பட்டிருக்கிறது. கல் வெட்டு சிலசாஸனம் காணப்படுகிறது. 'கருகண்டகிஹோலி என்ற சிற்றாறு இங்கு கலக்கிறது.

*விருபாக்ஷபுரம்:* வடகரை: 24 மைல். காவேரி உத்தர வாஹினி, ஸ்நானவிசேஷம்.

*ரங்கஸமுத்ரபலகோடு:* வடகரை: 1 மைல் இங்கு 'சிகோலிஹோலி' என்ற நதி காவேரியில் சேருகிறது. காவேரி உத்தர வாஹினி, ஸ்நான விசேஷம். 'அரங்கநாதர்' ஆலய தரிசனமும், காவேரி ஸ்நானமும் விசேஷ அம்சங்களாகும்.

*பிரேஜர்பேட்டை:* வடகரை: முந்திய க்ஷேத்ரத்திலிருந்து 7 மைல். இது குடகு தேசத்தின் தலைநகராகிய 'மர்காரா'விலிருந்து 18 மைல் தூரம். பெரிய நகரம். இந்த தேசத்தின் கிழக்கு கடைசி எல்லைப் புறத்தில் உள்ளது. இங்கு காவேரி ஸ்நானம் விசேஷம். கணபதி, சூரிய, அரங்கநாதர் ஆலயங்கள் உள்ளன. இந்த ஊரில் "சந்தன அத்தர்" தொழிற்சாலை இருக்கிறது.

ஹைதர் ஆலி மைசூர் ராஜ்யத்தை ஆண்ட சமயம் இந்த ஊரில் தங்கியிருந்தபொழுது தனக்கு ஒரு மகன் (திப்பு) பிறந்த செய்தியைக் கேட்டு, இந்த நகரத்திற்கு 'குஷால் நகரம்' என்று பெயரிட்டான். மாட்டுச் சந்தை நவம்பர் மாதம் நடந்து வருகிறது.

*கூடிகே:* வடகரை: $3\frac{1}{2}$ மைல் தூரம். காவேரி உத்தர வாஹினி. ஸ்நான விசேஷம்; ஸ்ரீ கோபால கிருஷ்ண ஆலய தரிசனமும் விசேஷம்; வருஷா வருஷம் உற்சவம் நடைபெறுகிறது.

*ராம்புர:* வடகரை: 1 மைல் தூரம். இதை ராமனுதபுரம் என்று சொல்வது உண்டு. பிரபல சிவன், விஷ்ணு, ஆஞ்சநேயர் ஆலயங்கள் இருக்கின்றன. ஸ்ரீராமநவமி தினம் பெரிய உற்சவம் கொண்டாடப்படுகிறது. இங்கிருந்து ஸோமவார்பேட்டை என்ற நகருக்கு செல்லலாம்.

*ஹால்ஸெ:* வடகரை: உத்தரவாஹினி காவேரி—1 மைல் ஸ்நான விசேஷம்.

*ஹெப்பாலே:* வடகரை. 1 மைல். ஸ்நான விசேஷம்.

*ஸ்ரீ ரங்கலா:* வடகரை: $4\frac{1}{2}$ மைல். ஸ்நான விசேஷம். இங்கிருந்து காவேரி கிழக்காகத் திரும்புகிறது. குடகு தேசம் முடிவடையும் இடம். மைசூர் ராஜ்யம் ஆரம்பமாகிறது. இங்கு அழகிய உமாமகேசுவரர் ஆலயம் உள்ளது.

## *மைசூர் ராஜ்யம்*

*ஸரகூரு:* வடகரை 5 மைல். காவேரி உத்தரவாஹினி. ஸ்நான விசேஷம். ஒரு சிவாலயம் உண்டு. கொண்ணனூர் மார்க்கத்தில் உள்ளது.

*கொண்ணனூர்:* வடகரை. 2 மைல். ஒரு பெரிய பட்டணம். காவேரி கிழக்கு முகமாகச் செல்லுகிறது. ஒரு சிவாலயம், ஸ்ரீராமர் கோவில் உள்ளது. இங்கிருந்து பல ஊர்களுக்கு ரஸ்தாக்கள் செல்கின்றன.

*ராமனுதபுரம்* : வடகரை. 4 மைல். இது ஒரு பெரிய க்ஷேத்ரம். ஸ்நான விசேஷம். இங்கு காவேரிக்கு ஒரு பாலம் உண்டு. இவ்வூரில் ராமனுதேசுவரர், ஸ்ரீ சுப்ரமணியஸ்வாமி, மஹாவிஷ்ணு, ஸ்ரீராமர், லக்ஷ்மணர், ஸீதை இவர்களின் ஆலயங்கள் இருக்கின்றன. ஸ்ரீ ஸுப்ரமண்யஸ்வாமிககு வருஷா வருஷம் உற்சவம் நடைபெறும். இங்கு பிராமணர்கள் காவேரியி னுள்ள மீன்களுக்கு ஆகாரம் அளிப்பது வழக்கம்

காவேரியின் மத்தியில் 'கோகர்ப்பம்' என்ற நந்தி உருவம் உள்ள சிலை இருக்கிறது. வன்ஹி (அக்னி) புஷ்கரணி தீர்த்தம் இருக்கிறது.

இந்த ஸ்தலத்தை 'வாஸவபுரி' என்றும் சொல்வது உண்டு. வஸிஷ்டரின் உபதேசத்தால் ஸ்ரீராமன் ராவண வதத்தால் உண்டான பாபத்தை இங்கு ஸ்நானம் செய்து, லிங்கார்ச்சனையின் மூலம் போக்கிககொண்டார் என்று புராணம் கூறுகிறது. இந்த 'இராமேசுவரன்' என்ற லிங்கமும், இதற்கு பக்கத்தில் அகஸ்திய ரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அகஸ்தியேசுவரலிங்கமும் தரிசன மாத்திரத்தில் எல்லா பாபங்களையும் அகற்றும். மேலும் 'கபிலி' என்ற சிலையில் *ஞாயித்திரி*, காயத்திரி, ஸாவித்ரி, ஸரஸ்வதி, ஸீதாராம, சுக்ராசாரியார் முதலியவர்களுடைய பாத அடிகள் காணப்படுகின்றன. இவைகளை அர்ச்சனை செய்வதால் எல்லா பாபங்களும் தொலையும். இராமேசுவரர், அகஸ்தீசுவரர் லிங்கங் களுக்கு நடுவில் உள்ள வன்ஹி தீர்த்தத்தில் 64 ஆயிரம் தீர்த் தங்கள் இருக்கின்றன. இவைகளை அர்ச்சனை செய்வதால் சகல பாபங்களும் நீங்கும். இங்குள்ள தங்கமயமான பசுவின் சிலையில் முன் பக்கத்தில் புகுந்து பினபக்கமாக வருவதால், எல்லா பாபங் களையும் போக்கி, குபேர ஸம்பத்தையும் பெருமையையும் அடையலாம் என்ற ஐதீகம். இதற்கு 'கோஜனனம்' எனப்பெயர். உலகத்திலுள்ள வன்ஹி, அர்க்க, சந்திர புஷ்கரணிகள் என்ற மூன்று புண்ய தீர்த்தங்கள் இந்தக் காவேரியில் இருக்கின்றன.

*பஸவபட்டணம்* : வடகரை. 2½ மைல். இவ்வூரிலிருந்து இடத்துறைக்கு நல்ல பாதை செல்கிறது. இதற்கு எதிர்க் கரையில் ருத்ரபட்டணம் உள்ளது. படகு மூலம் செல்லலாம்.

இங்கு பிரபலமான சிவாலயமும், நந்திகேசுவரரும் பார்க்கத் தகுந்தது.

*பஸவனஹள்ளி* : வடகரை 3½ மைல். ஸ்நான விசேஷம். இங்கு சிவாலயமும் நந்தி ஆலயமும் உள்ளன.

*ஹோளேகேரளபுரம்* : வடகரை. 1 மைல். ஒரு பிரபல ஸ்தலம். சிவாலயம் உளது.

*ஹெப்பேலூரு:* வடகரை. 3 மைல். காவேரி கொஞ்சம் தென்மேற்காக ஓடுகிறது. இக்கிராமம் பூர்வகாலத்தில் ஹரிஹர ராயர் என்பவரால் பிராமணர்களுக்கு மான்யமாகக் கொடுக்கப் பட்டு ஜனங்களால் உற்சவாதிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

ஸ்தம்ப கணபதி, ஊரைச் சுற்றியுள்ள ஸப்தமாதா ஆலயங்கள் பிரசித்தி பெற்றவை. ரிஷிகளால் இவ்வூருக்கு 'தக்ஷிண காசி' என்ற '*ஜபதகட்டை*' என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அங்குள்ள 'இராமேசுவர்' ஆலயம் சோழராஜாவால் கட்டப் பட்டது. இதில் கல்வெட்டுகள் நிறைந்துள்ளன.

*சாமராஜ அணைக்கட்டு:* வடகரை. 6 மைல். பல்லூரி லிருந்து காவேரி குறுக்கே அணை போடப்பட்டுள்ளது.

*ராமசமுத்திர அணைக்கட்டு:* வடகரை. 3 மைல் கிழக்கே. இதன் வடபால் 5 மைல் வடக்கில் 'மிதுன ஸாலி க்ராமம்'' என்ற பெரிய விஷ்ணு ஸ்தலம் உளது.

*சாலிக்கிராமம்:* வடகரை. 5 மைல். காவேரிக்கு சமீபம். இந்த க்ஷேத்திரத்தை தக்ஷிண ஸாலிக்ராமம் என்றும் சொல்வார்கள். இவ்விடத்தில் ஸாலிக்ராமம் போன்ற கற்கள் அகப்படுகின்றன.

இங்கு நரஸிம்ஹர் சந்நிதியும், உடையவர் திருப்பாத சந்நிதியும், ஸ்ரீபாததீர்த்த குளமும் இருக்கின்றன. இங்கு லிங்காயத்தார்கள் வசித்து வருகிறார்கள். ராமானுஜகூடம் ஒன்று இருக்கிறது.

*ஹம்பாபுரம்:* வடகரை. 10 மைல். இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். காவேரி ஹம்பாபுர கிராமத்தை தென்பால் சுற்றிக் கொண்டு வடபுறமாகச் செல்கிறது.

*மஞ்சனஹள்ளி:* காவேரியின் மேல்கரை. 1½ மைல் தூரம். காவேரி உத்தரவாஹினி, ஸ்நான விசேஷம்.

இது ஒரு ரெயில்வே ஸ்டேஷன். இங்கிருந்து ரெயில் பாதைகள் பிரிகின்றன.

*பளஹள்ளி:* வடகரை. 7½ மைல். காவேரியின் கீழ்க் கரையில் ஹேமாவதி என்ற நதி சங்கமம் ஆகி, காவேரியுடன் தெற்கு நோக்கி ஓடுகிறது.

இவ்விடம் ஸ்நானம் விசேஷம். கண்ணம்பாடி அணைக் கட்டின் காரணமாய் இவ்வூர் வரையில் நீர்தேக்கம் பெருகி நிற்கிறது.

*கிருஷ்ணஸாகர கட்டே* : வடபாகம். 6 மைல். கண்ணம் பாடி அணையிலிருந்து ½ மைல் வடக்கில் உள்ளது.

இந்த அணையின் தேக்கத்தின் ஜலம் இவ்வூர் வரையிலும் பிரவஹித்திருக்கிறது. இவ்விடம் சிறந்த பழத்தோட்டங்கள் வளர்க்கப்பட்டு வருகின்றன.

*வலமுறி* : வடபாகம். 2 மைல். காவேரியின் C. P. S. அணைக்கட்டின் வடகரையில் உள்ளது.

காவேரி சங்கு மாதிரி வளைந்து போகிறது. அதனால் இதற்கு வலமுறி க்ஷேத்ரம் எனப் பெயர். இங்கு காவேரி இரண்டாகப் பிரிகிறது. வலம்புரீசுவரர் கோவில் பிரசித்தம். விஷ்ணு ஆலயங் களும் உள. பூர்வகாலத்தில் கட்டப்பட்ட வெகு அழகான படிக்கட்டுகள் காணப்படுகின்றன.

*ஸ்ரீநிவாஸ க்ஷேத்ரம்* வடகரை. 1 மைல். காவேரிக் கரையை ஒட்டியுள்ள கிராமம். காவேரியின் பிரிவுகள் ஒன்று சேர்கின்றன. பிரபலமான ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஆலயம் உள்ளது. கலியுகத்தில் க்ஷேத்திர விருக்ஷம் வெள்ளை புளிய மரம். இந்த க்ஷேத்திரத்தின் ஈசான்ய திக்கில் விசுவேசுவர க்ஷேத்திரமும், ஸம்வர்த்தக லிங்கமும் இருக்கின்றன.

*ஸ்ரீநிவாஸபுர அக்ரஹாரம்* : வடகரை. 8 மைல். சமீபத் தில் "லோகபாவனி" என்ற நதி ஸங்கமம் ஆகிறது ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஆலயம் உளது. ஸ்நான விசேஷம்.

*கரிகட்ட* : வடகரை. 1½ மைல். இவ்விடத்தில் கரிகட்ட என்ற மலையைக் குடைந்து ஒரு டன்னல் வழியாய் ஜல ஸப்ளை செய்யப்படுகிறது.

இங்குள்ள ஸ்ரீரங்கனுதர் ஆலயத்திற்கு யாத்ரீகர்கள் செல்கி ருர்கள்.

*தொக்கம்மன் பாளயம்* : வடகரை. 1 மைல். தேவி ஆலயம் இருக்கிறது.

*ஹங்கார ஹள்ளி* : வடகரை. 2 மைல். காவேரி தக்ஷிண வாஹினி.

*ஸோமநாதபுரம்* : வடகரை. 12 மைல். புராதன ஹொய்ஸால அரசர்களின் தலைநகராகியிருந்த இங்கு சிவாலயம் பழமை வாய்ந்து விளங்குகிறது.

18

ஜகன்னுதாசாரி என்ற சிற்பியால் நிர்மாணிக்கப்பட்ட கோயிலில் மிகவும் அபூர்வமான சித்திர வேலைப்பாடுகள் உள்ளன. உட்புறச் சுவர்களில் இராமாயணம், மஹாபாரதம், பாகவத சித்திரங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

*ஸோஸலே :* வடகரை. 2½ மைல். இவ்விடத்தில் பிரபல மத்வ வியாஸராய மடம் உளது.

*தலக்காடு*: வடகரை. 15 மைல். இவ்வூர் மாதவ மந்திரி அணைக்கட்டிலிருந்து ஒரு மைல் கிழக்கேயுள்ள புண்ய ஸ்தலம். இத்தலத்தில் காவேரி மேற்புறம், தென்புறம் வழியாக வளைந்து கிழக்கு நோக்கிச் செல்கிறது. இந்த க்ஷேத்ரத்தை ஒட்டி சில புராணக் கதைகள் காணப்படுகின்றன:

1. ஸ்ரீராமர் இலங்கைக்குப் போகும்பொழுது இங்கு தங்கினுர்.

2. திலீபராஜனுக்கு இங்கு 'ஸகரன்' என்ற புத்திரன் பிறந்தான்.

3. காசி விசுவனுதர் யானை உருக்கொண்டு இவ்விடம் தவம் செய்து வந்த ரிஷிகளுக்கு வன்னிமரத்தடியில் காக்ஷி அளித்ததாகவும், பார்வதி தேவி கோகர்ண தீர்த்தமாய் மாறி தங்கியதாகவும் புராண வரலாறு.

4. காடன், இலன் என்ற இருவேடர்கள் வன்னிமரத்தை வெட்டியதாகவும், அதிலிருந்து இரத்தம் வெளிக் கிளம்பியதாயும், வேடர்கள் பயந்து பரமசிவனை பிரார்த்தித்த பொழுது, அவர் கருணை கூர்ந்து வேடர்களுக்கு அபயம் தந்து, வெட்டப்பட்ட மரத்தின் பாலை காயம்பட்ட இடத்தில் பூசினுல் இரத்தம் வடிதல் நின்றுவிடும் என்று ஆகாயவாணியாய் அருளியதாயும் ஸ்தல புராணம் கூறுகிறது.

இவ்வூரிலுள்ள வீரபத்ரர் ஆலயத்தில் இவ்விரு வேடர்களின் சிலைகள் காணப்படுகின்றன. ஈசன் தனக்குதானே வைத்தியம் செய்துகொண்டதால் வைதீசுவரர் என்று அழைக்கப்படுவதாயும் புராணம் சொல்கிறது. இவ்வூரை 'கஜாரண்யம்' என்றும், தலககாடு என்றும் அழைக்கப்படுகிறது.

இவ்வூரில் அமைந்துள்ள பஞ்சலிங்கங்கள் :

1. அர்க்கேசுவரலிங்கம்: சூரியனுல் பூஜை செய்யப்பட்டது. இங்கு காவேரி உத்தரவாஹினியாய் ஓடுகிறது.

2. பாதாளேசுவர லிங்கம்: வாஸுகி பூஜை செய்த இடம். காவேரி கிழக்கு முகமாய் ஒடுகிறது.

3. சைகதேசுவர லிங்கம்: பிரமனுல் பூஜிக்கப்பட்டது. காவேரி தக்ஷிண வாஹினியாய் ஓடுகிறது.

4. மல்லிகார்ஜுன லிங்கம்: காமதேனுவால் பூஜிக்கப் பட்டது. காவேரி மேற்கு முகமாய் ஓடுகிறது.

5. மகாலிங்கம்: மத்தியிலுள்ளது. வைத்யேசுவர முனிவ ரால் பூஜை செய்யப்பட்டது.

இங்கு பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பிரபலமான பஞ்சலிங்க தரிசனம் நடைபெறுகிறது. இந்தப் பிரதேசம் கங்க வம்ச அரசர்களால் ஆளப்பட்டது. பிறகு மைசூர் அரசர்கள் இந்த ராஜ்யத்தைப் பிடித்துக்கொண்டார்கள். இதன் பயனுக கங்க வம்சத்து ராணி வருத்தமடைந்து நதியில் விழுந்து பிராணனை விட்டாள். அதைக் கண்டவர்கள் தலக்காடு கிராமத் துப் பக்கத்தில் மணற்குன்றுகளில் அவளைப் புதைத்து விட்டார் களாம். இவ்விடம் சில மைல் தூரம் வரையிலும் மணலைத் தவிர வேறு ஒன்றையும் காணமுடியாது. அநேக ஆலயங்கள் புதைந்து இருக்கின்றன. பஞ்சலிங்க தரிசன காலத்தில் சில கோயில்களை மணலிலிருந்து பிரித்து வெளித் தெரியும்படி வெட்டியெடுக்கிறுர்கள்.

தலக்காடு பற்றி இன்னுமொரு கதை உண்டு. அக்கதை 'தலக்காடு' என்று பெயர் வந்ததற்கு கரரணமாக விளங்குகிறது. தல், காடு, இருசகோதரர்களின் பெயர்கள். காட்டு யானைகள் இங்குள்ள ஒரு மரத்தை பூஜைசெய்து வந்தனவாம். இருசகோ தரர்களும் யானைகள் பூஜித்து வந்த மரத்தை வெட்டினுர்களாம். மகா விஷ்ணுவின் உருவக் காக்ஷியைக் கண்டார்கள், யானைக ளெல்லாம் மஹரிஷிகளாக மாறி மோக்ஷம் அடைந்தனர். வேடர்கள் வெட்டிய மரத்திலிருந்து ரத்தம் வெளிப்பட்டது. அதைக் கண்டு இருவேடர்களும் பயந்து விட்டார்கள். வெட்டப் பட்ட இடத்தில் பரமசிவன் ஒரு மூலிகையைத் தடவவும் ரத்தம் தடைப்பட்டது. மரம் மகாவிஷ்ணு ரூபமாக மாறியது. இதற்கு அத்தாக்ஷியாக கீர்த்தி நாராயணஸ்வாமி ஆலயத்தின் பக்கத்தில் ஒரு மகா விஷ்ணு ஆலயம் இருப்பதைக் காணலாம். மகாவிஷ்ணுவும், பரமசிவனும் வேடர்களுக்கு தரிசனம் கொடுத்து அனுக்ரஹித்தார்கள்.

*முடுக்குத்துறை:* வடகரை. (மேல்கரை) 1 மைல். தலக்காட்டிற்கு வெகு சமீபமாய், காவேரிக் கரை ஓரத்தில்

ஒரு சிறிய மலைக் குன்றின்மேல், *ப்ரமாராம்பாள்* ஸமேத *மல்லிகார்ஜுன ஸ்வாமி* கோயில் உள்ளது. இப்பக்கத்தில் இது ஒரு பெரிய யாத்திரை ஸ்தலம். ஒவ்வொரு வருஷமும் மாசி மாதத்தில் பெரிய உற்சவம் நடைபெறும்.

*கீர்த்திநாராயணபுரம்*: வடகரை. 1 மைல். தலக்காட்டிற்குத் தென்பால் காவேரியின் வெகு சமீபத்தில் கீர்த்தி நாராயண ஸ்வாமி ஆலயம் உள்ளது.

*குக்கூர்*: வடகரை. 2 மைல். இவ்விடம் காவேரி உத்தர வாஹினி. ஒரு சிவாலயம் இருக்கிறது.

*சிவசமுத்திர அணை*: வடகரை. 11 மைல். காவேரி உத்தரவாஹினியாக ஓடும் இடத்தில் ஒரு அணைக்கட்டு பெரிய மலைப் பிரதேசத்தின் நடுவில் போடப்பட்டிருக்கிறது. காவேரியின் ஒரு பக்கத்தில்தான் அணை உளது. மற்றொரு பாகம் சுற்றி ஓடுகிறது. காவேரி மலையாலும், அணைக்கட்டாலும் தடுக்கப் பட்டு அநேக பிரிவுகளாகப் பிரிந்து, நடுவில் அநேக தீவுகளை ஏற்படுத்திக்கொண்டு மலையிலிருந்து கீழ்நோக்கி நீர்வீழ்ச்சி களாய் விழுந்து ஓடுகிறது.

சிவசமுத்திரம் என்பது ஒரு கிராமம். அது அணைக்கட்டுக்கு அப்பால் உள்ள ஒரு தீவாகும். இது மாலவல்லி தாலூகாவின் தெற்கு எல்லையில் இருக்கிறது. இங்கு வடக்கு முகமாய்ச் செல்லும் காவேரி இரண்டாகப் பிரிந்து மறுபடியும் சேருவதால் சிவசமுத்திரம் ஒரு தீவாக அமைந்துள்ளது.

காவேரியின் கீழ்புரம் ஒரு மைல் தூரத்தில் 230 அடி உயரத்திலிருந்து நீர் வீழ்ச்சியாக ஏற்பட்டிருக்கிறது. இதற்கு பர்சுக்கி நீர்வீழ்ச்சியெனப் பெயர். காவேரியின் மேற்குப் பிரிவில் ககனசுகி (கங்கன்சுகி) என்ற நீர்வீழ்ச்சி 330 அடி உயரத்தி லிருந்து ஏற்பட்டுள்ளது. 16-வது நூற்றூண்டில் இருந்த கங்க ராஜன், தன் மனைவியாலும், மாமனாராலும் அவமானப்படுத்தப் பட்டதாகும், காவேரியின் இந்த நீர்வீழ்ச்சியில் விழுந்து மாண்ட தாகவும், அதனால் 'கங்கன்சுகி' என்று பெயர் வந்ததாயும் சரித் திரம் கூறுகிறது. இரு பிரிவுகளும் குறுகலான வழியில் ஓடி ஒன்றாகக் கலந்து கிழக்காகச் செல்கிறது. இந்நீர்வீழ்ச்சிகளிலும், ஷிம்ஸாவிலும் மின்சக்தி ஏராளமாய் உற்பத்தி செய்யப்பட்டு மைசூர் ராஜ்யத்தில் உள்ள பலதொழிற்சாலைகளிலும், கோலார் சுரங்கம், நகரம் முதலிய விடங்களிலும் உபயோகிக்கப்படுகிறது.

சிவன் கோயில்களும், பெருமாள் கோயில்களும் இருக் கின்றன. மோஹன ரங்கநாதர் சயனக்கோலமாக இருக்கிறார்.



சிவசமுத்திரம்—காவேரி நீர்வீழ்ச்சி



ஹோகைனக்கல்—காவேரி நீர்வீழ்ச்சி



மேகேதாட்—ஆடு தாண்டும் காவேரி



இப்படம் மேகேதாட் அல்ல
முப்பது ஆண்டுகட்குமுன்
நமது ஆசாரியாள்
ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர சரஸ்வதி
சித்தூர் ஜில்லாவில் ஓரிடத்தில்
அளித்த காடசி

இவருடைய பாதத்திற்கு அருகில் காவேரி அம்மன் வீற்றிருக்கிருள்.

காட்டு மிருகங்கள் அதிகம் சஞ்சரிக்கின்றன. காவேரிக்கு இங்கு ஒரு பாலம் கட்டப்பட்டிருக்கிறது.

*ஷிம்ஸாநதி சங்கமம்:* வடகரை. 6½ மைல். சிவசமுத்திரத்திலிருந்து காட்டு மார்க்கமாய் 6½ மைல் தூரத்தில் காவேரியில் கலக்கிறது. கரடுமுரடான காட்டுமலை மார்க்கம்.

*முத்தலிதேவ் (முத்தத்தி):* வடகரை 7 மைல். இங்கு வருவது கஷ்டம். இந்தவிடத்தில் காவேரியில் ஒரு மடு இருக்கிறது. அதிக ஆழமுள்ளது. ஒரு சமயம் ஸீதாதேவி தன் மூக்குத்தியை ஜலத்தில் நழுவவிட்டதாயும், ஹனுமான் அதை எடுத்து தந்ததாகவும், அதனுல் அவருக்கு 'முத்தத்திராயர்' என அந்த பிரதேசத்தில் பெயர் வழங்குவதாயும் புராண வரலாறு.

இந்தவிடத்தில் முன்னொரு காலத்தில் யாகம் நடந்து வந்ததாக ஐதீகம். இன்றும் பூமியை வெட்டினுல் வாசனை விபூதி அகப்படுகிறது. 'முத்தத்திராயர்' எனப்படும் ஹனுமார் ஆலயம் பிரசித்தமானது.

*ஸங்கமம்:* வடகரை. 10 மைல். இங்கு அர்க்காவதி என்ற நதி காவேரியில் சங்கமமாகிறது. சங்கமஸ்தலத்தில் சங்கமேசுவரர் ஆலயம் இருக்கிறது. ஸ்நான விசேஷம். சகல தோஷங்களும் நிவர்த்தியாகும்.

*மேகேதாடு:* வடகரை. 2½ மைல். காவேரி தெற்கு நோக்கி ஓடுகிறது. இந்த ஸ்தலம் காவேரியின் கீழ்கரையில் அமைந்துள்ளது. மலைகளின் நடுவில், ஆடுகள் தாண்டக்கூடிய அளவிற்கு குறுகலான அகலத்துடன் வெகு அழகாகவும், வேக விறுவிறுப்புடன் ஓடிவருவது மனோரம்யமாக இருக்கும்.

முன்காலத்தில் 'சம்மந்தகராஜன்' என்பவன் இருந்ததாயும், அவன் இவ்விடத்தில் ஒரு பெரிய கோட்டை கட்டியிருந்ததாயும், அவன் இந்த இடத்தில் ஊஞ்சல் போட்டு அதில் களைப்பாறுவது வழக்கம் என்றும் சொல்லப்படுகிறது. அதற்கு அடையாளமாக கோட்டையிலிருந்த சின்னங்களும், ஊஞ்சல் சங்கிலி போடக்கூடிய வளையங்களும் காணப்படுகின்றன.

இந்த இடத்தில் ஸீதாதேவி ஸ்நானம் செய்த தாயும், அவள் ஸ்நானம் செய்தவிடத்தில் இன்றும் ஜலம் மஞ்சள் நிறமாக காணப்படுவதாயும், சொல்கிருர்கள். திருமணமேடு என்ற மடு

உளது. இதன் ஆழம் கண்டு பிடிக்கமுடியவில்லை. சுழல்கள் அதிகம். இதில் போடப்பட்ட ஒரு துரும்பு 12 தடவை சுற்றி பிறகு உள்ளே சென்று விடுகிறது.

இந்த்விடத்தில் வனம், கிரி, நதி மூன்றும் பொருந்தியிருப்ப தால் புண்ய க்ஷேத்ரமாக கருதப்படுகிறது.

இங்கிருந்த அரசன் விவசாயத்திற்காக கால்வாய்கள் வெட்ட ஆரம்பித்தபொழுது, வீரபத்ரசுவாமி கோபங்கொண்டு அரசனும், கோட்டையும் அழியும்படி சாபமிட்டதாயும் சொல்கிறார் கள்.

*கோயம்புத்தூர்—சேலம் ஜில்லாக்கள்*

*ஹொகைறநக்கல்:* வடகரை. மேகதாடுவிலிருந்து 30 மைல் தூரம்.

இது ஒரு புண்ய க்ஷேத்திரம். இப்பெயர்கொண்ட இந்த ஸ்தலத்திற்கு "புகையுள்ளபாறை" என்று பொருள். அங்குள்ள விறுவிறுப்பான நீர்வீழ்ச்சியிலிருந்து கிளப்பும் திவிலைகள் புகை போல் பரவி சூழ்ந்து நிற்கும்.

இந்தவிடத்தில் பிரும்மா முதலிய ரிஷிகள் யாகம் செய்த தாயும், காவேரி அகங்காரத்தினால் யாக சாலையை மூழ்கடித்த தாயும், பிரும்மாவினால் சபிக்கப்பட்டு வற்றிவிட்டதாயும், பின்னர் ஸ்ரீரங்கநாதரின் அனுக்ரஹத்தால் ஜலம் பிரவஹித்ததாயும் ஐதீகம்.

இவ்விடத்தில் காவேரி 100 அடி உயரத்திலிருந்து விழுகிறது. இரண்டு பிரிவுகளாக ஓடும் பொழுது பெரிய பாகம் ஹொகைற நக்கல் வழியாகவும், சிறிய பாகம் மற்றுமொரு நீர் வீழ்ச்சியாகவும் விழுந்து மேற்கு முகமாய்ச் சென்று பெரிய நீர் வீழ்ச்சிக்கருகில் கலக்கிறது.

சிறிய கிளையாகவரும் காவேரியில்தான் ஸ்நானம் செய்வதற்கு வசதிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இங்கு ஆடிமீ 18உ-லும், ஐப்பசி பௌர்ணமியிலும் ஸ்நான விசேஷம்.

வழியில் புராதன அசுவத்தவிருக்ஷம் ஒன்று இருக்கிறது. அது தன்னை அடைந்தவர்களுக்கு ஞானத்தை உண்டாக்கும். அந்த விருக்ஷத்திற்கு பக்கத்தில் ஒரு புற்று இருக்கிறது. அதற்கு எதிரில் பிரும்ம தீர்த்தம் உளது. பிரும்ம தேவருடைய யாக வேதியிலிருந்து உண்டான அக்னி தீர்த்தமும், சக்கர தீர்த்தமும் இருக்கின்றன. ஸநத்குமாரஸரித் என்ற சிற்றாறு தூரத்திலிருந்து பிரவஹித்து, இங்குள்ள புண்ய தீர்த்தங்களுக்கருகில் காவேரி


காவேரி நதி
மேட்டூர் அணையிலிருந்து
கல்லணை வரை
மைசூர்
நீலகிரி
மொய்யாறு
உதகமண்டலம்
பவானி
சத்தியமங்கலம்
பவானி நதி
கோயம்புத்தூர் ஜில்லா
மேட்டூர் அணை
சேலம்
சேலம் ஜில்லா
ஈரோடு
காவேரி நதி
கோயம்புத்தூர்
போத்தனூர்
திருப்பூர்
நொய்யல்
காங்கயம்
கரூர்
வாங்கல்
நெரூர்
நாமக்கல்
கொல்லி மலை
தம்மம்பட்டி
பச்சை மலை
துறையூர்
திருச்சி ஜில்லா
முசிரி
ஸ்ரீரங்கம்
லால்குடி
மணவாசி
குளித்தலை
திருச்சி
திருவானைக்காவல்
மணப்பாறை
அமராவதி
உடுமலைப்பேட்டை
பழனி
பழனி மலை
திண்டுக்கல்
புதுக்கோட்டை
குறிப்பு
மைசூர் எல்லை
நதிகள்
ரயில் பாதை
சாலைகள்
1. மேல் அணை
2. கல்லணை



மேட்டூர் அணையும் தேக்கமும்

யுடன் கலக்கிறது. மகாபவித்ரமான நான்கு தீர்த்தங்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1. ந்யக்ரோத தீர்த்தம்.
2. சக்ர தீர்த்தம்.
3. நாரத தீர்த்தம்.
4. கௌதம தீர்த்தம்.

*நெருப்பூர்*; வடகரை: 18 மைல். இங்கு முத்தாளபள்ள நதி ஸங்கமம். காவேரி தண்ணீர் தேக்கத்தினால் சில கிராமங்களும், கோவில்களும் மூழ்கிப்போய்விட்ட படியால் நாகமரைத் துறை ஜனங்கள் இங்கு வந்து குடியேறி விட்டார்களாம். பிரதி வருஷமும் ஆடிமீ 18௳ காவேரிப் பெருக்கில்—காவேரிக்கு சமையல் செய்து படைப்பது வழக்கம்.

சமீபத்திலுள்ள பாலவாடி கிராமத்தில் ஜலகண்டேசுவரர் ஆலயம் இருக்கிறது. இங்கு ஆடிமீ முதல் தேதி உற்சவம் ஆரம்பமாகிறது.

*பாலையூர்*: வடகரை. 11 மைல். இங்கு பாலையாறு, தொப்பையாறு ஸங்கமங்கள். ஸ்நான விசேஷம்.

*மேட்டூர் அணை*: வடகரை. 16 மைல். கடல் மட்டத்திற்கு 790 அடி உயரத்தில் இங்கு காவேரியின் குறுக்கே அணைகோலி 120 அடி ஆழமுள்ள ஏரி உண்டாக்கப்பட்டிருக்கிறது. நீர்ப் பாசான வசதிக்காக கட்டப்பட்ட இவ்வணை 1934–ம் ௵ முடிவு பெற்றது. தஞ்சை ஜில்லாவின் உயிர் நாடியாக விளங்குகிறது. ஆறு வடக்கு தெற்காக பவானி வரையில் ஓடுகிறது.

இங்கு மின்சார சக்தி உற்பத்தி செய்யப்படுகிறது. நூல் நூற்கும் தொழிற்சாலை, சலவைச் சோடா, வனஸ்பதி, சோப், ரஸாயனப் பொருள்கள் முதலான உற்பத்திசாலைகள் மின் சக்தியால் இயக்கப்படுகின்றன.

*புள்ளப்பட்டி*: வடகரை. சுமார் 14 மைல். திருச்செங்கோட்டையைச் சேர்ந்த ஒரு கிராமம். ஸ்ரீ வெங்கடேசுவர விஷ்ணு ஆலயம் இத்தலத்தில் உள்ளது. இவ்விடத்தில் துலா ஸ்நானம் விசேஷமாகும்.

*கோநேரிப்பட்டி*: வடகரை. 7 மைல். அன்னபூரணி ஸமேத அனந்தேசுவரர், ராதா, ருக்மணி ஸமேத வேணு கோபாலன், ஆலயங்கள் உள்ளன.

*காவேரிப்பட்டி*: வடகரை. 5 மைல். சரபங்காநதி ஸங்கமம். சிவன் விஷ்ணு ஆலயங்கள் உள்ளன.

*குமாரபாளையம்*: வடகரை. 14 மைல். லக்ஷ்மி நாராயணர் ஆலயம், விசாலாக்ஷி ஸமேத விசுவநாதர் ஆலயமும் இருக்கின்றன.

*கரும்பலமஹாதேவ்*: வடகரை: 22 மைல் தூரம். காவேரி பஸ்சிமவாஹினி: (மேற்கு முகமாய் போகிறது) மஹாதேவர் ஆலய தரிசனம் விசேஷம்.

*நாகபாளையம்:* வடகரை. 9 மைல் தூரம். சிவன்கோயில், விஷ்ணுகோயில் உள்ளன. கொடுமுடி க்ஷேத்திரத்திற்கு எதிர்க் கரையில் உள்ளது.

*கொந்தளம்*: வடகரை. 5 மைல். அகண்ட காவேரி தீரம்: இந்தவிடத்தின் எதிர் கரையில் நொய்யல் ரயில்வே ஸ்டேஷன்.

*வெண்கரை*: வடகரை. 3 மைல். இவ்வூருக்கு சர்க்கார் வெண்கரையென்று சொல்வதுண்டு. ஸ்ரீ வரதராஜப்பெருமாள் கோயில் உளது.

*சர்க்கார் பாண்டமங்கலம்:* வடகரை: 1 மைல் தூரம். பிரஸன்ன வேங்கடேசுவர ஆலயம் உள்ளது. வேளாளர்கள் அதிகம் வாஸம் செய்கிறார்கள்.

*திருமலைநாம ஸமுத்ரம்*: வடகரை. 3 மைல். காவேரி வெகு அகலம். இவ்வூரில் விஷ்ணு ஆலயம் உண்டு.

*நஞ்சைஇடையார்*: வடகரை. 1½ மைல் தூரம். சமீபத்தில் திருமணிமுக்தா நதி சங்கமம் ஆகிறது. சிவாலயம் உண்டு. ஸ்நான விசேஷம். கூடுதுறை என்றவிடத்தில் மேற்கண்ட நதி ஸங்கமம்.

*மோஹனூர்*: வடகரை. 11 மைல் தூரம். இதை வில்வ கிரிக்ஷேத்ரம் என்றும் சொல்வது உண்டு. அகண்ட காவேரியின் கண் உள்ள பெரிய புராண ஸ்தலம். தேவாலயம் இருக்கிறது. இதில் அதிஷ்டான தேவதை "ஸ்ரீ அசலதீபேசுவரர்". இங்குள்ள விசித்திரம் என்னவெனில் சிவலிங்கத்திற்குமுன் வைக்கப்பட்டுள்ள 'தீபஜ்வாலை' காற்று எவ்வளவு வேகமாக அடித்தாலும் அசையாமல் எரியும். அதனால் ஸ்திரதீபேசுவரர் அல்லது அசலதீபேசுவரர் எனப்பெயர் கொண்டது. மற்றொரு புரம் மதுகரவேணி அம்மன் சன்னதி. இந்த தேவியின் ஸ்தானத்திலிருந்து க்ஷீரம் ச்ரவிக்கிறது என்றும், அந்த க்ஷீரம் சிறியு ஜல

தாரி வழியாய் காவேரி நதியில் ஸங்கமம் ஆகிறது என்றும் சொல்கிறார்கள். இந்த தீர்த்தத்திற்கு 'ஸ்தன்ய தீர்த்தம்' என்றும், குமார தீர்த்தம் என்றும் கூறுவர். இங்கு கங்கையும், மணி தீர்த்தமும் சேருவதாய் புராணம் கூறுகிறது.

ஸ்ரீ தேவி ஆலயம் உத்தர பாகத்தில் சுவற்றில் சிலா சாஸனம் உள்ளது. கிராம தேவதை நாவடி கருப்பன்ஸ்வாமி, ஸ்ரீ பத்ரகாளியம்மன். ஸ்ரீ ஸுப்ரமண்யஸ்வாமியை அம்பிகை தேடி வந்ததால், தமிழில் மகனூர் என்பது மோஹனூர் என்று மருவி பெயர் வந்ததாகவும், 'கொமாயி' என்பது 'குமாரம்' என்று மருவியதாயும் சொல்லப்படுகிறது. குமாரபாளையம் என்ற ஊர் மோஹனூர் பக்கத்தில் கால் மைல் தூரத்தில் உள்ளது.

*சங்கரபாளையம்:* வடகரை: 1 மைல். (குமாரபாளையத்திலிருந்து) சிவன், உமை ஆலயம் உள்ளது.

*உருவங்தூர்*: வடகரை. 2 மைல். அகண்ட காவேரி நதிக் கரையில் உள்ள ஒரு ஆலமரத்தடியின் கீழ் பஞ்சமுக ஹனுமார் கோயில் இருக்கிறது. இந்த ஆஞ்சநேயரின் ஐந்து முகங்கள்:

1. ஆஞ்சநேயர்
2. குதிரை முகம்
3. மனிதன் முகம்
4. வராஹ முகம்
5. ஆடு முகம்.

இவ்வூரில் பிரபலமான செல்லாண்டி அம்மன் கோயில் உள்ளது. பனிரெண்டு வருடத்திற்கு ஒரு முறை உற்சவம் நடைபெறுகிறது.

# காவேரிதீர க்ஷேத்திரங்களின் வரிசைக் கிரமம்

## வடபுறம் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி திரிச்சிராப்பள்ளி ஜில்லாவைச் சேர்ந்த ஸ்தலங்கள் 23

### *திரிச்சிராப்பள்ளி ஜில்லா*

### *வடபுற க்ஷேத்திரங்களின் வரிசை*

*உன்னியூர்:* வடகரை: 2½ மைல். இது காவேரிக் கரையை ஒட்டி உள்ளது. இவ்விடம் சிவாலயம், காளி ஆலயம் உள்ளன.

*ஸ்ரீராம சமுத்ரம்:* வடகரை: 4 மைல். இவ்விடமிருந்து அகண்ட காவேரி ஆரம்பம். அய்யன்வாய்க்கால் இங்கிருந்து பிரிகிறது. இவ்வூரில் வாலீசுவரர் கோயில் உள்ளது. வாலி என்ருல் மணல் என்று அர்த்தம். இங்குள்ள லிங்கம் மணலால் பிடிக்கப்பட்ட ஸ்வயம்பூவாக சொல்லப்படுகிறது. இங்குள்ள கோவிலில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இந்த கிராமத்தை அய்யிலூர் என்றும் சொல்வது உண்டு. வாலியால் ஸ்தாபிக்கப் பட்ட லிங்கம் என்றும் புராணக் கதை ஒன்று உண்டு.

கோயில் உள்ள இடம் ராம சமுத்திரம் என்றும், அக்ரஹாரம் உள்ளவிடம் அய்யிலூர் என்றும், பெயர் வழங்கி வருகிறது. அக்ரஹாரத்தின் மத்தியில் ஒரு விஷ்ணு ஆலயம் உள்ளது. சிவன்கோயில்: ஸுவர்ணும்பாள் ஸமேத வாலீஸ்வரர்.

*காட்டுப்புத்தூர்:* வடகரை: 1½ மைல். இங்கு சீலப் பிள்ளையார் என்ற விநாயகர் ஆலயம், சிவன் கோயில் உள்ளன.

*நத்தம்:* வடகரை: 4 மைல். அகண்டகாவேரிதீரம். மனதிற்கு நிம்மதியும் கண் கவரும் காக்ஷியுடனும் கூடிய பிரதேசம் மீனுக்ஷி ஸமேத சுந்தரேசுவரர் ஆலயம் உளது. கிருஷ்ணன் கோயிலும் இருக்கிறது. இங்குதான் பிரசித்திபெற்ற கிருஷ்ண பாகவதர் என்ற மகான் இருந்தார். இங்கு ரோஜாப் புஷ்பங்கள் அதிகம்.

இந்த ஸ்தலத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகள் தங்கி: ஒரு வருஷம் வியாஸ பூஜையும், நவராத்ரி பூஜையும் அதிருத்ர ஹோமமும் சதசண்டி ஹோமமும் விமரிசையாக நடைபெற்றன.

*திருநாராயணபுரம்*: வடகரை: 4 மைல். ஸ்ரீநரஸிம்ம மூர்த்தி ஹிரண்யாக்ஷனை வதம்செய்த தோஷம் நீங்குவதற்கு, கருப்பத்தூரில் சிவமூர்த்தியை பிரதிஷ்டைசெய்து பூஜிக்க, அதனால் தோஷம் நீங்கப் பெற்றார். சிவபிரானால் வேண்டிக் கொண்டபடி மகாவிஷ்ணு சயனகோலத்துடன் இந்த தலத்தில் அமர்ந்து ஜனங்களுக்கு தர்சனம் அருளியபடியால் திருநாராயண புரம் என பெயர் வழங்கலாயிற்று.

ஒரு சமயம் வைஷ்ணவ சமயாசாரியார் ஸ்ரீராமானுஜர், சோழராஜனுக்கு பயந்து இவ்வூரில் ஒரு இரவு தங்கி, பெருமாளிடம் அனுக்ரகம் பெற்று மாறுவேடத்துடன் மைசூர் ராஜ்யம் சென்றார். அங்கு சிவபெருமான் பெயர்கொண்ட மேல்கோட் என்றவிடத்தில் 'திருநாராயணபுரம்' என்ற ஸ்தலத்தை ஸ்தாபித்தார். இதை பிரகலாத க்ஷேத்ரம் என்றும் சொல்வதுண்டு. நான்கு வேதங்களையும் தலையணையாகக்கொண்டு சயனங்கொண்ட பகவானை தரிசித்தால் வேதங்களை அத்யயனம் செய்த புண்ய பலன்கிட்டும் எனச் சொல்கிறார்கள்.

*வரதராஜபுரம்*: வடகரை: 3½ மைல். கணபதி ஆலயம், புஷ்பகவல்லி ஸமேத புஷ்பவனேசுவரர் ஆலயம், ஒரு பஜனை மடம் உள்ளன. ஸ்ரீராமநவமி ராதாகல்யாண உற்சவங்கள் பிர பலமாக நடைபெறுகின்றன.

*தொட்டியம்*: வடகரை: 1½ மைல். திரிபுரசுந்தரி ஸமேத அக்னி நர்த்தனேசுவரர் ஆலயம், பத்ரகாளி அம்மன் ஆலயம் உள்ளன. அம்பாளை மிகவும் சக்திவாய்ந்த தெய்வ மாகக கொணடாடுகிறார்கள்.

*மஹேந்திரமங்கலம்*: வடகரை: 1 மைல். வேணு கோபாலர் ஆலயம், ஆதிசங்கரர் ஆலயம் உள்ளன.

*திரு ஈங்கோய்மலை*: வடகரை: 4 மைல். இது ஒரு புராண ஸ்தலம். மரகதவல்லி ஸமேத மரகதேசுவரர் ஆலயம் உள்ளது. திருப்புகழ் பாடல் பெற்ற சுப்ரமண்ய ஸ்தலம். இங்கு கிருத்திகா ஸோமவாரம் விசேஷம்.

இங்கு அகஸ்தியர் ஈ ரூபமாய் சுவாமியை தரிசித்தார். கோவில் மலைமேல் உள்ளது. ஞானசம்பந்தர் பதிகம் பெற்ற ஸ்தலமாகும். இங்கு சாயரக்ஷை தரிசனம் விசேஷம்.

காலைக்கடம்பர், மத்யானச் சொக்கர், அந்தி திரு ஈங்கோய் மலை, அர்த்தயாமம் கருப்பத்தூர் தரிசனம் செய்தால் விசேஷ புண்ய பலன் கிட்டும் எனச் சொல்கிறார்கள்.

*முசிரி*: வடகரை: 3 மைல். அகண்ட காவேரி. கற்பூர வல்லி ஸமேத சந்திர மௌளீசுவரர் ஆலயம் உள்ளது.

*அய்யம்பாளையம்*: வடகரை: 5½ மைல். சுப்ரமணியர் ஆலயம் உள்ளது. பங்குனி மாதத்தில் பங்குனி உத்திர உற்சவம் நடைபெறும்.

*ஆமூர்*: வடகரை: 5½ மைல். ஆனந்தவல்லி ஸமேத ரவீசுவரர் கோயில் உள்ளது.

*அக்ரஹாரம்*: வடகரை: ½ மைல். அகண்ட காவேரி தீரம். ஸ்நான விசேஷம்.

*குணசீலம்*: வடகரை: 3 மைல். இது பிரபல வைஷ்ணவ ஸ்தலம். இங்கு ஸ்ரீ வேங்கடேச பெருமாள் ஆலயம் உள்ளது. இது குணசீலரிஷி பூஜித்த ஸ்தலம். ஸ்நான விசேஷம். துர்தேவதைகள் பெருமாள் சந்நதியில் அகன்று விடுகின்றன. கரிகால சோழனால் இக்கோயில் நிர்மாணிக்கப்பட்டது. சுருத தேவருக்கு கண் தெரியச் செய்ததும், பிருதிவீ ராஜனுக்கு கால் கொடுத்ததும், ஊமைப் பிள்ளையை பேசும்படி செய்ததும் இந்த க்ஷேத்ர மகிமையாகும்.

*வாத்தலைக்கூடு*: வடபுறம்: 1 மைல். பாதாளேசுவரர் மூலஸ்தானம் ஜலமட்டத்திற்கு கீழ் உள்ளது. கோடையில்தான் தரிசனம் செய்யலாம்.

*மாதவப்பெருமாள் கோயில்*: கொள்ளிட, காவேரி வட கரை 8 மைல். மாதவப்பெருமாள் சன்னதி உள்ளது. இக் கோயிலுள் சிவன், அம்பாள் சன்னதியுமுண்டு.

*திருப்பாச்சில் ஆசிரமம்*: கொள்ளிட காவேரி வடகரை 1 மைல். பாலசுந்தரி ஸமேத மாற்றறிவரதர் சன்னதி இருக் கிறது. நடராஜமூர்த்தி இவ்வூரில் ஸர்ப்ப நடனமாக விளங்கு கிறார். ஸ்தல விருக்ஷம் வன்னிமரம். திருஞானஸம்பந்தர் பதிகம்பாடி, மாற்றுக் குறைவில்லாத பொன் காசுகள் பெற்ற ஸ்தலம். அம்பாள் சன்னதியில் 'தாம்பிரபரணி' என்னும் தீர்த்த

புஷ்கரணி உள்ளது. சுந்தரர், சம்பந்தஸ்வாமிகள பதிகங்கள் பெற்ற ஸ்தலம்.

*பிக்ஷாண்டார் கோயில்:* கொள்ளிட காவேரி வடகரை 2 மைல். இங்குள்ள ஆலயத்தில் பிரும்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளும் கோயில் கொண்டுள்ளார்கள். பிக்ஷாடனம் செய்த பரமசிவனுக்கு லக்ஷ்மிதேவியாரால் பிக்ஷை இங்கு இடப் பட்டது. கதம்ப தீர்த்தம் விசேஷம். சிருஷ்டிக்கும் சக்தியை பிரும்மா இங்கு மீண்டும் பெற்ருர். சிவனுக்கு பிரும்மஹத்தி தோஷமும் நீங்கியது.

சௌந்திர பார்வதி ஸமேத ஸ்ரீ பிக்ஷாடனமூர்த்தி. ஸ்ரீ பூர்ண வல்லி ஸமேத புருஷோத்தமர், ஸன்னதிகள் தனித்தனியே கோயிலுள் உள்ளன.

பிரும்மதேவர் துவாதசாக்ஷரத்திஞல் பரமசிவனே ஆராதித்து சிருஷ்டி ஸாமர்த்யம் பெற்ருர்.

கதம்பவனமாகிய இங்கு பரமசிவன் பிரும்மாவின் கமண்டலு விலுள்ள தீர்த்தத்திஞல் அபிஷேகம் செய்யப்பட்டபடியால் கதம்ப தீர்த்தம் ஏற்பட்டது.

*ஸ்ரீரங்கம்:* வடகரை: 3 மைல். காவேரி கொள்ளிடத்திற்கு மத்தியிலுள்ள ஸ்தலம். ஆதியில் ஸ்ரீராமபிராஞல் விபீஷணருக்கு கொடுக்கப்பட்ட ஸ்ரீ ரங்கநாதர் இங்கு நிலேத்து நின்ற இடம். விஜயரங்க சொக்கநாதரால் ஆலயம் கட்டப்பட்டது. இப் பொழுதும் விபீஷணர் இலங்கையிலிருந்து வந்து இரவில் பூஜை செய்வதாக ஐதீகம். ஸ்ரீரங்கத்தை காவேரி, கொள்ளிடம் மாலே யிட்டதுபோல் வருகின்றன. கோயிலுக்கு வடபாகத்தில் தாயார் ஸன்னதியும், ராமர் கோயிலும் இருக்கின்றன.

இக்கோயில் உள்விமானம் ப்ரணவரூபமாக அமைக்கப் பட்டிருக்கிறது. அவ்விமானத்தில் பரவாஸுதேவருடைய சிலா விக்ரகம் இடுப்பு வரையிலும் காணப்படுகிறது. இந்த விக்ரகம் முழுமையும் வளர்ந்து நிற்கும் நாளில் கலியுகம் முடிவு பெறும் என்று சொல்கிருர்கள்.

சனீசுவரர் என்று சொல்லப்பட்ட சக்கரத்தாழ்வார் கோயிலுக்கு நிருதி மூலேயில் இருக்கிறது. ஸ்ரீரங்கத்திற்கு வைகுண்டம் என்று பெயர்.

தாயார் திருநாமம் அரங்கநாயகி. தாயார் சன்னதி மூல ஸ்தானத்தில் இரண்டு தாயார்களின் விக்ரகங்கள் ஒன்றன்பின்

ஒன்ருய் இருப்பது குறிப்பிடத்தக்கது. துலுக்க நாச்சியார் அரங்கனின்மேல் பிரேமைகொண்டு முக்தியடைந்ததாக சொல்லப் படுகிறது.

தாயார் கோவிலின் முன்புறம், அழகிய சிங்கர் முன்னிலையில் உள்ள ஓர் மண்டபத்தில்தான் கம்பர் இராமாயணத்தை அரங் கேற்றியதாக சொல்கிருர்கள். அழகிய சிங்கர் கோயிலின் கீழ் சிவன் கோயில் ஒன்று இருந்ததாகச் சொல்கிருர்கள். வைகுண்ட ஏகாதசியில் ஸ்ரீரங்கனுதருக்கு உற்சவம் பிரபலமாக நடைபெறும். துலா மாதத்தில் அம்மா மண்டபத்துறையில் காவேரி ஸ்நானம் செய்தால் தலைக்காவேரியில் ஸ்நானம் செய்த பலன் உண்டு. ஸ்ரீரங்கத்திற்கு வடபால் கொள்ளிடக்கரை ஓரமாக தசாவதாரப் பெருமாள் கோயில் உள்ளது. கோவிலுக்கு கிழக்கு திக்கில் சிங்கப்பெருமாள் கோயிலும், வாயு மூலையில் தேசிகர் கோவிலும் இருக்கின்றன. கோவிலுக்கு தென்பால் உள்ள மொட்டை கோபுரத்தின்மேல் நின்று உடையவர் ஜனங்களுக்கு உபதேசம் செய்ததாகச் சொல்கிருர்கள். கோவிலிலுள்ள சந்திர புஷ்கரணி ஸ்நானம் மிகவும் விசேஷமானது.

*திருஆனைக்கா*: வடபுறம்: 1 மைல். இது பஞ்சபூத ஸ்தலங் களில் அப்புலிங்கஸ்தலம். மூலஸ்தானத்தில் எப்பொழுதும் ஜல மிருக்கும். சுவாமி பெயர் ஜம்புகேசுவரர். அம்பாள் அகிலாண் டேசுவரி. இங்கு ஒரு யானையும், ஒரு சிலந்தியும் பூஜை செய்து கொண்டு வந்தன. வெயிற்படாமல் இருப்பதிற்கு சிலந்தி லிங்கத்திற்கு மேலாக கூடு கட்டும். யானை தினமும் காவேரி ஸ்நானம் செய்து,துதிக்கையில் காவேரி தீர்த்தம் ஏந்தி ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்யும். சிலந்தி கட்டிய கூடு கலைந்துவிடும். சிலந்தி ஓர் தினம் இதை கவனித்து கோபங்கொண்டு யானைத் துதிக்கையினுட் புகுந்து கடிக்கவே, யானை வலி பொறுக்காமல் புரண்டு மரணம் அடைந்தது. சிலந்தியும் மாய்ந்தது. இச்சிலந்தி மறு ஜன்மத்தில் கோட்செங்கச் சோழனுய் பிறந்தது. கோட்செங்கச் சோழன் யானை ஏறி வரமுடியாதபடி 54 மாடக் கோயில்களை கட்டுவித்தான்.

அங்கு தவம் செய்து வந்த ஜம்பு மகரிஷி தலையில் நாகமரம் உண்டாயிற்று. தவம் செய்து வந்த இடத்தில் லிங்கம் இருந்த படியால், இதற்கு 'ஜம்புகேசுவரர்' என்ற நாமதேயம் உண்டா யிற்று. இந்த ஸ்தலத்தை ஜம்புகேசுவரம் என அழைப்பர்.

இந்தக் கோவிலுக்கு பஞ்சப் பிரகாரங்கள் உண்டு. அம்பாள் கோவில் இரண்டு ப்ரகாரங்களுடன் விளங்குகிறது. அம்பாள்



ஸ்ரீரங்கம் — அம்மா மண்டபம் படித்துறையும் காவேரியும்




திரிசிரமலைமீது



ஸ்ரீரங்கநாதர்—ஸ்ரீரங்கம்



திரு ஆனைக்கா
ஜம்புகேசுவரர் ஆலயம்



திரு ஆனைக்கா—ஸ்ரீ ஜம்புகேசுவரம்



இன்றும் கன்னிப் பெண்ணுகவே தவம் செய்வதாய் ஐதீகம். முதல் பிரகாரத்தில் சந்திரன், சூரியன், ஸரஸ்வதி, துர்க்கை, சண்டிகேசுவரர் முதலியவர்கள் இருக்கின்றார்கள்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசாரியாள் அம்பாளின் உக்ரகக் களையை சாந்தப்படுத்த அம்பாளுக்கு ஸ்ரீ சக்ர தாடங்கத்தை சாற்றி, சன்னதிக்கு எதிரில் விக்னேசுவரரையும், பின்பக்கத்தில் வள்ளி, தேவஸேனு ஸமேத சுப்ரமண்யரையும் பிரதிஷ்டை செய்து, அம்பாளை கருணை நிறைந்தவளாகச் செய்துள்ளார்.

பிரும்மாவுக்கு காக்ஷி தந்த தர்மபுரி நாயகி ஸமேத சங்கரேசுவரர் ஆலயம் ஸ்வாமி கோவிலின் முதல் பிரகாரத்தில் இருக்கிறது. நாவல் மரத்தையும் காணலாம்.

இரண்டாம் ப்ரகாரத்தில் ஸ்ரீராமனுல் கட்டப்பட்ட பெரிய மண்டபமும், வல்லப கணபதி கோயிலும் இருக்கின்றன.

மூன்ரும் பிரகாரத்தில் சனீசுவரர், தண்டாயுதபாணி, இந்திரனுல் பூஜிக்கப்பட்ட விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர் இன்னும் இதர மூர்த்திகள் உள்ள சிறு கோவில்களும் உள்ளன.

நான்காம் பிரகாரத்தின் எட்டு திக்குகளிலும் எட்டு பிள்ளையார் கோவில்களும், நான்கு பக்கங்களில் அக்ரகாரங்களும் அடங்கியுள்ளன.

ஈசுவரனுல் கூலிக்காக விபூதி கொடுக்கப்பட்டு பெரிய கோபுரம், பிரகாரம் நிர்மாணிக்கப்பட்டதாம். இந்தப் பிரகாரத்தை விபூதி ப்ரகாரம் என்பார்கள். எவனொருவன் இருதினம் பிரதக்ஷிணம் செய்து ஸ்வாமி தரிசனம் செய்கிருனே அவன் எல்லா காரியங்களிலும் சித்தி பெற்று புனர் ஜன்மம் பெற மாட்டான். சத்யம் என்று புராணம் கூறுகிறது. இந்த ஆலயத்தில் ஒன்பது தீர்த்தங்கள் இருக்கின்றன. இந்த கோவிலுக்கு மேற்கில் வீரகண்டேசுவரர் ஆலயமும் ராமதீர்த்தமும் இருக்

ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு சங்கரா சாரியார் ருதிரோத்காரி வருஷம் (1923) சித்திரை மாதத்தில் தாடங்கங்களை விதிப்படி ஜீர்ணேத்தாரணம் செய்து ஸ்ரீ அம்பாளுக்கு அணிவித்தார்.

இந்தக் கோயிலின் வடபுறத்தில் வெகுகாலமாய் புதர்களினுல் மூடப்பட்டு மறைந்துள்ள பஞ்சமுகேசுவரர் ஆலயம், நமது ஆசாரியாளினுல் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டு, 12—6—43-ல் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இதைப்போல் உள்ள ஆலயம் - லிங்கம் ஆதிசங்கரரால் நேபாள தேசத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

*திருப்பாற்றுறை*: வடகரை: 5 மைல். ஸ்ரீரங்கத்தீவில் காவேரியை ஒட்டி உள்ளது. இங்கு மார்க்கண்டேயரிஷி பூஜிக்கும் பொழுது, அபிஷேகத்திற்கு பால் கிடைக்காது வருந்த சிவன் பெருகும்படி அனுக்ரகித்த ஸ்தலம். மேகலாம்பிகா ஸமேத மூலநாதஸ்வாமி கோயில் இருக்கிறது.

*திருமாந்துறை*: வடபுறம்: 3 மைல். பாலாம்பிகா ஸமேத ஆம்ரவனேசுவரர். ஸ்தல விருக்ஷம் மாமரம். காயத்ரி நதி ஓடுகிறது. கண்வர், சோழராஜன் பூஜித்த ஸ்தலம். ஞான ஸம்பந்தர் பதிகம் பாடியுள்ளார். இங்கு காயத்ரீ நதியும் ஓடுகிறது.

*லால்குடி:* (திருத்தவந்துறை) வடபுறம்: 2½ மைல். இது ரயில்வே ஸ்டேஷன். ஸப்தரிஷிநாதர்ஸ்வாமி. ப்ரவிர்த்த ஸ்ரீமதி அம்பாள் கொண்ட ஆலயம் உளது. ஸப்த ரிஷிகளால் பூஜிக்கப் பட்ட ஸ்தலம். *காயத்ரி* என்ற ஒரு சிறு நதியும் ஓடுகிறது. சிவகாமி ஸமேத நடராஜர் சன்னதி பிரபலம். சன்னதியில் சிவ கங்கை தீர்த்தம் விசேஷமானது. இவ்வூருக்கு பைரவிவனம் என்றும் ஒரு பெயர் உண்டு. மாணிக்கவாசகரால் இயற்றப்பட்ட புராணம் உள்ளது. திருநாவுக்கரசு நாயனுர் வைப்பு ஸ்தலம்.

குமாரதேவருக்கு பால் கொடுத்ததை ஸப்தரிஷிகள் இகழ்ந்ததால், சூத்திரர்கள் ஆகும்படி சபிக்கப்பட்டார்கள். ஸப்தரிஷிகள் இவ்விடத்தில் சிவனை ஆராதித்து சாபத்தை நிவர்த்தி செய்து கொண்டார்களாம். பைரவி என்னும் காளி பூஜித்தஸ்தலம். மழவராஜன் குஷ்டரோகம் நீங்கப்பெற்ற இடம். மாங்கல்யரிஷி, பெருந்திருவாட்டி அம்மையை மணம் செய்துகொண்ட இடம். இக்கோயிலில் கமலகொத்த நாயனுர், ஐயனுர் சன்னதி பிரபலமானது.

# காவேரிதீர - க்ஷேத்ரங்கள்

## தஞ்சை ஜில்லா

### வடபுற க்ஷேத்ரங்களின் வரிசை—54.

*கல்லணை:* வடபுறம் காவேரி, கொள்ளிடம் இவைகளின் ஊடே மாபெரும் அணைக்கட்டு கோலி, நீர்ப்பாசன வசதி அமைக்கப்பட்டுள்ளது. இக்கல்லணை கரிகாலச்சோழனால் கட்டப் பட்டது. இங்கிருந்து காவேரியின் கிளையாக வெண்ணாறு பிரிகிறது. கல்லணையிலிருந்து புதிதாக வாய்க்கால் வெட்டி தஞ்சை ஜில்லா பட்டுக்கோட்டை தாலூகாவிற்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்கப்பட்டது.

கொள்ளிடப் பிரிவில் உள்ள மதகு ஸ்தம்பத்தில் பிரசித்தி பெற்ற ஆஞ்சநேயர் ஆலயம் அமைந்திருக்கிறது.

*கோவிலடி:* வடபுறம் 5 மைல். இது வைஷ்ணவஸ்தலம். பெருமாள் திருநாமம் அப்பக் குடத்தார். கமலவல்லித்தாயார்.

பெருமாள் வலது கரத்தில் குடத்தை வைத்துக்கொண்டு சயனங்கொண்ட திருக்கோலம்.

இந்த ஸ்தலத்தை இந்திரகிரி என்றும் சொல்வது உண்டு. உபமன்யு, பராசரர் முதலியோர்கள் பூஜித்த ஸ்தலம். பெரியாழ் வார், திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம் பெற்ற க்ஷேத்ரம்.

*திரிச்சடைவந்தி:* வடகரை 6 மைல். அப்பர் சுவாமி களின் வைப்புஸ்தலம். புவனேசுவரி ஸமேத புவனேசுவரர் கோவில் உள்ளது.

*மருவூர்:* வடகரை 2½ மைல். மங்களநாயகி ஸமேத பசு பதீசுவரர் ஆலயம், ஒரு விஷ்ணு ஆலயம், சாம்பன் ஆலயம் உள்ளன.

வடுவக்குடி: வடகரை 1 மைல். இக்கிராமத்திற்கு துளஜேந்திர மஹாராஜபுரம் என்று பெயர். பிரபலமான சுப்ரமணிய ஸ்தலம்.

ஆச்சனூர்: வடகரை 1 மைல். தஞ்சாவூர் மஹாராஜா வினால் ஆச்சனூர் அப்பா என்கிற கள்ளர் குடும்பதிற்கு சர்வ மான்யம் பட்டயமாகக் கொடுக்கப்பட்டது.

*கீடுவெளி:* வடகரை 1 மைல். மங்களாம்பாள் ஸமேத ஆகாசேசுவரர் ஆலயம் இருக்கின்றது.

'*திருநெய்த்தானம்*' என்ற தில்லைஸ்தானம்: வடகரை 1½ மைல். பாடல் பெற்ற ஸ்தலம். பாலாம்பிகை ஸமேத நெய்யாடிப்பர் ஆலயம் உள்ளது. இது திருவையாறு ஸப்த ஸ்தலங்களில் ஒன்று. ஸரஸ்வதி பூஜித்தஸ்தலம். தக்ஷிணா மூர்த்தி நின்ற கோலமாய் காக்ஷி அளிக்கிறார்.

*திருஐயாறு:* வடகரை 1 மைல். இதற்கு தக்ஷிண கைலாஸம் எனப் பெயர். பஞ்சநத க்ஷேத்ரம். தர்மஸம்வர்த்தனி ஸமேத பஞ்சநாதேசுவரர் ஆலயம். இங்கு திருநாவுக்கரசுக்கு கைலாஸ தரிசனம் கொடுத்தஸ்தலம். இந்த ஐதீகத்தைக்காட்டும் உற்சவம் ஆடி அமாவாசையில் நடைபெறும். திருவையாறு 'சப்தஸ்தானம்' உற்சவம் பிரசித்தி பெற்றது. சுந்தரமூர்த்தி, சேரமான் நாயனார் தரிசனம் பெற்ற ஸ்தலம். இந்திரன், வாலி பூஜித்த க்ஷேத்ரம். இங்கு ஆட்கொண்டார ஸன்னதியில் ஜ்வாலையுள்ள ஒரு குழியில் குங்குலியம் போட்டுக்கொண்டு இருப்பார்கள்.

இங்கு தைப்பூசம் விசேஷம். திருவையாறு, ஸ்ரீவாஞ்சியம், அர்ஜுனம், கௌரிமாயூரம், சாயாவனம், சுவேதாரண்யம் என்னும் காசிக்கு ஸமானமான 6 க்ஷேத்திரங்களில் ஒன்று. இங்குதான் தியாகராஜ ஸ்வாமிகள் வாஸம் செய்து வந்தார். அவருக்கு தனி ஆலயமும், வருஷா வருஷம் புஷ்யபகுள பஞ்சமியில் ஆராதனையும் ஏற்பட்டிருக்கின்றன. இத்தலம் காசிக்கு சமமான பெருமை பெற்றது.

*சப்தஸ்தான ஸ்தலங்கள்.*

1. திருவையாறு 2. திருப்பழனம் 3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதுகுடி 5. திருக்கண்டியூர் 6. திருப்பூந்துருத்தி
7. திருநெய்த்தானம்

*திருப்பழனம்:* வடகரை 1 மைல். பெரியநாயகிஸமேத, ஆபத்ஸஹாயர், ஆலயம் உள்ளது. திக்பாலகர்கள் பூஜித்தது. சன்னதியில் விஷ்ணு ஆலயம். அப்பர் ஸ்வாமிகள் பதிகத்தில் பாடிய ஸ்தலம்.

*திங்களூர்:* வடகரை 1½ மைல். பூங்கோதை நாயகி ஸமேத விஷம் தீர்த்தநாதர் ஆலயம். சந்திரன் பூஜித்த இடம்.

# காவேரி டெல்ட்டா


வ
நாமக்கல்
பெரம்பலூர்
அரியலூர்
உடையார்பாளையம்
சென்னைக்கு
சிதம்பரம்
துறையூர்
தொட்டியம்
முசிரி
கரூர்
காவேரிநதி
அமராவதி
மணவாசி
குளித்தலை
ஸ்ரீரங்கம்
திருச்சிராப்பள்ளி
மணப்பாறை
புதுக்கோட்டை
மதுரைக்கு
திருவானைக்காவல்
கல்லணைக் கால்வாய்
வல்லம்
தஞ்சை
கொள்ளிடம்
காவேரி நதி
கும்பகோணம்
மாயவரம்
காவிரிப்பூம்பட்டினம்
காரைக்கால்
வெட்டாறு
வெண்ணாறு
அரிசிலாறு
நாகூர்
நாகப்பட்டினம்
திருவாரூர்
மன்னார்குடி
தஞ்சாவூர் ஜில்லா
வேதாரண்யம்
கால்மீர் முனை
பாக் ஜலசந்தி
வங்காள விரிகுடா



குறிப்பு
நதிகள்
சாலைகள்
ரயில் பாதை
1 மேல் அணை
2 கல்லணை
3 கீழ் அணை



கல்லணை



காவேரிப்பூம்பட்டினம்—காவேரி கடலோடு சங்கமமாகும் தோற்றம்

இவ்விடத்தில் திருநாவுக்கரசு நாயனர் அப்பூதியடிகளின் குழந்தையை உயிர்ப்பித்தார்.

*பெரமூர்:* வடகரை 2 மைல். ருக்மணி சத்யபாமா ஸமேத ஸ்ரீ கிருஷ்ணன் ஆலயம் இருக்கிறது.

*ஈச்சங்குடி:* வடகரை 1½ மைல். காருண்யவல்லி ஸமேத கர்ஜபுரீசுவரர் கோவில் உள்ளது.

*கணபதி அக்ரஹாரம்:* வடகரை 2½ மைல். பெரிய அக்ரஹாரம். பிரசித்திபெற்ற கணபதி ஆலயம், விஷ்ணு கோயில், சிவன் கோயில் உள்ளன. விநாயக சதுர்த்தி பூஜை இவ்வூர் ஜனங்கள் கோயிலில் போய்தான் செய்வார்கள். விநாயகருக்குத்தான் ப்ரம்மோற்சவம்.

ஆனந்தவல்லி ஸமேத நாகேஸ்வரஸ்வாமி ஆலயம். வரதராஜப் பெருமாள் ஆலயம்.

கிருஷ்ணனந்த ஸரஸ்வதி, ப்ரும்மேந்திர ஸரஸ்வதி, வாஸுதேவப்ரும்மேந்திர ஸரஸ்வதி, இவர்களின் சமாதிகள் உள்ளன. மஹாமஹோபாத்யாய வித்யா வாசஸ்பதி குப்புஸாமி சாஸ்திரிகள் பிறந்து வளர்ந்த இடம்.

*வடகுரங்காடுதுறை:* வடகரை 1 மைல். இந்த கிராமத்தின் பக்கம் செல்லும் காவேரியை தென் கங்கையென்பர். இங்குள்ள கோயில் சோழ அரசனல் கட்டப்பட்டது. ஜடமகுட நாயகி ஸமேத ஜடமகுடநாதர் ஆலயம்.

திருஞானஸம்பந்தர் பாடல்கள் பாடியுள்ளார். தாகதாபத்தால் தவித்த ஒரு செட்டிப் பெண்ணுக்கு ஈசன் ஆண் வேஷம் தரித்து இளநீர் கொடுத்து தாகம் தீர்த்தார். பெண்ணின் புருஷன் நம்பாததால் செட்டிப் பெண் துதி செய்தவுடன் அங்குள்ள தென்னை மரம் வளைந்து இளநீரை கையால் பறிக்கும் நிலையில் நின்றது. ஆகவே ஈசனுக்கு குலை வணங்கிநாதர் எனப் பெயர்.

ஒரு சமயம் ஒரு சிட்டுக் குருவி மூக்கை இழந்து விட்டது. அது தன் மூக்கை ஒரு வில்வ மரததில் தேய்க்க இரண்டு வில்வ தளங்கள் கடவுளின் ஜடாமகுடத்தில் விழுந்தன. குருவிக்கு இழந்த மூக்கு உண்டாயிற்று. இவ்வூரில் வாலிக்கு வால் வளர்ந்ததாம். கோபுரத்தில் உள்ள சித்திரங்களிலிருந்து இது வெளியாகிறது. வாலி பூஜித்தஸ்தலம். பங்குனி உத்தரத்தில் உற்சவம், பக்கத்திலுள்ள ஆடுதுறைப்பெருமாள் கோவிலில்

ஆழ்வார் மங்களா சாஸனம் செய்துள்ளார்கள். பத்மாஸனிவல்லி நாச்சியார், வையகங்காத்த பெருமாள் சக்ரதீர்த்தம், நின்ற திருக் கோலம், கிழக்கே முகம்பார்த்த திருமுக மண்டலம் இவைகள் பார்க்க தகுந்தவை. நந்தகமாமுனிவருக்கு பிரத்யக்ஷமான க்ஷேத்ரம்.

*கபிஸ்தலம்*: வடகரை 4 மைல். கஜேந்திர வரதர் ஆலயம் உள்ளது. கஜேந்திர புஷ்கரணி உள்ளது. முதலை வாயினின்றும் கஜேந்திரனை காப்பாற்றிய ஸ்தலம்.

*உமையாள்புரம்*: வடகரை 2 மைல். குங்குமஸுந்தரி ஸமேத காசிவிசுவநாத ஸ்வாமி கோயில் உள்ளது. அம்பாள் மேருயந்திர பீடம். ஜடாயு தகனக்ஷேத்ரம். இன்றும் மயானத்தில் சண்டாள ஸ்பர்சம் இல்லாமல் தகனம் நடைபெறுகிறது. மயானத்தில் விநாயகர் ஸாக்ஷியாய் தகனம் நடைபெறுகிறது.

*அண்டகுடி*: வடகரை 2 மைல். கல்யாணரங்கநாதர் ஆலயம் உள்ளது. கீரிப்பிள்ளைக்கு முக்தி கொடுத்த ஸ்தலம்.

*தியாகசமுத்திரம்*: வடகரை 1 மைல். பிருஹத்குசாம்பாள் ஸமேத மஹாலிங்கேசுவரர், லோகநாயகி ஸமேத லோகநாத ஸ்வாமி, லக்ஷ்மி நாராயணர், ஆலயங்கள் உள்ளன.

*அலவந்திபுரம்*: வடகரை 1 மைல். கணபதி ஆலயம், சிவகாமஸுந்தரி ஸமேத சுந்தரேச மூர்த்தி, ருக்மணி ஸத்யபாமா ஸமேத ஸ்ரீ காளிங்க நர்த்தன பெருமாள், ஆலயங்கள் உள்ளன.

*கங்காதரபுரம்*: வடகரை ½ மைல். கோதண்டராமர் ஆலயம் இருக்கிறது.

*சுவாமிமலை*: வடகரை ½ மைல். பெரிய சுப்ரமணிய ஸதலம். ஆலயம் சிறுமலை போன்ற உயர்ந்த ஸ்தலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அடிவாரத்தில் பார்வதி பரமேசுவரன் கோயில் இருக்கிறது. சுப்ரமணியஸ்வாமி பிரும்மாவை சிறையிலிட்டு, சிவனுக்கு உபதேசம் செய்த ஸ்தலம். இதனால் இவருக்கு ஸ்வாமிநாதன் என்றும் தகப்பன் சாமி என்றும் பெயர். சுவாமிநாதன் சன்னதிக்கு வடபால் ஒரு சிவலிங்கம் உள்ளது. அருணகிரி நாதரால் திருப்புகழ் பாடல்பெற்ற ஸ்தலம். இக் கிராமத்தில் காவேரிக்கு குமாரதாரையெனப் பெயர். விசாகத்தில் தரிசனம், கார்த்திகை தீபம், தைப்பூச அபிஷேகம், சித்திரை ப்ரதக்ஷணம் இவைகள் எல்லா பாபங்களையும் நீக்கி கைவல்யத்தைக் கொடுக்கும்.



சுவாமிமலை : கிழக்குக் கோபுரவாசல்



திருவலஞ்சுழி : ஸ்ரீ கபர்தனீசுவரர் கோயில்



திருவிடைமருதூர் : ஸ்ரீ மகாலிங்கேசுவரர் கோயில்



திருபுவனம் : ஸ்ரீ கம்பஹரேசுரர் கோயில்

*பாபுராஜபுரம்*: வடகரை 1 மைல். கற்பகாம்பாள் ஸமேத திருமழுவேந்தி நாதர் கோவில் இருக்கிறது. ஒரு செட்டியார் காசிக்குப் போகும்பொழுது தன் மனைவியை இவ்விடம் விட்டுச் சென்ருர். அவள் தன் ஜீவனத்தின் பொருட்டு கோயிலில் ஜலம் தெளித்து, மெழுகி சுத்தம் செய்து ஈசுவர கைங்கர்யம் நடத்தி வந்தாள். அன்றன்று ஒரு பணம் காசு கிணற்றின்மேல் வைக்கப் பட்டிருக்கும். இது பகவானின் கிருபையென்று அறிந்தே ஈசுவர கைங்கரியத்தை நடத்தி வந்தாள். கடவுள் அவளிடம் கிருபை கொண்டு ஆபரணங்களும் அளித்தார். புருஷன் காசியாத்திரை யிலிருந்து திரும்பியதும், நடந்ததை கேட்டு, மனைவியை சந்தேகித்தான்.

உண்மையை அறிய எண்ணி அவள் கையில் மெழுகைக் காய்ச்சிவிடும் சமயத்தில் எம் பெருமான் அவள் கையின்மேல் தன் கையை வைத்து கொதிக்கும் மெழுகை ஏந்தி மனைவியின் கற்பை யாரும் அறியும்படி செய்து காப்பாற்றினுன். அதனுல்தான் திருமழுவேந்தி நாதர் எனப் பெயர் வழங்குகிறது.

*கொட்டையூர்*: வடகரை 2 மைல். இது பாடல்பெற்ற ஸ்தலம். பந்தாடுநாயகி ஸமேத கோடீசுவரர் ஆலயம் இருக்கிறது. மார்க்கண்டேயர் பூஜித்தஸ்தலம். கோடீசுவரர் கோயில் அமைந் துள்ள இடம் ஆமணக்கு காடாக இருந்ததாம். ஸ்வாமி ஆமணக்குச் செடியின் கீழிருந்து தோன்றினமையால் ஊருக்கு கொட்டையூர் என்றும், சோழ ராஜனுக்கு ஓர் இரவில் கோடி லிங்க தரிசனம் கொடுத்தபடியால் ஆலயத்திற்கு கோடீசுவரம் என்றும் பெயர் வந்தன. ஒரு லிங்கத்தில் அநேக லிங்கங்கள் இருக்கின்றன. திருவலஞ்சுழியில் காவேரியில் இறங்கிய ஏறண்ட முனிவர் இங்கு வெளி வந்ததாகச் சொல்கிருர்கள். அவ ருடைய திரு உருவம் கோயிலில் இருக்கிறது. அப்பர் சுவாமிகள் இத்தலத்துடன் திருவலஞ்சுழியை சேர்த்தே பாடியிருக்கிருர்.

*மேலக்காவேரி*: (பெருமாண்டி) வடகரை 1. மைல் மேலக் காவேரியில் கைலாசனுதர் கோயில் இருக்கிறது. பெருமாண்டியில் விசாலாக்ஷிஸமேத பெருமாண்டீசுவரர் கோயில் இருக்கிறது. சகல ஜீவராசிகளுக்கும், இவர் மோக்ஷத்தை அளிக்கிருர் என்று புராணம் சொல்கிறது. பஞ்சம குலத்தில் பிறந்த ஒரு பக்தன் (நந்தன்) இக்கோயிலை ஜீர்ணோத்தாரணம் செய்தான். அதன் பக்கத்தில் ஒரு பெரிய குளமும் வெட்டினுன். இன்றைக்கும் இந்தக் கோயிலையும், குளத்தையும், நந்தன் கோயில், நந்தன் குளம் என அழைக்கிருர்கள். இந்த பக்தன் நந்தனுர் சரித்திர

திருவலஞ்சுழியில் மறைந்துபோன காவேரி இவ்வூரில் மேல் கிளம்பியதால் மேலக் காவேரி என்று பெயர். வரதராஜர் ஆலயம் உள்ளது. ஏறண்டருடைய சிலா விக்ரஹம் கோயிலில் இருக்கிறது. ஒரு பிராம்மணன், காவேரி பிரவாஹத்தினால் தடைப் பட்டு காஞ்சி வரதராஜரை தரிசனம் செய்ய முடியாமல் செய்து விட்டது. அவர் மிகவும் மனம் வருந்தி காஞ்சிவரதரை வேண்டினார். கும்பகோணத்தில் சாரங்கபாணிப் பெருமாள், வரதராஜர் கோலத்துடன் தோன்றி காக்ஷியளித்தாராம். ஆனதால் இக்கோயிலில் வரதராஜப் பெருமாள் சிலாவிக்ரகமும், உற்சவ விக்ரகம் சாரங்கபாணி உருவத்துடனும் காணப்படுகின்றன.

இந்த ஊரில் காளி, மும்மூர்த்தி விநாயகர், பிரபலம். (கும்பகோணம் அல்லது திருக் குடந்தை இந்த க்ஷேத்திரத் திற்கு நேர் எதிர்க்கரையில் இருக்கிறது.)

*கருப்பூர்:* வடகரை. 2½ மைல். இவ்வூரை பாடலீவனம் என்றும் சொல்வதுண்டு. பொன் செய்யும் மருந்து இவ்வனத்தே உள்ளது. இவ்வூரை மீனாங்கருப்பூர் என்றும், இனாம் சத்திரம் என்றும், சொல்வது வழக்கம். தேவர்கள் யாவரும் தங்கள் பொன்னுலகிற்கு ஒப்பாக எண்ணி இவ்விடம் தங்குவார்கள்.

மீனாக்ஷி ஸமேத சுந்தரேசுவரர் ஆலயம் உளது. இவர்களை தரிசித்தவர்களை யமன் அணுக மாட்டான். அகஸ்தியர் பூஜித்து மேன்மை பெற்றான். குபேரன் பூஜித்து இரு நிதி பெற்றான். வெங்கி நாட்டரசன் பூஜித்து ஸ்வர்ண கோமானைப் பெற்றான். பிரும்ஹ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவர்கள் பௌண்டரீக யாகம் பதினாயிரம் செய்தவராவார்கள். இத்தலத்தின் மஹிமை யைக் கருதியே ப்ரும்ஹதீர்த்தக் கரையில் புன்னை மரத்தடியில் மஹாவிஷ்ணு வீற்றிருக்கிறார். பஞ்சக்ரோசஸ்தலங்களில் இது ஒரு முக்ய ஸ்தலமாகும்.

*மணஞ்சேரி:* வடகரை 1½ மைல். கைலாசநாதஸ்வாமி கோயில், ருக்மணி சத்யபாமா சமேத ராஜகோபால ஸ்வாமி கோயில் உள்ளன.

இவ்விடத்தில் காவேரியிலிருந்து வீரசோழன் என்ற நதி பிரிகிறது.

*திருவியலூர்:* என்பது திருவிசநல்லூர் என வழங்குகிறது. வடகரை 2½ மைல். இது ஒரு பெரிய சிவக்ஷேத்ரம். சௌந்தாய நாயகி ஸமேத யோகாநந்தர் கோவில். ஸ்ரீதேவி, பூதேவி ஸமேத வரதராஜப் பெருமாள் கோவில். திருமங்கலக்குடியில் உள்ள

கோயிலைத் திருப்பணி செய்த ஒரு அடியார் இறந்துபோகவே, அவரை இந்த ஸ்தலத்திற்கு கொண்டு வரும்பொழுது, திரு மங்கலக்குடி தேவியாரின் திருவருளால் உயிர்த்தெழுந்தார்.

திருவிசநல்லூருக்கு வடக்கே 'கர்க்கடேசுவரம்' என்ற க்ஷேத்ரம் உளது. இவ்வூருக்கு திருத்தேவன் குடியென்றும் பெயர். ஸ்வாமியின் பெயா 'கர்க்கடேசுவரர்' அதாவது நண்டு வளேசுவரர். மழையில்லாத காலத்தில் இந்த லிங்கம் முழுகும் படி தண்ணீர் கட்டினுல் உடனே மழை பெய்யும்.

தேவேந்திரன் தினம் கர்க்கடேசுவரரை செங்கழனீர் புஷ்பங் களால் (1008 தடவை) அர்ச்சிக்குங்கால், ஒவ்வொருதினமும் ஒரு புஷ்பம் குறைவதைக் கண்டு, இது எப்படி குறைகிறது என்பதை கவனித்தான். ஒரு நண்டு கோமுகத்தின் வழி வந்து ஒரு புஷ்பத்தை தாங்கிச் செல்வதைப் பார்த்து, அதை துரத்தவும் அது லிங்கத்தின்மேல் ஏறி துளைத்துக்கொண்டு உள் சென்று விட்டதாம். அதனுல் இனறும் லிங்கத்தின்மேல் துவாரம் இருப் பதைக் காணலாம்.

இவ்வூரில் ஸ்ரீதர அய்யாவாள் மடம் ஒன்று உளது. அவர் வீட்டுக் கிணற்றில் கங்கை கார்த்திகை அமாவாசை தினத்தில் சான்னித்யம் ஆகிருள். யாவரும் அக்கிணற்றில் ஸ்நானம் செய்கிருர்கள். மழையில்லாத ஒரு சமயத்தில் இவர் கர்க்க டேசுவரரை துதித்து மழை பெய்யும்படி செய்ததாக சொல்லப் படுகிறது.

*பாகவதபுரம்*: வடகரை. ½ மைல் தூரம். இதற்கு சைலபதி புரம் என்றும் சொல்லுவார்கள். ஸ்ரீ பார்த்தஸாரதி பெருமாள் கோயில் இருக்கிறது.

*வேப்பத்தூர்*: வடகரை ½ மைல் பிரஸன்ன வேங்கடேசப் பெருமாள் நின்ற சன்னதி, வீற்றிருந்த பெருமாள் உட்கார்ந் திருக்கிற சன்னதி, மீனுக்ஷி ஸமேத சுந்தரேசுவரர் ஆலயம், ஸ்ரீ காமாக்ஷி ஸமேத கைலாஸ நாதர் கோயில், மாரியம்மன் கோயில் இவைகள் கொண்ட பெரிய கிராமம்.

*கல்யாணபுரம்*: வடகரை 1½ மைல். இதை ஆதி மஹாலிங்க க்ஷேத்ரம் என்றும் சொல்வதுண்டு. திருவிடைமருதூர் மஹாலிங்கத்திற்கு தான் இருந்த இடத்தைக் கொடுத்துவிட்டு கல்யாணபுரத்திற்கு வந்து விட்டதாகச் சொல்கிருர்கள். தைமீ புஷ்ய தினத்தில் மஹாலிங்க ஸ்வாமியும், இடங்கொடுத்தே சுவரரும் காவேரியில் தீர்த்தம் கொடுப்பார்கள்.

இவ்வூருக்கு நேர் தெற்கில் காவேரியையும், வீரசோழனையும் தாண்டினால் திருவிடைமருதூர் க்ஷேத்ரத்தை அடையலாம். இவ்விரண்டு நதிகளுக்கும் பாலங்கள் உள்ளன.

*திருமங்கலக்குடி*:. வடகரை 2 மைல். காவேரி ஒரு மைல் தூரத்தில் செல்கிறது. பெரிய சிவ க்ஷேத்ரம் இவ்விடத்தில் ஒரு பாலம் இருக்கிறது. எதிர்கரையில் ஆடுதுறை உள்ளது.

சூரியன், விஷ்ணு, பிரமன், மஹாகாளி பூஜித்தஸ்தலம். இங்கு வேலை செய்த பக்தனை அரசன் உயிர் துறக்கும்படி பயமுறுத்தினர். ஆனால் இறந்த பக்தன் திருமங்கலக்குடிக்கு அப்பால் எடுத்துச் செல்லப்பட்டபொழுது, திருவியலூருக்கருகில், பக்தனின் மனைவிக்கு கருணைகொண்டு ஈசன் அந்த பக்தனை உயிர்ப்பித்தார்.

*சூரியனார் கோவில்*: வடகரை 1 மைல். இது நவக்ரஹ க்ஷேத்ரம். நவக்ரகங்களுக்கு தனித்தனி சன்னதி உள்ளது. திருவிடைமருதூர் மஹாலிங்க க்ஷேத்திரத்திற்கு இது நவக்ரக ஸ்தானம் வகிக்கிறது. இங்கு ஒரு சைவமடம் இருக்கிறது.

*மணலூர்*: வடகரை 1 மைல். விசாலாக்ஷிஸமேத விசுவநாதர் ஆலயம், வரதராஜப்பெருமாள் ஆலயம் உள்ளன.

*கஞ்சனூர்*: வடகரை ½ மைல். காவேரி உத்தரவாஹினி. வரதராஜபெருமாள் ஆலயம். ஹரிதத்த சிவாச்சாரியார் சைவத்தை ஸ்தாபித்தஸ்தலம்.

ஹரிதத்த சிவாச்சாரியார் அவர்களின் ஆலயம் இருக்கிறது. கற்பகாம்பாள் ஸமேத அக்னீசுவரஸ்வாமி ஆலயம் உள்ளது. அப்பர் பாடல் பெற்ற ஸ்தலம்.

தெற்கு திக்கில் மணிகர்ணிகை என்ற தடாகமும், இதன் தென்கரையில் விசாலாக்ஷிஸமேத விசுவனாதர் ஆலயமும், ஸ்வயம்பிரகாசர், சங்கரானந்தர், ராமானந்தர், ஸித்தானந்தர், கிருஷ்ணானந்தர் முதலான யதீசுவரர்களின் அதிஷ்டானங்களும் மூன்று கோவில்களாக காணப்படுகின்றன. கிராமத்திற்கு வடபுறம் நாராயணானந்தர் அதிஷ்டானமும் இருக்கிறது.

இவ்வூரில் 28-ம்நெ. பஞ்சாங்கம் ஸ்ரீ அப்பண்ணா அய்யங்கார் அவர்களால், மூவாயிரம் வருஷங்களுக்கு முன் கூட்டியே கணித்து வைத்துள்ளார். அவருக்கு புருஷ ஸந்ததியில்லாமல் போக சுக்கிரபகவான் சபித்து விட்டார். ஆனால் குருபகவான் பெண் சந்ததி உண்டாகட்டும் என்று அனுக்ரகம் செய்தார்.

இந்த க்ஷேத்ரத்தில் பராசரர் பூஜித்து தன் பாபத்தை போக்கிக் கொண்டார். கம்ஸன், மாண்டவ்ய புத்திரர்கள் இவர் களுக்கு ப்ரம்மஹத்தி தோஷம் நீங்கியது. ஒரு வேடன் இக் கோயிலைத் திருப்பணி செய்து அருள் பெற்றஸ்தலம். ப்ரும்மா தான் இழந்த சக்தியை, இவ்விடம் தர்சனம் செய்ததினுல் மறுபடி யும் சக்தி பெற்ருர்.

இவ்வூரில் வசித்த வீரவைஷ்ணவரான வாசுதேவருக்கு ஹரதத்தா என்ற புத்திரன் சிவபக்தியில் ஈடுபட்டு தன் தகப்பனுரின் துவேஷத்தை யடைந்தான். ஸ்ரீ மஹாலிங்கமூர்த்தி ஹரதத்தருக்கு பிரத்யக்ஷமாகி பஞ்சாக்ஷர உபதேசம் செய்து, உலகத்தாருக்கு சைவத்தின் மகிமையை ஸ்தாபிக்கும்படி கட்டளையிட்டார். இதனுல் ஏற்பட்ட சாஸ்திர தர்க்கத்தில், ஹரதத்தர் பெருமாள் கோவிலில் மழுவைக்காச்சி அதன்மேல் நின்று வாதம் புரிந்து ஜெயித்தார். அக்கோயிலில் இப்போதும் லிங்க மிருக்கிறது. வைஷ்ணவர்கள் யாவரும் இவர் மதத்தை அனுசரித்தார்கள்.

இவ்வூரில் நடராஜமூர்த்தியும், சிவகாமி அம்மனும் சிலா ரூபத்தில் இருக்கின்றன.

*திருக்கோடிக்காவல்*: வடகரை 2 மைல். பெரியக்ஷேத்ரம். காவேரி உத்தரவாஹினி. வேத்ரவன க்ஷேத்திரம் - ஸ்ருங்கோடி பர்வதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, ஆக்னேய திக்கில் உள்ள அரசமரத்தை பிரதக்ஷணம் செய்து கோயில் கொண்டுள்ள திருக் கோடீசுவரரை தரிசனம் பண்ணி தவமிருந்தால், வேறு எந்த புண்ய க்ஷேத்ரங்களிலும் பெறமுடியாத மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெறலாம் என துர்வாஸர் அகஸ்தியருக்கு உபதேசம் செய்தார். அகஸ்தியரும் அப்படியே செய்து வரும்பொழுது மூன்றுகோடி ரிஷிகளுக்கும் இந்த க்ஷேத்ரத்தின் மகிமையை உரைத்து அவர் களும் மோக்ஷமடையும்படி செய்தார் - என்ற புராணக்கதை. அப்பர், சுந்தரர் பாடல்பெற்ற ஸ்தலம்.

*பாஸ்கரராஜபுரம்*: வடகரை 1 மைல். ஆனந்த ஸமேத பாஸ்கரேசுவரர் கோயில் உள்ளது. கோதண்டராம ஸ்வாமி கோயில் இருக்கிறது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யம் எழுதிய பாஸ்கரராயர் இங்குதான் வசித்தார்.

*நெருவளி*: வடகரை 1 மைல். காவேரி உத்தரவாஹினி. 1921-ம் வருஷம் பரமாசாரியாளின் வியாஸபூஜை நடந்தது.

***கதிராமங்கலம்***: வடகரை, 1 மைல். ஞானம்பிகைஸமேத காளஹஸ்தீசுவரர் ஆலயம். இதை 'சிவமல்லிகாவனம்' என்றும் அழைப்பது உண்டு. சுவேதவிக்னேசுவரர் இவ்வூரில் இருக்கிறார். 1921-ம் ஸ்ரீ பரமாசாரியாளின் சங்கரஜயந்தி இந்த ஊரில் நடைபெற்றது. மிருகண்டுமஹரிஷி பூஜை பண்ணி மார்க்கண்டேயரை பிள்ளையாக அடைந்தார்.

*குணத்தலபாடி*: வடகரை 1 மைல். குத்தாலபுராணத்தில் கலியாணத்திற்காக பாலி தெளித்த இடம்.

*எதிர்கொள்பாடி அல்லது மேலத்திருமணஞ்சேரி*: பெரிய சிவஸ்தலம். மூவர் பாடியஸ்தலம். குத்தால புராணத்தில் சொன்ன கலியாணத்திற்காக எதிர்கொண்டு அழைத்த இடம். வேள்விக் குடியில் கலியாணம் செய்துகொண்ட இராஜ குமாரன் ஒருவன் மனைவியுடன் தன் நகர் செல்லும்பொழுது, பரமசிவன் அவனுடைய அம்மானைப்போல் இந்த இடத்தில் எதிர்கொண்டு அவனை அழைத்துப்போனதினால் எதிர்கொள்பாடி என்று பெயர் வழங்கலாயிற்று. ஐராவதம் பூஜித்த ஸ்தலம் மலர் குழை அம்மை ஸமேத ஐராவதேசுவரர்.

*திருவேள்விக்குடி என்ற திருவளக்குடி*: வடகரை 1 மைல். பரிமள சுகந்தநாயகி ஸமேத கல்யாண சுந்தரேசுவரர் ஆலயம் இங்கு உள்ளது. அப்பர், சம்பந்தர் பாடல் பெற்ற ஸ்தலம்.

இங்கு ஒரு அரச குமாரனுக்கு நிச்சயித்த பெண், மணம் நிறைவேறுமுன், தாய் தந்தையர்களை இழந்தாள். அவளுடைய சொந்தக்காரர்கள், அப்பெண்ணை அரசகுமாரனுக்கு கொடுக்க மறுத்தார்கள். அரசகுமாரன் பரமசிவனை நோக்கித் தவம் செய்தவுடன், சிவபெருமான் அப்பெண்ணை பூதத்தால் எடுத்து வரச்செய்து அரசகுமாரனுக்கு இத்தலத்தில் மணம் செய்வித்தார்.

*கீழ்திருமணஞ்சேரி*: வடகரை 1 மைல். ஸ்வாமி பெயர் அருள்வள்ள நாயகேசுவரர். அம்பாள் பெயர் யாழின்மென் மொழியம்மை. மன்மதன் பூஜித்து பெரும் பேறுபெற்ற ஸ்தலம். வைசிய குலத்து நங்கைகள் இருவர் தமக்குப் பிறக்கும் குழந்தைகளை ஒருவர்க்கொருவர் சம்பந்தம் செய்து கொள்வதாக சத்தியம் செய்துகொண்டார்கள். ஒருவளுக்கு ஒரு பெண்ணும், மற்றவளுக்கு ஆமை ஒன்றும் பிறந்தன. பெண்ணை ஆமைக்கு கொடுக்க இஷ்டப்படவில்லை. ஆமையாகப் பிறந்த ஜீவன் ஈசுவரனை பூஜை செய்து, தனக்கு ஏற்பட்ட பெண்ணை இத்

தலத்தில் மணஞ் செய்துகொண்டான். அவனும் ஆமை உருவம் நீங்கி மானிட உருவம் பெற்ருன்.

*பாணுதிராஜபுரம்*: வடகரை 2 மைல். வாமனர் இவ் வூரில் தங்கியிருந்து காவேரி ஸ்நானம் செய்து சில நாட்கள் தபசு செய்துகொண்டிருந்ததால் 'வாமன ராஜபுரம்' என்ற பெயரும் உண்டு. பாணன் சிவனை பூஜித்து ஆயிரம் கைகளைப்பெற்ற ஸ்தலம். இவ்வூர் ஸ்நான கட்டத்திற்கு 'பாணதீர்த்தம்' என்று பெயர். பூஜை செய்யப்பட்ட லிங்கத்திற்கு ,பாணலிங்கம்' என்று பெயர். இக்காரணத்திஞல் பாணுதிராஜபுரம் என்ற பெயர் வந்தது. மாசி மாதம் பாணேசுவரசுவாமி கோயிலுக்கு உற்சவம் நடைபெறும்.

காஞ்சி க்ஷேத்ர 'பத்ரகோளன்' என்பவன் பிறவிக் குருடன். சத்யாஷாட ரிஷியினுடைய அனுக்ரகத்தால், இவ்வூரில் ஸ்நானம் செய்து சிவன் அருளால் கண்பெற்ற ஸ்தலம். ஆகையிஞல் மாசி, கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசியன்று லக்ஷ்மி, நாராயணர், பாணலிங்கம் இவர்களை ஸ்நானம் செய்து தரிசனம் செய்தால், பெரும் பேறு பெற முடியும்.

*திருஇந்தளூர்*: (திருவழந்தூர்) வடகரை 5 மைல். சுகந்த வனம் எனப்படும் இந்த ஸ்தலத்தில் சந்திரன்தன் சாபம் விலக்கப் பெற்றதிஞல் இந்தளூர் எனப் பெயர் வழங்கலாயிற்று. ஐப்பசி மாதம் துலா காவேரி ஸ்நான கடைசிநாள் இறுதியாகக்கொண்ட பத்து நாட்களும், பங்குனி உத்தர நக்ஷத்திரத்தை முடிவாக பத்து நாட்களும் ஆக இரண்டு பிரும்மோற்சவங்கள் நடைபெறுகின்றன. காவேரிக்கும் சந்திரனுக்கும் பிரத்யக்ஷமான ஸ்தலம். சுகந்தவன நாதர், அரங்கஞதர், சந்திரசாப விமோசன நாச்சியார், புண்டரீக வல்லி, வீரசயனங்கொண்ட பெருமாள் இவர்கள் தரிசனம் மகா பாபவிமோசனம். குலசேகர திருமங்கை ஆழ்வார்களின் மங்களா சாஸனம் பெற்றுள்ளது.

*வெள்ளலார் கோவில்*: வடகரை 1 மைல். ஞானும்பிகை ஸமேத வதான்யேசுவரர் கோவில் ஒரு பெரிய க்ஷேத்ரம். தக்ஷிணு மூர்த்தி ஸ்தலம். தக்ஷிணுமூர்த்தி இங்கு ரிஷபத்தின்மேல் வீற்றிருக்கிருர். தக்ஷிணுமூர்த்திதான் காவேரியில் தீர்த்தம் கொடுப்பது வழக்கம். ரிஷபத்தின் கர்வம் அடக்கப்பட்டஸ்தலம். ஐப்பசி அமாவாசை விசேஷம். இங்கு தக்ஷிணுமூர்த்தி ரிஷபா ரூடராய் காக்ஷியளிக்கிருர்.

*கருங்குயில்நாதம்பேட்டை*: வடகரை 1 மைல். உமை. கருங்குயில்நாதஸ்வாமி கோவில் உள்ளது. ஒவ்வொரு

கார்த்திகை ஞாயிற்றுக்கிழமை தினம் காவேரித் துறையில் தீர்த்தம் கொடுப்பது விசேஷம். எதிர்க் கரையில் தர்மபுரம் உள்ளது.

*மேலப்பாதி*: வடக்கரை 5½ மைல். ஐ்வரஹரேசுவரர் கோயில் உள்ளது. சில கல்வெட்டுக்கள் உள்ளன.

*கிளையூர்*: வடகரை 1 மைல். காவேரி உத்தரவாஹினி. கிளுவை மரத்தின் அடியில் லிங்கம் உள்ளது. அபிராம்பாள் ஸமேத அம்பிரக்ஷகனேசுவரர் கோயில்.

*அல்லி விளாகம்*: வடகரை 2½ மைல். கணபதி ஆலயம், அன்னம் பெருமாள் ஆலயம் இருக்கின்றன. இங்குள்ள பெருமாள் திருப்பதி பெருமாளுக்கு மூத்தவர் என்றும், அங்கு செலுத்த வேண்டிய பிரார்த்தனையை இங்கு செலுத்தலாமென்றும் சொல்கிறார்கள்.

*கீழத்திருக்காட்டுபள்ளி*: வடகரை 1 மைல். நால்வர் பாடல்பெற்ற ஸ்தலம். அகிலாண்ட நாயகி ஸமேத ஆரண்ய ஸுந்தரேசுவரர் ஆலயம் உளது. தேவர்கள், தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொன்ற பழி நீங்கி தேவலோகத்தை ஆள வேண்டுமென சிவபெருமானை பூஜித்த ஸ்தலம்.

*சாயாவனம்*: வடகரை 5 மைல். ஒரு பெரிய சிவஸ்தலம். இவ்வூரை திருச்சாய்க்காடு என்று சொல்வதும் உண்டு.

கோஷாம்பாள் ஸமேத சாயாவனேசுவரர் கோயில் உள்ளது. தேவேந்திரன் பூஜித்தஸ்தலம். ஐராவத தீர்த்தம் உள்ளது. இக் கோயிலில் ரதம் போன்ற விமானம் காணப்படுகிறது. இந்த விமானம் தேவேந்திரனுக்கு சொந்தமானதாகவும், அவன் வந்த விமானம் இங்கேயே தங்கிவிட்டதாயும் புராணம் சொல்கிறது. இங்கு இயற்பகை நாயனர் தம்பதிகள் உருவச் சிலைகள் உள்ளன. காவேரிப்பூம்பட்டினத்தில் ஸ்நானம் செய்துவருபவர்கள் இவ் விடத்தில் ஸ்வாமி தரிசனம் செய்து, திருவெண்காட்டுக்குப் போய், அங்கும் தரிசனம் செய்வதால் முக்தி பெறலாம் என்று சாஸ்திரம் கூறுகிறது. இவ்வூர் காசிக்குச் சமமாக சொல்லப் படுகிறது.

*பல்லவனீசம்*: வடகரை 1 மைல். பாடல்பெற்ற ஸ்தலம். நால்வர் பாடல்கள் பெற்றுள்ளது. இவ்வூரை காவேரிப்பூம் பட்டினம் என்று சொல்வதுண்டு. வெகுகாலத்திற்கு முன் இவ்வூர் வரையில் ஸமுத்ரம் இருந்ததாகச் சொல்கிறார்கள்,

இங்கிருந்து ஸமுத்ரம் 2 மைல். இங்கு பல்லவநீசர் கோயில் உள்ளது. பல்லவராஜன் பூஜித்த ஸ்தலம். சௌந்தர்ய நாயகி ஸமேத பல்லவனீசர் ஆலயம். இங்கு பட்டினத்தடிகளும், சிலப்பதிகார கோவலனும் வசித்த ஸ்தலமாகும்.

*காவேரிப்பூம்பட்டினம்*: வடகரை 1 மைல். ஸங்கமேசுவரர் கோயில், வரதராஜப் பெருமாள் கோயில் உள்ளன. இங்குதான் கண்ணகி வாழ்ந்ததாகச் சொல்கிறார்கள். காவேரி சமுத்திர ராஜனிடம் ஸங்கமம் ஆகும் இடம் ஒரு மைல் தெற்கேயுள்ளது. மற்ற நதிஸங்கமங்களில் எல்லாம் சங்கமத்திற்கு சில தூரத்திற்கு முன்பே ஆற்று ஜலம் உப்பாக இருக்கும். காவேரி ஸங்கமத்தில் ஸங்கமமாகும் இடத்திலும் ஜலம் உப்பில்லாமல் குடிக்கும்படியாக இருக்கும். இவ்விடம் ஸங்கமம் ஆகும் காவேரி ஆடி மாஸத்தில் தான். ஆதிகாவ்யமான ஸ்ரீமத் இராமாயணத்தை அருளிய ஆதி கவி வால்மீகி மகரிஷி இப்பக்கத்திலுள்ள தபோவனத்தில் ஆசிரமவாசியாய் இருந்ததாகத் தெரிய வருகிறது.

## *தஞ்சை ஜில்லா - காவேரிதீரம் தென்கரை க்ஷேத்திரங்களின் வரிசை—38 காவேரி ஸங்கமம் முதல் திருச்சி ஜில்லா ஆரம்பம் கல்லணை வரையில்.*

*திருவலம்பரம்*: தென்கரை 4 மைல். சமுத்திர சங்கமத் துறை: நால்வர் பாடின ஸ்தலம். அப்பர் சுவாமிகளை ஈசன் தானுகவே இந்த ஸ்தலத்திற்கு அழைத்து வந்தார். இவ்வாலயத்திற்கு நேர் எதிரில் ஏறண்ட மஹரிஷி கோயில் இருக்கிறது. வலம்புரி நாதர் ஆலயம். ஏறண்டரிஷி திருவலஞ்சுழியில் கனக சோழன் என்ற அரசனோடு காவேரி பிலத்துவாரத்தில் முழுகி திருவலம்பரத்தில் ஈசன் கட்டளையினல் கரையேறி முக்தி பெற்றார்.

காவேரிக் கரையின்மேல் செங்கழனீர் விநாயகர் ஆலயம் உள்ளது. மகததேச அரசன் மகன் தக்ஷணன் தன் இறந்த தந்தையின் அஸ்திகளை அநேக நதிகளில் தோய்த்து வருகையில், கடைசியில் காவேரியில் இந்த ஸ்தலத்தில் தோய்த்தவுடன், அவைகள் செங்கழுநீர் மலர்களானதை கண்டதாக புராணம் கூ।

இங்கு விஷ்ணு சிவபெருமானை பூஜித்து வலம்புரிச் சங்கம் பெற்றார்.

வடுவகிற் கண்ணம்மை ஸமேத வலம்புரிநாதர் கோயில்.

*தலைச்சங்காடு*: தென்கரை 4 மைல். கோயில் கட்டுமலை மேல் உள்ளது. மஹாவிஷ்ணு சிவபெருமானை பூஜித்து பாஞ்ச ஜன்யம் என்னும் சங்கம் பெற்றார்.

சௌந்தர்யநாயகி ஸமேத சங்கருணாதேசுவரர்.

*புஞ்சை கடாரங்கொண்டான்*: தென்கரை 4 மைல். பர்வதராஜ புத்ரி ஸமேத நந்துணைநாதர் கோயில். இவ்வூர் வரையில் கிழக்கு முகவாய் வந்த காவேரி வடக்கு முகம் திரும்பு கிறது. இவ்வூர் கீழ்கரையில் சுவர்ண தீர்த்தம் உள்ளது. மூவர் பாடிய ஸ்தலம் அஷ்டவஸுக்கள் பூஜித்த ஸ்தலம்.

கடாரங்கொண்டான், கீழையூர், புஞ்சை என்ற மூன்று கிராமங்களுக்கு மத்தியில் காவேரி மேற்கு முகமாய் (பச்சிம வாஹினி) போய் பிறகு வடக்கு முகமாய் சென்று மணிகர்ணி கையை கலந்துகொண்டு கிழக்குமுகமாய் பிரவஹிக்கிறது.

பச்சிமவாஹினியாய் உள்ள இடத்தில் பரசுராமன், தாயார் ரேணுகாதேவியை பூஜித்து வரம்பெற்றார். ரேணுகாதேவி ஆலயம் ஒன்று இலுப்பைத் தோப்பில் இருக்கிறது.

கடாரங்கொண்டான் பக்கத்தில் உள்ள ஒரு கோயிலில் பர்வதராஜபுத்ரி ஸமேத சாபஹரேசுவரர் ஆலயம் இருக்கிறது. அதன் பக்கத்திலுள்ள திருக்குளத்தில் ஒரு காகம் ஸ்நானம்செய்து சரீரத்தை பொன்னிறமாக்கிக் கொண்டதாக ஐதீகம்.

*செம்பொன்னார்கோயில்*: தென்கரை 3 மைல். மட்டுவார் குழலம்மை ஸமேத சுவர்ணபுரீசுவரர் கோயில். சம்பந்தர், அப்பர் பாடல்பெற்ற ஸ்தலம். காவேரி, இந்திரன், குபேரன் இவர்கள் இங்கு பூஜித்தனர்.

*விளநகர் - ஆர்பாதி*: தென்கரை 1 மைல் தோளிஅம்மாள் ஸமேத, துறைகாட்டீசுவரர் கோயில். இங்குள்ள ஈசன் ஒரு சமயம் அருள்பித்தன் என்ற பக்தன் புஷ்பங்கள் பறித்து திரும்புகையில் காவேரி வெள்ளத்தில் வழி தவறி திகைக்கும்பொழுது, வழி காட்டி துறைக்கு அழைத்துச் சென்றதால் அவருக்கு துறை காட்டீசுவரர் எனப் பெயர் வழங்கிற்று. இங்கு வாதராஜப் பெருமாள் ஆலயம் உள்ளது. ஒரு சமயம் ஒரு வீரவைஷ்ண



மாயவரம்—ரிஷப கட்டம்



மாயவரம்—துலா ஸ்நானக் காட்சி

வனும், வீரசைவனும் யார் பெரியவர் என்று வாதாடுகையில் ஹரிஹரர் இருவர்களும் வாஹனங்களை மாற்றிக்கொண்டு தரிசனம் கொடுத்தார்கள். இருவரும் ஒன்றே என்று பக்தர்கள் அறிந்துகொண்டார்கள் என்று ஸ்தல புராணம் கூறுகிறது.

ஆர்பாதி வளநகருக்குப் பக்கத்தில் உள்ள சிறிய கிராமம். இதற்கு தெற்கில் அஷ்டவீரயானத்தில் ஒன்ருன திருப்பறியலூர் இருக்கிறது. தக்ஷயாகத்தை அழித்த இடம் என்று சொல்லப் படுகிறது.

*தருமபுரம்*: தென்கரை 3½ மைல். இவ்வூரிலுள்ள பெரிய சைவமடமான தருமபுர ஆதீனத்தின் முக்கிய ஸ்தானம் இருக் கிறது. ஒரு சிவன் கோயிலும் உள்ளது.

*மாயூரம்*: தென்கரை 1 மைல். காவேரி குறுகிய அளவில் ஓட்டமுள்ளது. ஒரு அசுரன் காவேரி ஜலத்தை குடிக்க ஆரம் பித்தான். பரமசிவன் அவனை ஸம்ஹரித்து தான் அந்த தீர்த்தத் திலேயே வசித்தார். இந்த இடத்திற்கு மயூரம் எனப் பெயர். இங்கு ஸ்நானம் செய்து மயூரநாதனை சேவித்தால் சகல பாபங் களும் நிவர்த்தியாகின்றன. மயூரநாதர் கோயில் உள்ளது. தேவியும் மயில் ரூபம் எடுத்து ஈசுவரனை பூஜித்த ஸ்தலம். இந்தி ராணியும் பரமனை பூஜித்தாள். முக்குறுணிப்பிள்ளையார் பிரபலம். கோவிலின் வடகோடியில் ஆதி மயூரநாதர் என்னும் சன்னதி உள்ளது. இவ்விடத்தில்தான் துலா ஸ்நான பூர்த்தி ஆகிறது என்று சொல்கிருர்கள். ரம்பை காவேரியில் ஸ்நானம் செய்து கல் உருவம் நீங்கப்பெற்ற ஸ்தலம். காவேரி துலா ஸ்நான கட்டத்திற்கு ரிஷப கட்ட தீர்த்தம் எனப் பெயர். கோவிலில் அனவத்தியை, நாதசர்மா இவர்கள் ஆலயத்தையும், மயிலம்மை சன்னதியையும், சட்டநாதரையும் கடைமுகத்தன்று அல்லது மறுநாள் அவசியம் தர்சனம் செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் துலா ஸ்நான பலன் கிடையாது. விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர் கோவில் ரிஷப தீர்த்தக் கரையில் இருக் கிறது. மாயவரத்தில் அபய ப்ரதாம்பாள் ஸமேத மயூரநாதர் கோயில் உள்ளது. அப்பர் சுவாமிகளும், சம்பந்தமூர்த்திகளும் பதிகம் பாடியுள்ளார்கள்.

சூரியன், சந்திரன், நவக்ரகங்கள், புலஸ்தியர், வியாஸர், சூதர், சௌனகர் முதலானவர்கள் காவேரியில் ஸ்நானம் செய்து பகவானை தரிசித்து இஷ்டபலனை அடைந்தார்கள். இதை. காசிக்கு ஸமானமான ஆறு க்ஷேத்ரங்களில் ஒன்ருக கருது

[1. சுவேதாரண்யம் 2. பஞ்சநதம் 3. கௌரீமாயூரம் 4. அர்ஜுனம் 5. சாயாவனம் 6. ஸ்ரீவாஞ்சியம்]

*மூவ்லூர்*: தென்கரை 1½ மைல். மங்களாம்பிகை ஸமேத புன்னாகவனேசுவரர் ஆலயம். திருநாவுக்கரசு வைப்புஸ்தலம்.

*ஹரிஹரபுரம்*: தென்கரை 3 மைல். இதன் மருவி வந்த பெயர் அறையபுரம். முன்னர் திரிபுர தகனம் ஆனபிறகு திருமாலும், பிரமனும் இந்திரனுடன் சேர்ந்து, திரிபுரத்தை எரித்த அம்பு விழுந்த இடத்தைத் தேடிவந்தார்கள். அப்பொழுது மயூரநாதர், வேடன உருவத்துடன் வழித் துணையாய்ச் சென்றார். ஹரியும் ஹரனும் சந்தித்த இந்த ஸ்தலம் அவர்களின் பெயர் கொண்டு விளங்குகிறது. இங்கு அநேக சன்னியாசிகள் சித்தியடைந்திருக்கிறார்கள்.

*குத்தாலம்*: தென்கரை 2½ மைல். ஒரு சமயம் அம்பாள் விளையாட்டாக லிங்கம் அமைத்து பூஜிக்கையில், பாணத்தினின்றும் ஒரு கை தோன்றி அம்பாள் கையைப் பிடித்ததாகவும், அம்பாள் யார் என்று வினவ, அதற்கு 'அஹம் உக்தவேதி' (சொன்னவர் அறிவார்)என பதில் வரவே, அம்பாள் ஞானத்தினால் அறிந்துகொண்டு தன்னை பூலோகப் பிரகாரம் கல்யாணம் செய்து கொள்ளவேண்டுமென்று ஈசனை வேண்டினார். ஈசனும் பக்கத்தில் உள்ள திருமணஞ்சேரியில் கல்யாணம் செய்துகொண்டு, பாதுகை, ஊன்றுகோலுடன் வந்து இந்த ஊரில் சிவலிங்க வடிவாய் அமர்ந்தார். ஊன்றுகோல் குத்தால விருக்ஷமாய் விளங்குகிறது. 'மிருதுமுகுள குசாம்பிகை' ஸமேத உக்தவேதேசுவரர் கோவில் உளது. இக்கோயிலில் உள்ள புஷ்கரணியில் சுந்தரமூர்த்தி ஸ்நானம் செய்து குஷ்டரோக நிவர்த்தியடைந்தார். ஒரு அசுரன் தன் தபோபலத்தால் சூரிய ஒளியை மழுங்கச் செய்த பொழுது, சூரியபகவான் கார்த்திகை ஞாயிறு உதயத்தில் காவேரியில் ஸநானம் செய்து ஈசுவரனை பூஜித்த மாத்திரம் சக்தி பெற்று அசுரனை வென்றார். இங்குள்ள மூர்த்திகள் விசேஷமானவை.

1. ஓங்காரேசுவரர்
2. சோணீசுவரர்
3. சோமேசுவரர்
4. ஆதிகேசவப்பெருமாள்.

*திருவாலங்காடு*: தென்கரை 4 மைல். ஸ்ரீ ப்ராணகாம்பாள் ஸமேத ஸ்ரீ வடாரண்யேசுவரர் கோயில் கொண்டுள்ளார். ஸ்தலபுராணம்: பரதன் என்னும் பிராமணன் புத்திரன் அடை

வதற்கு புத்ர காமேஷ்டி செய்யும்பொழுது யாகாக்னியிலிருந்து அம்பாள் பிரஸன்னமானுள். இங்கு புத்ர காமேஷ்டி லிங்கம் உள்ளது. பங்குனி அமாவாசையில் தீர்த்தவாரி விசேஷம்.

சோழராஜனுல் கட்டப்பட்ட இக்கோவில் பாதி கட்டினதும், பூராவாக கட்டமுடியாமற் போய்விடவே யார் இதை பூர்த்தி செய்கிறுர்களோ அவர்களுடைய பாதங்களை தன் சிரசில் வைத்துக் கொள்வதாய் கூறி, அதற்கு அறிகுறியாக ஒரு பாதம்செய்து அதை தலையில் வைத்துக்கொண்டு சோழராஜா ஒரு கற்சிலையாக நாயன்மார்கள் பக்கத்தில் நிற்கிறுர்.

ஹரிச்சந்திரன் பல தடவைகளில் அசுவமேதயாகம் செய்து, பூர்த்தியாகாமல், அது இந்த க்ஷேத்ரத்தில் ஈசுவரன் கிருபையால் பூர்த்தியடைந்ததாம்.

இரண்டு பருந்துகள் ஆகாயத்தில் பறந்துகொண் டிருக்கும் பொழுது, இறக்கைகள் உதிர்ந்து செயலற்று அம்பாள் சன்னதியில் விழுந்தனவாம். அவைகள் அம்பாளைப் பிரார்த்திக்க, அம்பாளின் கருணையால் திவ்ய சரீரம் பெற்று இந்தக் கோயிலின் கோபுரத்தில் உத்தரவுப்படி இருந்துகொண் டிருக்கின்றனவாம்.

இந்த ஊரில் கங்காதர வாஜபேயர் என்ற மகான் இருந்தார். அவருடைய சிஷ்யர் பாஸ்கரராயர். காவேரிக் கரையில் உத்ஸவாம்பாள் ஸமேத உத்ஸவேசுவரர் கோவில் உள்ளது. காவேரிக் கரையில் நீலகண்ட வாஜபேயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட நர்மதாக்கரை பாணமும், ஒரு விநாயகரும், கருங்கல் படித் துறையும், ஒரு மடமும் உள்ளது.

*திருவாவடுதுறை*: தென்கரை 1 மைல். ஒப்பிலாமுலையம்மை ஸமேத மாசிலாமணீசுவரர் கோயில் உள்ளது. திருஞான ஸம்பந்தர் தமது தகப்பனுர் யாகம் செய்யும்பொருட்டு அருள் பெற்ற ஸ்தலம். திருமூலநாயனுர் வருஷத்திற்கு ஒரு பாடலாக 3000 திருப்பாடல்களால் திருமந்திரம் சொன்ன இடம், திருவிசைப்பாபாடி திருமாளிகை தேவர் வாழ்ந்த இடம். சைவ மடங்களுள் முக்கியமானதில் ஒன்ருகிய திருவாவடுதுறை ஆதீனம் முக்கிய ஸ்தானம்.

*நரஸிங்கம்பேட்டை*: தென்கரை 1½ மைல். லோகநாயகி ஸமேத சுவயம்புநாதர் கோயில் உள்ளது. நரஸிம்மமூர்த்தி தன் கோரரூபம் நீங்க சிவபூஜை பண்ணிய ஸ்தலம். ஒரு மாரியம்மன் கோயில் எல்லையில் உள்ளது.

*ஆடுதுறை*: தென்கரை 1½ மைல். இதை தென்குரங்காடு துறை எனவும் சொல்வது உண்டு. ஆபத்ஸஹாயேசுவரர் ஸ்வாமி – சுக்ரீவன் பூஜித்து பெரும்பேறு பெற்ற ஸ்தலம். அப்பர், சுந்தரர் பதிகம் உள்ளது.

*கோவிந்தபுரம்*: தென்கரை 2 மைல். வீரசோழன் ஆற்றங் கரைக்கு தென்கரையில் உள்ளது. காவேரிக்கும் இவ்வூருக் கும் ½ மைல் தூரம்தான் இருக்கிறது. கோவிந்தபுரத்தில் சித்தி யடைந்த போதேந்திர சுவாமிகளின் அதிஷ்டானம் வீரசோழன் ஆற்றங்கரையில் இருக்கிறது. பக்கத்தில் ஸ்நான கட்டம் உள்ளது. ஆத்ம போதேந்திர யதீந்திர ஸ்வாமிகள் ஸ்ரீ ஜகத்குரு ஆசாரியாளாய், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியாய் இருந்து நாமஸித்தாந்தத்தை ஸ்தாபிதம் செய்தார்கள். பாகவதர்கள் யாவரும் பஜனை முதலிய ஸத்கார்யங்களில் ஆரம்பகாலத்தில் ஸ்ரீமத் போதேந்திர, யோகீந்திர, தேசிகேந்திரமுபாஸ் மஹே! என்று இந்தப் பெரியவாளை துதி செய்வார்கள்.

*திருவிடைமருதூர்*: தென்கரை 1½ மைல். ஸ்வாமி பெயர் மஹாலிங்கம் அம்பாள் பிருஹத் குசாம்பாள். இந்த க்ஷேத்ரத்தை மத்யமாகக் கொண்டு, விநாயகர் க்ஷேத்ரம், திருவலஞ் சுழியாகவும், ஸ்ரீ சுப்ரமணிய க்ஷேத்ரம் ஸ்வாமிமலையாகவும், சண்டிகேசுவர க்ஷேத்ரம் திருச்சேய்ஞநல்லூராகவும், தக்ஷிண மூர்த்தி க்ஷேத்ரம் ஆலங்குடியாகவும், நடராஜ க்ஷேத்ரம் சிதம்பர மாகவும், பைரவ க்ஷேத்ரம் சீர்காழியாகவும், நவக்ரஹக்ஷேத்ரம் சூரியனார் கோவிலாகவும், நந்திகேச க்ஷேத்ரம் திருவாவடுதுறை யாகவும், சோமாஸ் கந்தக்ஷேத்ரம் திருவாரூராகவும், அமைந் துள்ளதய்ா கூறப்படுகிறது. இது மூகாம்பிகை தவம்புரிந்த ஸ்தலம். அம்பாளுக்கு தனி சன்னதி உள்ளது. இது மூவரின் தேவார ஸ்தலமாகும்.

இங்கு பட்டினத்தாரும், பத்ரகிரியாரும் பூஜித்த ஸ்தலம். இவ்வூரில் தைப்பூசம் விசேஷம். விருத்திராசுரனைவதம் செய்த பாபத்தை இந்திரன் ஸ்ரீ மகாலிங்கேசுவரரை பூஜித்து நீக்கிக் கொண்டான்.

ஆதிசங்கரருடன் வாதம் செய்த அந்தணர்களுக்கு அத் வைதமே ஸத்யம் என்று பகவான் பிரத்யக்ஷமாய் இங்கு அருள் மொழி கூறினார்.

இந்த க்ஷேத்திரத்தில் உள்ள புண்ணிய தீர்த்தங்கள்: காருண்யாம்ருத தீர்த்தம், பாணதீர்த்தம், பராசர தீர்த்தம்

இந்திரதீர்த்தம், வருணதீர்த்தம், கனகதீர்த்தம், கங்காகூபம், கல்யாணதீர்த்தம், ஐராவத தீர்த்தம். வரகுணபாண்டியன் இப்பதியில்* அருள்பெற்ருன்.

பூஜாவிதிகளை தேவர்களுக்கு அறிவிக்கும் பொருட்டு ஈசன் தன்னைத்தானே அர்ச்சித்துக் காட்டிய ஸ்தலம். ஆண்டபிள்ளையார் சன்னதி உள்ளது.

ஸ்ரீ சைலம் - மல்லிகார்ஜுனம் ஆந்திர தேசத்தில் உள்ளது. தெற்கே பாண்டிய நாட்டில் புடார்ஜுனம் (திருப்புடைமருதூர்). இவை இரண்டுக்கும் மத்தியில் மத்யார்ஜுனம் (திருவிடைமருதூர்). இது காசிக்கு ஸமானமாக சொல்லும் சுவேதாரண்யம், பஞ்சநதம், கௌரீமாயூரம், மத்யார்ஜுனம், சாயாவனம், ஸ்ரீ வாஞ்சியம் என்ற 6 க்ஷேத்திரங்களில் ஒன்று.

*திருபுவனம்*: தென்கரை 1 மைல். வீரசோழன் ஆற்றங்கரை. காவேரி 1½ மைல் தூரம். கம்பகரேசுவரர் கோவில். சரபர் சன்னதி உள்ளது. அறம்வளர்த்தநாயகி ஸமேத கம்பஹரேசுவரர். இதற்கு "வில்வவனம்" என்றும் பெயர் உண்டு. அபூர்வ வேலைப்பாட்டுடன் கூடிய கோபுரம். வரகுணபாண்டியனின் நடுக்கத்தை நீக்கிய ஸ்தலம்.

நரஸிம்மாவதாரத்தின் உக்ரகத்தை ஈசன் சரபை வடிவம் கொண்டு அடக்கியதாக ஐதீகம்.

*புண்ய தீர்த்தங்கள்*: சரபதீர்த்தம், தேவதீர்த்தம், ஞானதீர்த்தம், வியாஸதீர்த்தம், பிருகுதீர்த்தம், சித்ததீர்த்தம் முதலியன.

அசுவக்ரீவன், விருஷபக்ரீவன், வியாளக்ரீவன் பிரமன் முதலிய தேவர்கள் பூஜை பண்ணிய ஸ்தலம்.

ஆலயத்தின் முதல் ப்ரகாரத்தின் நடுவில் நடுக்கம் தீர்த்த பெருமாள் கோவில் இருக்கிறது. கர்ப்பக்ரக கோபுரம் தஞ்சை ப்ருஹதீசுவரர், கங்கைகொண்ட சோழபுரம் புவனேசுவரர், ஸ்தூபிகளைப்போல் நிழல் கீழ்த்தளத்தில் விழாது அமைந்துள்ளது.

இவ்வூருக்கு 'வில்வவனம்' திரிபுவனம், தேவக்ஷேத்ரம், நிம்பாண்டிய க்ஷேத்ரம் எனப்பெயர்களும் உண்டு.

*அம்மாசத்திரம்*: தென்கரை 1½ மைல்.

இது ஸப்தரிஷி ஸ்தலம். தஞ்சை மகாராஜாவினுல் ட்டப் பட்ட ஒரு சத்திரமும், படிக்கட்டுகளுடன் கூடிய ஒரு குளமும் உண்டு.

*கும்பகோணம் அல்லது திருக்குடந்தை:* தென்கரை 4 மைல்.

இந்த க்ஷேத்திரம் அரிசொல்லாற்றிற்கும், காவேரிக்கும் மத்தியில் அமைந்துள்ளது. இது துவாதச முக்தி ஸ்தலங்களில் ஒன்ருகும். இங்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் தலைமை மடம் உள்ளது. மாத்வ, அஹோபில, வீரசைவ மடங் களும் இருக்கின்றன.

ஸ்தல யாத்திரை செய்கிறவர்கள் திருவிடைமருதூர், திருநாகேசுவரம், திருத்தாலேசுவரம்; (தாராசுரம்) சுவாமிமலை, திருப்பாடல் வனம் (கருப்பூர்) ஆகிய பஞ்சக்ரோச ஸ்தலங்களை தரிசித்து, தங்கி வலம்வந்த பின்னர் கும்பகோண பிரவேசம் செய்யவேண்டும்.

*ஆலயங்கள்*

1. ஆதி கும்பேசுவரர்: ஸ்ரீ மங்களாம்பாள் ஸமேத கும்பேசுவரர்.

2. சாரங்கபாணி ஆலயம்: நேர்கிழக்கில் உள்ளது.

3. நாகேசுவரர் கோவில்: சாரங்கபாணி ஆலயத்தின் கிழக்கே உள்ளது.

4. சோமேசுவரர் கோவில்: சாரங்கபாணி ஆலயத்தின் வடகிழக்கு பாகம்.

5. குடந்தைக்காரோஹணம் என்ற விசுவேசுவரர் கோவில் நாகேசுவரர் ஆலயத்தின் தென்கிழக்கு, மகாமககுளத்தின் வட கரையில் உள்ளது.

6. பாணபுரீசர் ஆலயம்: சாரங்கபாணி ஆலயத்தின் வடதிசையில் உள்ளது.

7. கௌதமேசுவரர் ஆலயம்: மகாமக குளத்தின் தென்மேற்கு.

8. அபிமுகேசுவரர் ஆலயம்; மகாமககுளத்தின் கீழ்கரை.



திருக் குடந்தை : ஸ்ரீ ஆதி கும்பேசுவரர் கோயில்



திருக் குடந்தை :
ஸ்ரீ சீதா — ஸ்ரீ ராமர் — ஸ்ரீ லட்சுமணர் — ஸ்ரீ அனுமார்



திருக் குடந்தை : ஸ்ரீ சாரங்கராஜா

9. ஸ்ரீராமர் கோவில்: கும்பேசுவரர் ஆலயத்தின் தென் கிழக்கு.

10. ஸ்ரீ சக்ரபாணி கோவில்: கும்பேசுவரர் ஆலயத்தின் வடக்கு.

11. கம்படவிசுவனுதர் ஆலயம் ; கும்பேசுவரர் கோவிலுக்கு மேற்கு.

இவைகளைத் தவிர கோபாலன், காளஹஸ்தீசர், வராஹப் பெருமாள், உச்சிப்பிள்ளையார், வேதநாராயணர், தசாவதாரப் பெருமாள் முதலான ஆலயங்கள் நிரம்பியுள்ளன.

*ஆதிகும்பேசுவரர்*: அமிருதத்திலிருந்து உண்டானவர்.

மந்த்ரபீடேசுவரி என்ற மங்களாம்பிகை, அம்பாள் கும்பமுனிவரால் பூஜிக்கப்பட்ட ஸ்தலம். சம்பந்தர், அப்பர் சுந்தரர் பாடல் பெற்ற ஸ்தலம். ஸ்வயம்புலிங்கம் ஸ்ரீகோவிந்த தீக்ஷதர் என்ற மகானுல் திருப்பணி செய்யப்பட்டது.

ஸ்ரீகோவிந்த தீக்ஷதர், தம்பதிகளின் சிலை மங்களாம்பாள் சன்னதியின் எதிரில் காணப்படுகின்றன. மகாவிஷ்ணுவுக்கு இங்கு சக்கரம் கும்பேசுவரரால் அளிக்கப்பட்டதாம்.

ஸ்ரீ சாரங்கபாணி: சோமேசுவர ஆலயங்கள் பக்கங்களில் அமைந்துள்ளன. ஒரே கோவிலாகவும் இருந்திருக்கலாம். திருநாவுக்கரசரின் வைப்பு ஸ்தலம்.

சாரங்கபாணி கோயில் நூற்றெட்டு திருப்பதிகளில் ஒன்று. ஆழ்வாராதிகளால், (திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், பூதத்தாழ்வார்) மங்களாசாஸனம் பெற்ற திருப்பதியாகும்.

பொற்றுமரை என்ற ஹேமபுஷ்கரணியில், லக்ஷ்மிஹேமரிஷி புத்திரியாகத் தோன்றி ஸ்ரீ ஆராவமுதனுக்கு மாலை சூட்டியதாக ஐதீகம். பங்குனி மாதம் உத்தரநக்ஷத்திரத்தில் கல்யாண உற்சவம் நடைபெறுகிறது.

ஆலயத்தில் ஹேமரிஷி சிலா உருவமும், கோமளிவல்லத் தாயார் சன்னதியும் உள்ளன.

ஸ்ரீ நாகேசுவரர் : அப்பர், ஞானஸம்பந்தர் பாடல் பெற்ற ஸ்தலம். இக்கோயில் யுகப்ரளயத்திற்கு முன்பே இருந்ததாகத்

தெரிகிறது. கும்பமுனிவருக்கு நாகேசுவரர் பிரத்யக்ஷமாகி ஆதி கும்பேசுவரரின் ஸ்தானத்தை காண்பித்தாராம். சூரியபகவான் இழந்த ஒளியை இங்கு ஒரு புஷ்கரணியை உண்டாக்கி அதில் ஸ்நானம் செய்து, திரும்பப் பெற்றதாய் புராண வரலாறு. அதன் அடையாளமாக சித்திரைமீ 11, 12, 13-ந் தேதிகளில் காலையில் சூரியனுடைய கிரணம் மூலவாமேல் விழுவதை இன்றும் பார்க்கலாம். இதை 'பாஸ்கரக்ஷேத்ரம்' எனவும் கூறுவதுண்டு. ஆதிசேஷன் பூபாரம் தாங்கும் சக்தியை நாகச்சுனே (சிங்கக் கிணறு) யில் ஸ்நானம்செய்து, தவம் புரிந்து அடைந்ததாகவும், சிவராத்திரி தினம் இரண்டாவது ஜாமத்தில் பூஜை பண்ணுவ தாயும் ஐதீகம். ஆதிசேஷன் உருவச்சிலை ஸ்வாமி சன்னதிக்கு வடபால் உள்ளது.

பகவர் என்ற மகானுக்கு நாகேசுவரர் பிரத்யக்ஷமாகி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை கொடுப்பதாய் வாக்களித்தார். மேலும் தர்சன தினத்தன்று பகவத் படித்துறையில் ஸ்நானம் செய்கிறவர்களுக்கு துலா ஸ்நான பலன் கிட்ட வேண்டுமென்ற பிரார்த்தினையையும் நிறைவேற்றுவதாய் அருளினூர். ஜனங்கள் ஸ்நானம் செய்து, நாகேசுவரரையும், பகவரையும் தரிசிப்பார்கள்.

பகவர் என்ற ரிஷி தன் குருநாதரின் அஸ்திகளை, கங்கையில் கரைக்காமல், கும்பகோணம் சக்கர படித்துறையில் கரைத்தார். அஸ்திகள் புஷ்ப மலர்களாக மாறி மறைந்தன.

*சக்கரபாணி* கோவிலுக்கு நேராக உள்ள கவேரித் துறைக்கு சக்கர தீர்த்தம் எனப்பெயர். ஸ்ரீசக்ரபாணியை வில்வத்தாலும், குங்குமத்தாலும் அர்ச்சனை பண்ணுகிறூர்கள். இந்தத் தீர்த்தத்தில் கருப்பு எள்ளால் தர்ப்பணம் செய்தால் பிதுர்க்கள் கரையேறுவார்கள்.

*ஸ்ரீபாணபுரீசுவரர்* கோவில் அமிர்த குடத்தை அம்பு எய்வதற்கு நின்றவிடமாகும். வங்க தேசத்து அரசனின் மனைவி குஷ்ட நோயை, இங்குள்ள புஷ்கரணியில் ஸ்நானம் செய்து பாணபுரீசுவரரை தர்சனம் செய்து நீக்கிக்கொண்டாள். அரச னுக்கு புத்திரப் பேறும் உண்டாயிற்று.

*ஸ்ரீவிசுவேசுவரர் கோயில்* இதை நவ கன்னிகை ஆலயம் எனச் சொல்வதுண்டு. விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர். ஒன்பது நதிகள் கன்னிஸ்வரூபங்களில் இவ்விடம் வந்து தங்கிய தாக புராண வரலாறு.



திருக் குடந்தை : மகாமகக் குளம்



திருக் குடந்தை : ஸ்ரீ காசிவிசுவநாதர் கோயில்

## மகாமகக் குளம்: அதிலுள்ள புண்ணிய தீர்த்தங்கள்






அபிமுகேசுவரர் கோயில்



காசி விசுவநாதர் கோயில்






கௌதமேசுவரர் கோயில்

1. வாயு தீர்த்தம்
2. கங்கை தீர்த்தம்
3. பிரம்ம தீர்த்தம்
4. யமுனா தீர்த்தம்
5. குபேர தீர்த்தம்
6. கோதாவரி தீர்த்தம்
7. ஈசானிய தீர்த்தம்
8. நர்மதை தீர்த்தம்
9. இந்திர தீர்த்தம்
10. சரஸ்வதி தீர்த்தம்
11. அக்னி தீர்த்தம்
12. காவேரி தீர்த்தம்
13. யம தீர்த்தம்
14. குமரி தீர்த்தம்
15. நிருதி தீர்த்தம்
16. பயோஷ்ணி (பாலாறு) தீர்த்தம்
17. தேவ தீர்த்தம்
18. வருண தீர்த்தம்
19. சரயு தீர்த்தம்
20. கன்னியா தீர்த்தம்: அறுபத்தாறு கோடி தீர்த்தம்.

*கங்கைப் பிள்ளையார்* : ஒரு சமயம் விநாயகர் பிரும்மச்சாரி வேஷம் பூண்டு காசியிலிருந்து கங்கா தீர்த்தத்தை காவடியில் தாங்கி வந்த பொழுது, பரமசிவன் அவரை இந்தவிடத்தில் அமரும்படி செய்தாராம். 'கங்காகூபம்' என்றீ கிணறு பக்கத்தில் உள்ளது.

*கரும்பாயிரப் பிள்ளையார்* : கரும்பு கொடுக்க மறுத்த வியாபாரியின் கரும்புக்கழிகளை இரவில் ரசம் உறிஞ்சிவிட்டு மறைந்துவிட்டதாக புராணக்கதை. இக்கோயில் வராஹ குளத்திற்குப் பக்கத்தில் இருக்கிறது.

*ஸ்ரீ வராஹப் பெருமாள்* பூமியைப் பாயாக சுருட்டிக் கொண்டு பாதாளம் சென்ற இரண்யாக்ஷனை வராஹ அவதாரம் எடுத்து பூமியை திரும்ப ஸ்தாபித்த கோலத்தில் காணப்படுகிறார்.

*ஸ்ரீ அபிமுகேசுவரர்*: அமுதவல்லி அம்பாள் காஷ்மீர தேச ராஜ வம்ச ஸ்திரி ஒரு கொடிய நோயால் பீடிக்கப்பட்டு, இத் தலத்திற்கு வந்து, மாக நீராடி, பகவர் தரிசனம் செய்தவுடன் சௌக்கியமடைந்தாள். மகததேச அரசி தனது ஊமைப் பிள்ளை யுடன் இத்தலம் வந்து மாக நீராடி அபிமுகேசுவரரை தரிசனம் செய்தாள். ஊமைப் பிள்ளை பேச ஆரம்பித்தது.

*ஸ்ரீகௌதமேசுவரர் ஆலயம்* : கௌதம முனிவர் ஒரு பசுவைக் கொன்ற பாபத்தை, துர்வாச முனிவரின் உபதேசத்தால் காவேரியில் ஸ்நானம் செய்து கௌதமேசுவரரை தரிசித்தார். அவர் பாபமும் அகன்றது.

*ஸ்தலவரலாறு*: பிரும்மா அமிர்த கடத்தை பிரளய காலத்தில் மிதக்கவிட்டார். பரமசிவன் அதை ஒரு பாணத்தினால் அடித்தார். 'கடம்' உடைந்தது. அமிர்தம் சிதறியது. கடைசியாக 'கடம்' நின்றவிடம் கும்பகோண க்ஷேத்ரமாகும். அமிருதம் வழிந்து திரண்டு ஒன்று சேர்ந்தவிடம் மகாமகக் குளமும், பொற்றாமரை தீர்த்தமும் ஆகும். சிதறிய அமிர்தத்துடன் மண்ணால் உருவாகி லிங்க ஸ்வரூபமாய் அமைந்தவிடம் கும்பே சுவரர், அல்லது அமிர்த கடேசுவரர். கடத்தின் கழுத்து விழுந்த விடம் குடவாயில். குடத்திலிருந்து தெறித்து விழுந்த வில்வ தளம் திருநாகேசுவர க்ஷேத்ரம். தாப்பம் விழுந்தவிடம் அபிமுகேசுவரர் கோவில் உள்ளஸ்தலம்.

அம்பினால் ஏற்பட்ட துவாரங்களின் வழியாய் அமிர்தம் வழிந்தோடியது. ஐந்துவிடங்களுக்கு அவைகள் வழிந்து ஓடின.

அவ்வழிகளில் பஞ்சக் ரோசம் என்ற ஐந்து புண்ய ஸ்தலங்கள் தோன்றின; திருவிடைமருதூர், திருநாகேசுரம், தாராசுரம் சுவாமிமலை கருப்பூர்.

பன்னிரெண்டு வருஷங்களுக்கு ஒரு முறை குரு சிம்ம ராசியில் வரும்பொழுது இங்கு மகாமக உற்சவம் நடைபெறும். அப்பொழுது எல்லா புண்ய தீர்த்தங்களும் இங்கு ஒன்று சேர்கின்றன. மூவர் பாடல் பெற்ற ஸ்தலம். சிறந்த சிவ, வைணவ ஸ்தலம்.

கும்பேசுவர சுவாமியின் சப்த ஸ்தான உற்சவம் வெகு விமரிசையாக நடைபெறும்; சப்த ஸ்தான ஸ்தலங்களாவன : கும்பகோணம், கலய நல்லூர், திருவலஞ்சுழி, தாராசுரம், சுவாமி மலை, கொட்டையூர், மேலக்காவேரி.

*தாராசுரம்*: தென்கரை: 2 மைல்.

அரிசொல்லாற்றங்கரையில் உள்ளது. இங்கிருந்து காவேரி ½ மைல் தூரம்.

இந்த க்ஷேத்ரத்தை 'திருத்தாரேசுவரம்' 'ருத்ராக்ஷவனம்' என்றும் கூறுவர். இந்த க்ஷேத்ர தரிசனம் பசுவைக் கொன்ற பாபத்தையும் நீக்கும். இந்த க்ஷேத்ரத்தை நினைப்பவர் யம தண்டனைக்கு உள்ளாக மாட்டார். இங்குள்ள ருத்ராக்ஷ விருக்ஷத்தின் இலை, காய், கிளையாவும் தேவாம்சம் பெற்றது. யமன் இங்கு சூலதீர்த்தம் உண்டாக்கி, சிவலிங்க பூஜை செய்து, ஆவணி அசுவதியில் உற்சவம் தொடங்கி மகத்தில் தீர்த்தவாரி நடத்தி தனக்கு ஒரு முனிவரால் ஏற்பட்ட சாபத்தை நீக்கிக் கொண்டு தன்னுலகம் சென்றதாக ஸ்தலபுராண வரலாறு.

சூரஸேனன் தன் பிரும்ஹத்தி தோஷத்தை இந்த க்ஷேத்ரத்தில் அன்னதானம் அளித்து நீக்கிக் கொண்டான். ஐராவதம், துர்வாஸர் சாபத்தால் கருகிப்போன தன் தேகத்தை இந்த க்ஷேத்திரத்தில் யமதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து புனித மாக்கிக் கொண்டார். இதனால் சுவாமிக்கு ஐராவதீசுவரர் எனப் பெயர். தாரன் என்பவன் பகவானை பூஜித்து சாகாவரன் பெற்றான். இதனால் இந்த ஸ்தலம் தாரேசுவரம் என்று பெயர் கொண்டது.

*திருவலம்சுழி*: தென்கரை 2 மைல். அரிசொல்லாற்றங் கரையில் உள்ளது.

பெரியநாயகி ஸமேத கற்பகநாதேசுவரர் கோயில். தேவேந்திரன் பூஜை செய்த ஸ்தலம். வெள்ளை விநாயகர் சன்னதி பிரசித்தம். அவர் வீற்றிருக்கும் மண்டபமும், எதிரில் உள்ள பல கணியும், ஒரே கருங்கல்லில் பல சதுரமான துவாரங்கள் கொண்டதாயும், சிற்ப விசேஷங்களுடன் அமைந்திருப்பது மிகவும் அபூர்வமான சித்திர வேலைப்பாட்டைக் குறிக்கிறது. இவ்விதம் எவரும் இக்காலத்தில் செய்ய முடியாதென சொல்லப் படுகிறது.

இக்கோயிலின் பிரும்மோற்சவம் விநாயகருக்குத்தான். விநாயகரை எவரும் தொடககூடாதாம். தேவேந்திரன் இவ் விநாயகரை பூஜித்து, திருவலஞ்சுழி வந்த காலத்தில் அமிருத திரளால் உண்டான விநாயகமூர்த்தி அங்கேயே நின்று விட்ட தாயும் சொல்கிறார்கள். காவேரி துவாரத்தில் சென்று வெளிப் படாமல் போகவே ஏறண்ட முனிவர் தீர்த்தம் வெளிப்படும் நிமித்தம் தன்னையே பலிகொடுத்துக்கொண்டு, காவேரி வெளிப் படும்படி செய்தார் என்றும், வெளிவந்த காவேரி வலமாக சுழித் துக்கொண்டு சென்றதாகவும், அதனால் திருவலஞ்சுழி எனப் பெயர் உண்டானதாயும் ஸ்தல புராண வரலாறு. ஏறண்டமுனி வரின் உருவம் கோயிலில் இருக்கிறது. அவருக்குப் பக்கத்தில் வலஞ்சுழி நாதர் என்ற லிங்கமும், பெருமாளும் உள்ள சன்னதி இருக்கிறது. சம்பந்தர், அப்பர் பதிகங்கள் உள்ளன.

*சுந்தரப்பெருமாள் கோவில்:* தென்கரை 2 மைல்.

இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். விஷ்ணு ஸ்தலம் முடிகொண்டான் நதி இந்த ஊருக்கு மேல்புறம் பிரிந்து கிழக்கு முகமாய் ஓடி திருமலைராஜன் பட்டினத்தில் ஸமுத்திரத்தில் ஸங்கமம்.

*சௌந்திரராஜப் பெருமாள்* : இந்த க்ஷேத்ரம் அரிசொல லாற்றுக்கு தென்புறம் உள்ளது. காவேரி அரை மைல் தூரத்தில் வடபுறம் ஓடுகிறது.

*திருப்பாலைத்துறை:* தென்கரை 2½ மைல்.

'தாளாம்பாள்' ஸமேத பாலைவனநாதர் கோவில் உள்ளது. தாருகாவன ரிஷிகள் அனுப்பிய புலியைக்கொன்று அதன் தோலைத் தரித்துக்கொண்ட ஸ்தலம். பிரும்மா பூஜித்த ஸ்தலம், பிர்மஹ தீர்த்தம் என்ற புஷ்கரணி உள்ளது. அப்பர் பதிகம் பாடியுள்ளார். இந்த ஸ்தலத்தில் அர்ஜுனன், பிரமன், அஷ்டதிக் பாலகர்கள், முனிவர்கள் ஈசனை பூஜித்துள்ளார்கள்.

*பாபவிநாசம்:* தென்கரை. 1 மைல்.

இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். இதைச் சேர்ந்த "வெங்காரம்பேட்டை"யில் 108 சிவாலயம் என்ற ஒரு பெரிய சிவாலயம் உள்ளது. ஸ்ரீ ராமர் பூஜை செய்த ஸ்தலம். ஸ்ரீ பர்வத ராஜபுத்ரீ ஸமேத இராமலிங்கேசுவரர் ஆலயம். ஸ்ரீ ராமதீர்த்த புஷ்கரணி இருக்கிறது. கரதூஷண வதத்தினால் ஏற்பட்ட தோஷத்தை இராமன் இங்கு 108 லிங்க பிரதிஷ்டை செய்து நீக்கிக் கொண்டதாய் ஸ்தல புராணம் சொல்கிறது.

பங்கஜவல்லி ஸமேத ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஆலயமும் இருக்கிறது.

*சக்காரப்பள்ளி:* தென்கரை. 4½ மைல். காவேரியின் கிளை நதியாகிய குடமுருட்டியாற்றின் தென்கரை. காவேரி ½ மைல் தூரம் வடப்புறத்தில் இருக்கிறது.

இது பெரிய க்ஷேத்ரம். அப்பர், சம்பந்தர் பாடல் பெற்ற ஸ்தலமாகும்.

மிக வரப் பிரஸாதியான ஜலந்திரன், சிவனால் ஏவப்பட்ட சக்கரத்தினால் கழுத்து அறுபட்டு மாண்டான்.

அந்தச் சக்கரப் படையை மகாவிஷ்ணு சிவபெருமானை பூஜித்துப் பெற்றார்.

இந்த க்ஷேத்திரத்தின் சப்த ஸ்தலங்கள்: சக்கராப்பள்ளி, அரிச்வரம், சூலமங்கலம், நந்தீசுவரம், பசுபதிகோவில், தாழமங்கை, திருப்புள்ளமங்கை.

*சூலமங்கலம்:* தென்கரை. 1 மைல் (காவேரியின் கிளை நதி குடமுருட்டியின் தென்கரை.) திரிசூலம் என்ற அஸ்திர தேவர் தவமசெய்து, வேங்கடன் என்ற குளத்தை உண்டு பண்ணினார். அதன் பக்கத்தில் சிவபெருமானை பல நாள் பூஜை செய்தார். சிவபெருமான் இவர் முன் தோன்றி சக்தியையும் பெருமையையும் அருளினார். தான் எண்ணியபடியே சிவபெருமானின் கையில் சூலமாக பதவியேற்றார்.

திரிசூலரின் வேண்டுகோளின்படி இக்குளத்தில் மேல் கரையில் ஸ்நானம்செய்து ஈசனை தரிசிப்பவர்கள் முக்தி பெறுவர் என வரனும் கொடுத்து அருளினார். மாசிமாதம் ஸப்த மூர்த்திகளும் இங்கு தீர்த்தம் கொடுப்பது வழக்கம்.

இக்குளக்கரையில் பரத்வாஜமுனிவர் தவமிருக்கையில் ஒரு பேய் அழுவதைக் கேட்டு, மனமிரங்கி இக்குளத்தின் ஜலத்தை தெளித்தார். அக்ஷக்ஷணம் பேய் உருவம் நீங்கி முனிவரின் முன் ஒரு வாலிபன் நின்றான். அவ்வாலிபன், தனக்கு குருவின் பசுவை அடித்ததால் ஏற்பட்ட பேய் உருவ சாபம் நீங்கியதற்கு முனிவரின் கருணையை புகழ்ந்தான். முனிவர் அவனை சூலதீர்த்தத்தில் மூழ்கும்படி செய்ய, அவன் அப்படியே செய்தவுடன் சிவகணங்களில் ஒன்றாக விளங்கினான்.

*பசுபதி கோவில்:* தென்கரை 1½ மைல். கிளை நதி. இவ்வூரை திருப்புள்ளமங்கை என்றும் சொல்வார்கள். பாடல் பெற்ற ஸ்தலம். பால்வளை நாயகி ஸமேத பசுபதி நாதர் கோயில்.

காமதேனு என்பவள் தேவதாதீர்த்தத்தில் முழுகி அதன் தென்மேற்கு கரையில் உள்ள கௌதமரை வணங்கி சிவபூஜை செய்ய கற்பிக்கும்படி வேண்டினாள். அவர் முதலில் காமதேனுவை பூஜைசெய்து விட்டு அவள் கால் குளம்பில் ஒரு தீர்த்தம் உண்டாக்கி, அதில் அவளை முழுகச்செய்து, அதில் அவள் பாலை நிரப்பி, அவளுடைய சாணத்தினால் லிங்கம் செய்தார். காமதேனுவை அந்த லிங்கத்தை பூஜிக்கும்படி சொன்னார். அவளும் அப்படியே செய்தாள். பரமசிவன் அவள் முன்தோன்றி தன்னை தரிசிப்பவர்கள் அதிக புண்ணியமடைவார்கள் எனச் சொல்லி மறைந்தார். கோட்செங்கச் சோழனால் இக்கோயில் கட்டப்பட்டது. சிவபெருமான் விஷத்தை தன் நெஞ்சில் நிறுத்திய இடம். சக்ராப்பள்ளி சப்த ஸ்தலங்களில் ஒன்று.

*திருச்சோற்றுத்துறை:* தென்கரை 4½ மைல் (கிளைநதி) பாடல்பெற்ற பெரிய சிவஸ்தலம். அன்னபூரணி ஸமேத ஓதவனேசுவரர் ஆலயம் உள்ளது. இந்திரன், சூரியன் பூஜித்த ஸ்தலம். அருளாளன் என்னும் மறையவன் பசியால் வருந்தும் பொழுது ஸ்வாமி அவனுக்கு அன்னம் அளித்து அருளிய ஸ்தலம். ஞானசம்பந்தர், அப்பர் சுவாமிகள் பாடியுள்ளார்கள்.

*திருக்கண்டியூர்:* தென்கரை 2½ மைல். மங்களநாயகி ஸமேத பிரும்மசிரக்கண்டீசுவரர் கோயில் உள்ளது. பிரும்மா, ஸரஸ்வதி சன்னதி ஸ்வாமி சன்னதிக்கு வடக்கில் இருக்கிறது. மாசிமாதம் 13, 14, 15-ம் தேதிகளில் மூன்று நாட்களில் சாயங்காலம் சூரிய பூஜை நடைபெறும். பிரும்மாவின் சிரஸை சிவன் கொய்த ஸ்தலம். திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்திகள் விசேஷமாக பாடியிருக்கிறார்கள்.

சிவன் கையில் ஒட்டிக்கொண் டிருந்த பிரும்ம கபாலம் இந்த க்ஷேத்திரத்தில் உள்ள கபால தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவுடன் மண்டை ஒரு கையைவிட்டு குளத்தில் விழுந்தது. இந்த க்ஷேத்ரம் *அஷ்டவீரட்டான க்ஷேத்ரத்தில் ஒன்று.*

*அஷ்டவீரஸ்தலங்கள் :*

1. திருக்கண்டியூர் : பிரமன் சிரங்கொய்த்த ஸ்தலம்.
2. திருக்கோவிலூர் : அந்தகாசுரனை ஸம்ஹரித்த ஸ்தலம்.
3. திரு அதிகை : திருபுரத்தை எரித்த ஸ்தலம்.
4. திருப்பறியலூர் : தக்ஷன் சிரங்கொய்த ஸ்தலம்.
5. திருவிற்குடி: ஜலந்தராசுரனை ஸம்ஹரித்த ஸ்தலம்.
6. வழுவூர் : (வைப்பு ஸ்தலம்) யானையை உரித்த ஸ்தலம்.
7. திருக்குறுக்கை : காமனை எரித்த ஸ்தலம்.
8. திருக்கடவூர் : யமனை உதைத்த ஸ்தலம்.

அஷ்டவீரட்டானங்கள் : திருக்கண்டியூர், திருவதிகை, காளையார் கோவில், அகத்தியான்பள்ளி, குறுக்கை, திருக்கடையூர், விற்குடி, குடிக்குளம் (கற்பகனூர் கோயில்.)

இங்கு ஹரன் சாபம் தீர்த்த பெருமாள் ஆலயம் இருக்கிறது. நூற்றெட்டு வைணவத் திருபபதிகளில் ஒன்று. திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற ஸ்தலமாகும்.

*கீழ திருப்பந்துருத்தி:* தென்கரை 1 மைல். இவ்வூரில் தீர்த்த நாராயண ஸ்வாமிகளுடைய சமாதி உள்ளது.

*மேலத் திருப்புந்துருத்தி :* தென்கரை $\frac{1}{4}$ மைல். பாடல் பெற்ற சிவஸ்தலம். சௌந்தரவல்லி ஸமேத புஷ்பவனேசுவரர் கோயில் உள்ளது. இந்த ஸ்தலத்திலுள்ள சிவலிங்கத்தை குறிப்பிட்டபடி உருவாக்க முடியாத ஸ்தபதி அரசனின் தண்டனைக்கு பயந்து தன்னுடைய துருத்தியை சிவலிங்கம்போல் வைத்திருந்தான். அரசன் வந்து பார்த்த சமயத்தில் அத்துருத்தி உண்மையான சிவலிங்கமாகக் காணப்பட்டது. அன்றுமுதல் இத்தலத்திற்கு திருப்புந்துருத்தி என்று பெயர் வந்தது.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்தரை சந்தித்த ஸ்தலம். ஞானசம்பந்தரைக் காணவேண்டி சிவன் நந்தியை

விலகச் சொல்ல, நந்தியும் கொஞ்சம் தெற்கில் விலகி நின்ருர். திருஞான சம்பந்தரைக் கண்டு மகிழ்ந்தார். இந்திரன், காசியபர், பல முனிவர்கள் தர்சனம் செய்த திவ்ய ஸ்தலம். அப்பர் ஸ்வாமிகள் ஒரு மடம் கட்டி, பல திருத்தாண்டகங்களும், பதிகங் களும், திருவங்கமாலே, பல திருப்பதிகங்கள் பாடிய அருமையான க்ஷேத்ரம்.

*திருவாலம்பொழில்* : தென்கரை 1½ மைல். (கீ.ஜோ) ஞானம்பாள் ஸமேத ஆத்மநாதேசுவரர் கோயில் உள்ளது. பாடல பெற்ற ஸ்தலம் சன்னதியின் 'திருப்பாற்குடம்' என்ற பெரிய தாமரை தடாகம் உள்ளது. ஸ்தல விருக்ஷம் ஆலமரம். அனந்தன், வாஸுகி, நாகர்கள், அஷ்டவசுக்கள் பூஜித்த ஸ்தலமாகும்.

*நடுக்காவேரி* : தென்கரை 2 மைல். சௌந்தர்ய நாயகி ஸமேத ஹரிபிரும்மேசுவரர் ஆலயம் உள்ளது. சத்யாஷாடர் என்ற ரிஷி இங்கு பூஜித்தார். அவர் சூத்திரத்தைச் சேர்ந்த பிராமணர்கள் இங்கு வசிக்கிருர்கள்.

*வரகூர்* : தென்கரை 2½ மைல். ஆனந்தவல்லி ஸமேத கைலாசநாத ஸ்வாமி கோயில் உள்ளது. ஸ்ரீவெங்கிடேசப் பெருமாள் ஆலயம் அக்ரஹாரத்திற்கு மத்தியில் உள்ளது. இங்கு உறியடி உற்சவம் பிரபலமானது. தீர்த்த நாருயணஸ்வாமியை இங்கு பெருமாள் பன்றி உருக்கொண்டு வழிகாட்டி அழைத்து வந்து மறைந்து அருளிய ஸ்தலம்.

இக் கோயிலின் மூலஸ்தானப் பெருமாள் லக்ஷ்மி நாருயணர் என்று பெயர். ஸ்ரீ வெங்கிடேசர்தான் பன்றி உருவம் எடுத்து வந்தவர். தீர்த்த நாருயண சுவாமிகள் கட்டளேயின் பேரில், கிருஷ்ணலீலா தரங்கிணி என்ற சங்கீத சாஹித்யம் பொருந்திய கிரந்தத்தை பக்தி பெருகும்படி எழுதிஞர்.

*ஈசுவரன் கோயில் பத்து*: தென்கரை 1 மைல். இங்கு மீஞக்ஷி சுந்தரேசுவரர் ஆலயம் உள்ளது. பிரும்மா, கிருத யுகத்திலும், ரிஷிகள் துவாபர யுகத்திலும், சந்திர ரேகை என்ற தாசி கலி யுகத்திலும் ஈசுவரனே பூஜித்தார்கள். சோமாஸ்கந்த மூர்த்திக்கு அபிஷேகம் செய்யுங் காலத்தில் சந்திர ரேகை தெரிய வரும். எதைப் போட்டு துலக்கிஞலும் அந்த ரேகை மாறுகிற தில்லே.

*கண்டமங்கலம்*: தென்கரை 1 மைல். ராஜராஜேசுவரி ஸமேத கைலாசநாதேசுவரர் கோவில் உள்ளது.

*திருக்காட்டுப்பள்ளி - ஓம்பத்துவேலி:* தென்கரை. 1½ மைல். இதை மேலத் திருகாட்டுப்பள்ளி என்பர். அக்னீசுவரர் ஆலயம் உள்ளது. தீயாடியப்பர் சுவாமி வார்கொண்ட முலை அம்மை.

ஞானசம்பந்தர், திருநாவுக்கரசு பதிகங்கள் பாடியுள்ளார்கள். இங்கு ஸ்தல விருக்ஷம் வன்னி. சோழராஜனுடைய மூத்தமனைவி மலரால் பூஜித்ததால் கானல் வெப்பத்திலிருந்து காப்பாற்றப் பட்டாள். இங்கிருந்து குடமுருட்டியாறு காவேரியிலிருந்து பிரிகிறது. ஓம்பத்துவேலி இதைச் சேர்ந்த கிராமம்.

ஆனந்தவல்லி ஸமேத கைலாசநாதர் கோயில் இருக்கிறது.

*நேமம்:* தென்கரை 2 மைல். அலங்காரி அம்மாள் ஸமேத ஐராவதேசுவரர் ஆலயம் இருக்கிறது.

வைஷ்ணவ கோயிலும் உண்டு. ஸ்கந்த சஷ்டி உற்சவம் நடைபெறுகிறது.

ஊர்வசி சாபம் தீர்ந்த இடம். இந்திரன் பூஜித்த ஸ்தலம். திருநாவுக்கரசு வைப்பு ஸ்தலம்.

*கல்லணை:* 5 மைல். காவேரி தீரத்தின் வடகரையில் ஆரம்ப ஸ்தலம் பார்க்கவும்.

# காவேரி தீர தென்புற க்ஷேத்திரங்களின் வரிசைக் கிரமம் 21 .

## கல்லணையிலிருந்து ஆரம்பித்து மேற்கு திசையில் காவேரி தீரத்திலமைந்துள்ள க்ஷேத்திரங்களின் வரிசை

(*திரிச்சிராப்பள்ளி ஜில்லா*)

***உறையூர்***: தென்புறம்: 12 மைல். திரு உறைந்த காரணத்திஞல் உறையூர் எனப்பெயர். தர்மவாமாவின், தர்மபத்தினியான நிசுளே என்பவளது பெயரால், வழங்கப்பட்ட 'நிசுளாபுரி' எனவும் பெயர் கொண்டஸ்தலம்.

ஒருசமயம் பிருகுமஹரிஷியால் சபிக்கப்பட்ட லக்ஷ்மி சோழமன்ஞராகிய தாமவர்மாவுக்கு சித்திரைமாதம், உத்தர நக்ஷத்திரத்தில் புதல்வியாகப் பிறந்து, வாஸலக்ஷ்மியெனப் பெயர் பெற்று, அரங்கநாதரை மணந்து கொண்டதாக புராண வரலாறு. பங்குனி மாதம் ஆதிபிரும்மோத்ஸவத்தின் ஆருந்திருநாளன்று, ஸ்ரீ ரங்கஞதர் இத்தலத்திற்கு வந்து வாஸலக்ஷ்மியுடன் திருககல்யாணம் நடத்திக்கொள்வது இன்றும் வழங்கிவருகிறது. அழகியமணுளனே மணந்தமைபற்றி இங்கு உத்ஸவப் பெருமாள்கிடையாது. மூலவராகமட்டும் மணவாளப் பெருமாள் எழுந்தருளியிருக்கிருர். உறையூர் வல்லிநாச்சியார் என, லக்ஷ்மிதிருக்கோலம் கொண்டிருக்கிருள்.

உறையூர் ஒரு சமயம் சோழ அரசர்களுக்கு இராஜ தானியாவும் இருந்தது.

இங்கு திருமுக்கீசுவரம் என்னும் சிவக்ஷேத்ரம் உள்ளது. உறையூர் பெரிய திருமொழியிலும், பெருமாள் திருமொழியிலும், மற்ற சிலப்பதிகாரம் முதலான நூல்களிலும், இத்தலம் 'கோழி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முன்காலத்தில் ஒரு கோழி ஒரு யானையைப் போரில் வென்றமையால் இதற்கு இப்பெயர் வந்தது. பஞ்சவர்ணேசுவரர் ஆலயம் இருக்கிறது.

*தோகூர். தென்கரை*: *1½மைல்*. இவ்வூருக்கு கிழக்கே ¼ மைல் தூரத்தில் விண்ணுறு பிரிகிறது. இங்கு காவேரியும் கொள்ளிடமும் ஒன்று சேர்ந்து மறுபடியும் பிரிகிறது.

இங்குஹனுமார், சிவன், விஷ்ணு ஆலயங்கள் உள்ளன.

*திரிசிரபுரம்*: தென்கரை: 1மைல். திரிசிரன், கரன் தூஷணன் ஆகிய மூவர் பூஜைபண்ணியஸ்தலங்களும் மூன்று, திரிசிரபுரம்லே, ஈயக்கொண்டான்மலே-திருவெறும்பியூர்.

*திரிசிரமலே*: திரிசிரன்பூஜை செய்த ஸ்தலம். மத்தியில் ஜவந்திமாமுனிவர் பூஜைபண்ணிக்கொண்டிருக்கிருர். மலேயடி வாரத்திலும், உச்சியிலும் பிள்ளேயார் அமர்ந்திருக்கிருர். பல்லவகுகைகளும், சிறந்த கற்றூண் மண்டபங்களும் உள்ளன.

தாயின் உதவி பெறமுடியாத ரத்னுவதி என்ற பக்தைக்கு பிரசவகாலத்தில் தாய்போல் உருவந்தாங்கி ஆதரித்த சிவபெருமானுக்கு தாயுமானவர் எனப்பெயர். அம்பாள் ஸுகந்த குந்தளாம்பாள் அல்லது மட்டுவார் குழலம்மை எனப் பெயர். தாயுமானவர் கோயில் குன்றின் மத்தியபாகத்தில் அமைந் திருக்கிறது.

சாரமா முனிவர் பூஜைக்காக வைத்த நந்தவனத்திலுள்ள, ஜவந்தி என்னும் சௌகந்தி புஷ்பங்களே சோழராஜன் திருடியதால் மண்மாறிபெய்யும்படி சபித்தார். மாதுர்பூதேசுவரர் சோழராஜன் பத்தினிக்காக மனம் இரங்கி மேற்கு முகமாகத் திரும்பினுர். மேற்கே நாகநாதஸ்வாமி கோவிலும், பூலோகநாத சுவாமி கோயிலும், தெற்கே கைலாஸநாதஸ்வாமி கோயிலும் இருக்கின்றன. மேற்குப்புறம் நந்தி ஆலயம் உள்ளது.

*முத்தரசநல்லூர்*: தென்கரை 5 மைல் ஆரான ஈசுவரி ஸமேத ரத்னகிரீசுவரர், விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர், ஸ்ரீ மீனுக்ஷி ஸமேத சுந்தரேசுவரர் ஆலயங்கள் உள்ளன. முத்தரசன் என்ற அரசனுக்கு, காலக்கடம்பர் சொக்கர், திருவீங்கினுதர் இம்மூவரும் அவனுடைய பக்திக்காக இவ்வூரில் தரிசனம் தந்தஸ்தலம். ரயில்வேஸ்டேஷன். திருச்சி—ஈரோடு ரயில் மார்க்கம்.

*ஜீயபுரம்*: தென்கரை: 3 மைல் வருஷத்திற்கு ஒரு முறை ஸ்ரீ ரங்கனுதர் இந்த ஸ்தலத்தில் தங்கிப்போவதுண்டு. ரயில்வே ஸ்டேஷன்.

*அந்தநல்லூர்*: தென்கரை 1½ மைல். இந்த ஸ்தலத்தை திரு ஆலந்துறை என்றும் சொல்வது உண்டு. பாலாம்பாள் ஸமேத வடதீர்த்த நாதர்கோயில் உள்ளது. திருநாவுக்கரசு நாயனுர் பாடியஸ்தலம்.

*கொடியாலம்:* தென்கரை. 2 மைல். ரங்கநாயகி ஸமேத ரங்கநாதர் ஆலயம் இருக்கிறது.

*இலமனூர்—முக்கொம்பு:* தென்கரை. 2 மைல். இலமனூர் ரயில்வேஸ்டேஷன். இங்கிருந்துபடகிலேறி முக்கொம்புக்குப்போய் நீராடி திரும்புவார்கள். காவேரியும் கொள்ளிடமும் பிரிகின்றன. பிரிகின்ற இடத்தில் கையைத்தூக்கிநிற்கும் ஹனுமார் ஆலயம் உள்ளது. இங்கிருந்து ஸ்ரீரங்கத்தீவு ஆரம்பமாகிறது. தீவிற்கு வடபுறம் கொள்ளிடககாவேரி யென்றும், தெற்குப்புறம் காவேரியென்றும் சொல்வார்கள். ஆடி அமாவாசை ஸ்நானம் முக்கியம்.

*திருப்பராய்த்துறை:* தென்புறம். 1 மைல். அகண்ட காவேரி தீரம். இந்திரன், குபேரன், ஸப்த ரிஷிகள் பூஜித்தஸ்தலம். ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் இவர்கள் பதிகங்கள் உள்ளன. துலாஸ்நான விசேஷம். ரயில்வேஸ்டேஷன் உளது. இவ்விடத்தில் இப்போது ஸ்ரீராமகிருஷ்ண மிஷினில் ஒரு ஆச்ரமம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அம்மடத்தைச் சேர்ந்த கல்விச்சாலைகளும் உள்ளன.

*பெருகமணி:* தென்புறம். 2 மைல். ரயில்வேஸ்டேஷன். வெங்கிடரமணஸ்வாமி ஆலயம், கற்பகாம்பாள் ஸமேத வத்ஸலே சுவரர் ஆலயமும் உள்ளன. இவ்வூருக்கு தெற்கில் நங்கபுரம் என்னும் இப்பக்கத்தில் பிரபலமான ஒரு குடும்பமிருக்கிறது.

*பெட்டவாய்த்தலை:* தென்புறம். 2 மைல். அகண்ட காவேரி தீரம்: அபீத குசாம்பாள் ஸமேத மத்யார்ஜுனேசுவரர் கோயில் இருக்கிறது.

*மருதூர்:* தென்புறம். 2 மைல். ரயில்வேஸ்டேஷன். வியாபார ஸ்தலம்.

*குமாரமங்கலம்:* தென்புறம். 3 மைல் ஸ்ரீநிவாஸப்பெருமாள் ஆலயம், சுப்ரமண்யர் ஆலயம் சமீப காலத்தில் புதுப்பிக்கப் பட்டுள்ளன.

*ராஜேந்திரம்:* தென்புறம். 1 மைல். புராண பிரஸித்தியுள்ள சிவாலயம் இருக்கிறது.

*குழித்தலை—வைகநல்லூர்:* தென்புறம். 3 மைல். இந்த இரண்டு ஸ்தலங்களும் சேர்ந்தாற்போல் அமைந்துள்ளன. குழித்

தலைக்கு கடம்பன் துறையென்றும், கடம்பர் கோயில் என்றும் பெயர் உண்டு.

*ரயில்வேஸ்டேஷன்:* திருச்சி- ஈரோடு மார்க்கம். கடம்பந் துறை மேற்கு எல்லையில் உள்ளது. கடம்ப விருக்ஷம் ஞானகூபம் உள்ளன. ஸோமவாரத்தில் காலையில் கடம்பரையும் மத்யானத் தில் ரத்னகிரீசுவரரையும், சாயங்காலத்தில் திருஈங்கோய்மலை மரகதேசுவரரையும், அர்த்தயாமத்தில் ஸிம்ம புரீசுவரரையும் தர்சனம் செய்வது மிகவும் விசேஷம். கண்வருக்கு கடம்ப மரத்தடியில் ஈசன் தரிசனம் கொடுத்தார்.

ரத்னகிரீசர் அல்லது திருவாட் போக்கிஸ்தலம் இங்கிருந்து சுமார் 5மைல்கள் தெற்கேயுள்ள ஸ்தலம். மலைமேல் கோவில் உள்ளது. சுவாமி ரத்னகிரீசுவரர்: அம்பாள்: அரும்பார் குழலம்மை: சுவாமிக்கு மத்யான்னசுந்தரர் அல்லது சொக்கர் என்று பெயர். இந்திரன், ஜயந்திரன், வாயு, ஆதித்தியன் ஆகியோர் பூஜித்தஸ்தலம்.

இத்தலத்தில் ஒரு ஆரிய தேச அரசனுக்கு 'ரத்னம்' அளிக் கப்பட்டது. வேம்புமரம், ரத்ன கிரீடர், வீரபாகு இவர்களின் தரிசனம் முக்கியம். அகஸ்தியர் மத்யான்னத்தில் மத்யானச் சொக்கர் என்றும், முடித்தழும்பர் என்றும் பெயருண்டு. ஆதி சேஷனுக்கும், வாயு தேவருககும் உண்டான போரில் வாயுதேவர் மேருமலையிலிருந்து வெளிப்படுத்திய ஒரு முடி இந்த மலை யென்றும், இதில் நாகம் ஏற முடியாதென்றும் புராணக் கதை வழங்குகிறது. பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இடி அபிஷேகம் நடைபெறுகிறது.

*கருப்பத்தூர்:* தென்கரை. 4½ மைல். இது பெரிய க்ஷேத்ரம். இங்கு ஒரு பிராம்மணனுக்கு பிரும்மஹத்தி தோஷம் நீங்கிற்று. மகாவிஷ்ணு ஹிரண்யகசிபுவை வதம் செய்த தோக்ஷம் இங்குதான் நீங்கியது. மகாவிஷ்ணுவின் ஞாபகார்த்தமாக ஸ்வாமிக்கு ஸிம்மபுரீசுவரர் என்றும், ஈசுவரன் கருணை நிறைந்த வராய், பிரும்மஹத்தி என்ற கருப்பை விஷ்ணுவினிடமிருந்தும், பிராமணனிடமிருந்தும் விலக்கியதால், இந்த க்ஷேத்ரத்தை கருப்பத்தூர் என்றும் வழங்குகின்றது. மகாவிஷ்ணு பாலயோக வடிவில் நரஸிம்ம உருவமடைந்து திகழ்கின்றூர். மகாவிஷ்ணு கருப்பத்தூருக்கு வரும்பொழுது மகாகணபதி தன் மாமாவாகிய நரஸிம்மமூர்த்தியை வரவேற்று அவரிடம் சிவ தத்துவத்தை, துதிக்கையை வலது புறமாக வைத்துக்கொண்டு உபதேசித்ததாக

ஐதீகம். விநாயகரும் அந்தக் கோலத்துடன் வலஞ்சுழிப் பிள்ளை யாராகக் காணப்படுகிறார்.

இங்கு ஸுகந்தகுந்தளாம்பாள் ஸமேத பச்சாதாபேசுவரர் அல்லது ஸிம்மபுரீசுவரரை இந்திராணி அர்ச்சித்ததாகச் சொல்லப்படுகிறது. இந்திராணி கர்வபங்கம் அடைந்த ஸ்தலம். இந்திராணி அர்ச்சனை செய்த புஷ்பங்கள் மஞ்சள் குவியலாய் மாறுதல் அடைந்தனவாம். யாத்ரிகர்கள் இன்றும் இங்கு மஞ்சள் பிரசாதம் பெற்றுப்போவது வழக்கம். இந்த க்ஷேத்ரத்தில் அர்த்தஜாம தரிசனம் விசேஷம்.

வித்யாதரன் என்ற அந்தணன் தன் இறந்துபோன பிதாவின் அஸ்திகளை ஒரு பானையில் அடைத்து கங்கா யாத்ரை செய்யும் வழியில், ஓர் இரவு இங்கு தங்கும்படி நேர்ந்தது அதை காவேரி மணலில் புதைத்து வைத்து, மறுநாள் காலையில் திறந்து பார்க்கையில் அஸ்திகள் புஷ்ப மலர்களாக மாறியிருந்ததைக் கண்டு, அசரீரி வாக்கை ஒட்டி இந்த ஸ்தலத்திலேயே கிரியைகளை செய்து முடித்தான்.

காவேரி கங்கையைக் காட்டிலும் அதிகப் புனிதமானது என்பது நிதர்சனமாயிற்று. இங்கு ஸ்நானம், தர்சனம் வெகுவாய் போற்றப்படுகின்றது.

*மஹாதானபுரம்* : தென்கரை. 4 மைல். இங்கு சிவ, விஷ்ணு ஆலயங்கள் உள்ளன. வேதபாடசாலை இருக்கிறது. ஒரு ரயில்வே ஸ்டேஷன்.

*சித்தலவாய்* : தென்கரை. 3 மைல். ஒரு ரயில்வே ஸ்டேஷன், இவ்வூரை கிருஷ்ணராஜபுரம் என்றும் சொல்வதுண்டு இங்கு வேதாத்யயனம் செய்தவர்களும், சாஸ்திரக்ஞர்களையும், யக்ஞதீக்ஷை கொண்டவர்களும் கொண்ட பெரிய அக்ரகாரம் உளது. மதுகரவேணி ஸமேத மாஸிசுவர ஸ்வாமி கோவில் உள்ளது. மைசூர் மன்னர் இந்த ஊரில் வசித்தபடியால் கிருஷ்ண ராஜபுரம் எனப் பெயர் வழங்கலாயிற்று. மன்னரால் கோயிலுக்கு சாயந்திர பூஜைக்கென மான்யம் விடப்பட்டுள்ளது. கோபால கிருஷ்ணன் கோயிலும் இருக்கிறது.

*திருமுக்கூடல் - கட்டளை* : தென்கரை. 8 மைல். இவ்விடம் அமராவதி காவேரியில் ஸங்கமம், ஸ்நானம் விசேஷம். அகஸ்தியரால் பூஜிக்கப்பட்ட அகஸ்தீசுவரர் ஆலயம் இருக்கிறது. கட்டளை, ஸ்டேஷனுக்கு 1 மைல் தூரம் உள்ளது. காவேரி

½ மைல் தூரத்தில் இருக்கிறது. காவேரிக்கரை ஓரமாயுள்ள ஊருக்கு *மதுக்கரை* எனப்பெயர். இந்தவிடம் சேர, சோழ, பாண்டிய நாடுகளின் எல்லை ஸ்தானம். இங்குள்ள செல்லாண்டி அம்மன் மூன்று ராஜேந்திரர்களுக்கும் குலதெய்வம். பூர்வ காலத்தில் மீனாக்ஷி கோவிலுக்கு திருமஞ்சனம் இந்தத் தலைப்பி லிருந்து கொண்டு போவது வழக்கமாம். 'மதுரைககரை' என்பது மதுக்கரையென மருவி வழங்குகிறது.

*நெரூர்* : தென்கரை 4 மைல். காவேரி தக்ஷிணவா; கரூர் ஸ்டேஷனில் இறங்கி பஸ் மூலம் சுலபமாய் செல்லலாம். 8 மைல் தூரம் உள்ளது. விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர் ஆலயமும், ஸதாசிவ பிர்மேந்திராள் சமாதி, சுவாமி சன்னதியின் பின்புறமும் உள்ளன. ஸமாதி வில்வ மரத்தடியில் இருக்கிறது. திருப்புகழ் பாடியுள்ள சுப்ரமண்ய ஸ்தலங்களில் ஒன்று. இவ்வூரை நேரூர் என்றும் சொல்வதற்கு காரணம் உண்டு. தஞ்சை ஜில்லாவிலுள்ள சுவேதாரண்ய ஸ்தலம் இங்கிருந்து நேர் கிழக்காக அமைந்திருப்பதால் எனக் கூறுவார்கள். திருவெண்காட்டில் ஸதாசிவ பிரமேந்திராள் குருவான ஸ்ரீகாமகோடி பீடாசாரியாள் அதிஷ்டானம் மேற்கு பார்த்து உள்ளது. நத்தம் ஸ்ரீகிருஷ்ண பாகவதர் அவர்களால் ஸதாசிவ பிரும்மேந்திராளின் உற்சவம் ஆரம்பிக்கப்பட்டு இன்றும் நடைபெற்று வருகிறது.

*வாங்கல்* : தென்கரை 3 மைல். கரூர், வாங்கல், நேரூர் என்ற ஸ்தலங்கள் சிவபெருமானின் முக்கண்கள் போல் அமைந் துள்ளன. நேரூர் நெற்றிக் கண்ணின் ஸ்தானத்தைப் பெற்றுள்ளது.

## சேலம் - கோயம்புத்தூர் ஜில்லாக்கள் தென்புறம் - வரிசையில் அமைந்துள்ள முக்கிய க்ஷேத்திரங்கள் - 14

*நொய்யல்* : தென்புறம் புஞ்சைபுஹலூரிலிருந்து 8 மைல் இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். நொய்யல் நதி ஸங்கமம். சிவன் கோயிலும் விஷ்ணு கோவிலும் உள்ளன.

*கொடிமுடி* : தென்புறம் 8 மைல். இவ்வூர் வரையில் காவேரி தெற்கு முகமாய் வந்து, பிறகு கிழக்கு முகம் திரும்பு கிறது. ஒரு பெரிய க்ஷேத்ரம். இந்த ஸ்தலததை கரையூர் என்றும், பாண்டிக் கொடிமுடி என்றும் சரித்திர பிரசித்தி



கொடுமுடி—காவேரியும் கோவிலும்



பவானி கூடல்

பெற்றது. தேவாரப் பாடல் பெற்றுளது. மும்மூர்த்தி ஸ்தலம். பரமசிவன் 'முகுடேசுவரர்' என்றும், விஷ்ணு ரங்கசாமி என்றும், பிரும்மா ஒரு மரரூபியாகவும் விளங்குகிறார்கள். ஸ்தல விருக்ஷம் வன்னிமரம். இங்கு ஸ்வயம்பு லிங்கம். சுந்தரமூர்த்தி நாயினார் நமச்சிவாயப் பதிகம பாடின ஸ்தலம். ஞானசம்பந்தரும், அப்பர் சுவாமிகளும் பதிகம் பாடியுள்ளார்கள். காவேரிக்கு மத்தியில் ஒரு பாறையின்மேல் அகஸ்தியர் காவேரியை ஒரு குடத்தில் வைத்திருந்ததை ஒரு காகம் கவிழ்த்து விட்டதாக ஒரு கற்சித்திரம் காணப்படுகிறது. அதனால்தான் காவேரி கிழக்கு முகமாய் திரும்புவதாய் ஜனங்கள் சொல்கிறார்கள். பழனி திருமஞ்சன தீர்த்தம் இங்கிருந்து கொண்டு போவதுண்டு.

*ஊஞ்சலூர் :* தென்புறம் 2½ மைல். கொடிமுடியில் உள்ள அம்பாள் இந்த விடத்திற்கு ஊஞ்சல் திருவிழாவிற்கு வருவது வழக்கம். ஊஞ்சல் ஆடுவதால் ஊஞ்சலூர் எனப் பெயர்.

*பாசூர் :* தென்புறம் 11½ மைல். ரயில்வே ஸ்டேஷன். இங்கு காவேரி தெற்கு வடக்காய் செல்கிறது. மீனாக்ஷி சுந்தரேசுவரர் ஆலயமும், காவேரிக்கரை ஓரமாயுள்ள மாநதோப்பில் சங்கிலிக்கருப்பன் ஆலயமும் பிரசித்தி பெற்றவை. மைசூர் மஹாராஜாவால் இந்த இரு கோவில்களுக்கும் நிலங்கள் மான்யமாக விடப்பட்டுள்ளன.

*சாவடிப்பாளையம் :* தென்புறம் 5 மைல். இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். காவேரி கிழக்கு முகமாய் ஓடுகிறது. இவ்வூருக்கு 1½ மைல் தூரத்தில் காவேரி மத்தியில் நட்டாறுமலை என்ற குன்று உள்ளது. அக்குன்றின்மேல் நட்டாத்தீசுவரர் என்று பெயர்கொண்டு அகஸ்தீசுவரர் ஆலயத்தில் விளங்குகிறார். அகஸதியரால் பூஜிக்கப்பட்டது. ருத்ராக்ஷ குவியலிலிருந்து தானாக ஆவிர்ப்பவித்ததாய் ஐதீகம்.

*ஊத்துக்குழி :* தென்புறம் 3 மைல். ஒரு ரயில்வே ஸ்டேஷன், சிவன், விஷ்ணு கோயில்கள் உண்டு.

*ஈரோடு :* தென்புறம் 6½ மைல். இது ஒரு நகரம். பெரிய ரயில்வே ஜங்ஷன். பெரிய வியாபார ஸ்தலம். இது வரையில் பாறைகளின் மத்தியில் வந்த காவேரி மணற்பாங்கான பிரதேசத்தை அடைகிறது. அக்ரஹாரத்தின் மத்தியில் விசாலாக்ஷி ஸமேத விசுவேசுவரர் ஆலயம் இருக்கிறது.

செல்லாண்டி அம்மன் கோயில் உண்டு. ''காவேரி'' என்ற பெயர் கொண்ட ரயில்வே ஸ்டேஷன் ஒரு மைல்.

*பவானி*: தென்புறம் 10 மைல். பவானி என்ற நதி இவ்விடத்தில் காவேரியில் ஸங்கமம். இவ்வூருக்கு 'திருநணு' என்ற புராணப் பெயர் உண்டு. காவேரி, பவானி, அமுத நதி மூன்றும் இங்கு கூடுவதால், 'திருமுக்கூடல்' என்றும், மற்றும் 'தென்கைலை', 'விக்ரபுரம்' எனவும் பெயர்கள் உண்டு. பராசர க்ஷேத்ரமான இந்த க்ஷேத்ரநாதர் குபேரனால் பூஜிக்கப்பட்டார். அதனால் தக்ஷிண அளகாபுரி என்றும் சொல்வார்கள். இங்கு காயத்ரி ஆலயம் விசேஷம். காயத்ரி படித்துறை ஒன்று உண்டு. இது விசுவாமித்திரரால் கட்டப்பட்டதாம். இந்த இடத்தில் விசுவாமித்திரர் பிரும்மரிஷி பட்டம் பெற்றாராம். மத்ஸ்யாவதாரத்தில் வேதங்களை பாதாளத்திலிருந்து வெளிப்படுத்தி மாறுபட்டிருந்த பாகங்களை சரிப்படுத்தியதும் இங்குதான். இவற்றைத் தவிர, சங்கமேசுவரர் கோயில் மஹாமண்டபம் விசேஷம். வேதநாயகி ஆலயம், ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஸன்னதி, ஸ்ரீ லக்ஷ்மிதேவி ஆலயம், சுப்ரமண்யர் ஆலயம் முதலியவை பார்க்கத்தகுந்தவை. இது சம்பந்தமூர்த்தி பாடல் பெற்ற ஸ்தலமாகும். இந்த க்ஷேத்ரத்தைச் சுற்றி ஐந்து கிரிகள் காணப்படுகின்றன. 1. வேதகிரி (உராச்சிக்கோட்டை) 2. நாககிரி (திருச்செங்கோடு) 3. சங்ககிரி 4. மங்களகிரி 5. பத்மகிரி. இலந்தை விருக்ஷம் ஸ்தல விருக்ஷமாதலால் இதை தக்ஷிண பதரிகாசிரமம் என்றும் கூறுவர். துர்வாஸர் தவம் செய்தபொழுது, சிவபெருமான் 'பவன்' என்ற பெயருடன், அம்பிகையை நதி ரூபமாய் அழைத்துக்கொண்டு அனுக்ரஹம் செய்தாராம். அதனால் இந்த நதிக்கு 'பவானி' என்று பெயர் வழங்கலாயிற்று.

## கீழ்க்கண்ட புராண வரலாறு கவனிக்கத்தக்கது.

திருமால் தேவர்களுக்குகொடுத்து மிஞ்சிய அமிர்தத்தை பராசரரிடம் கொடுத்தாராம். முனிவர் குடத்தை ஒரு நதிக் கரையில் வைத்துவிட்டு தவம்செய்தார். அசுரர்கள் அக்குடத்தை கவர்ந்து செல்ல எண்ணினர். இதையறிந்த முனிவர் சிவபெருமானைவேண்ட, அவரும் தனது சக்திஸ்வரூபமாய் விளங்கும் சண்டிகா, திரி, விகாக்ஷி, சலந்தீ என்ற நான்கு துர்க்கா தேவிகளையும் துணைகொண்டு அசுரர்களைக்கொன்றார். நான்கு துர்க்காதேவிகளையும் பவானிக்ஷேத்ரத்திற்கு காவலாக அமைத்தார், அதில் செல்லாண்டிஅம்மன் ஒன்று.

பராசரர் தான்வைத்த அமிர்தகுடத்தை வைத்த் இடத்திலிருந்து எடுக்கமுடியவில்லை. அதனால் அந்த ஸ்தலத்தில் ஆலயம் கட்டி அமிருதலிங்கேசுவரரை பிரதிஷ்டை செய்து பூஜித்தார். இக்கோயில் சங்கமேசுவரர் கோவிலுக்குள்ள தென்மதில் சுவற்றிற்கு அப்பால் 100 அடி உயரமுள்ள விடத்தில் உள்ளது. அமிருதகுடம் பதிந்துள்ள இடத்திலிருந்து அமிர்தநதி உற்பத்தியாகி பவானி, காவேரி நதிகளில் அந்தர் வாஹினியாய் சென்று கலக்கிறது. இதனால் இந்தக்ஷேத்ரம் திருமுக்கூடல் எனப்பெயர் பெற்றுள்ளது.

*உராச்சிக்கோட்டை:* தென்புறம். 2½ மைல். இத்தலத்தில் வேதகிரீசர் கோயில், வேதநாராயணப்பெருமாள் ஆலயங்கள் உள்ளன. இங்கு வேதவியாஸருககு தனிஸன்னதி இருக்கின்றது. 'பவானி' என்ற கிராமம் இங்கு இருந்ததாகச் சொல்கிறார்கள்.

*கிள்ளூர்:* தென்புறம். 10½ மைல். காவேரி பச்சிம வாஹினி. சிவாலயம் உள்ளது. ஸ்நானவிசேஷம்.

*உமாரெட்டியூர்:* தென்புறம். 7 மைல். பாலமலைத் தொடர்ச்சி இவ்வூர் வரையில் வியாபித்திருக்கிறது. இதை சதுர கிரிமலை என்றும்சொல்வார்கள் இம்மலைமேல ஒருஸித்தபுருஷரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு ஆலயம் உள்ளது. அடிவாரத்தில் ஒரு கணபதி சன்னதியும், அதன்பக்கத்தில் 'அன்னப்பாறை' என்ற ஒரு கற்பாறையும், 'தீர்த்தக்கிணறு' என்ற ஒரு கிணறும் உள்ளன. இக்கிணற்று நீரை பஹிஷ்டாஸ்த்ரீகள் தொட்டால் ஜலம் மறைந்துபோகிறது.

மறுபடியும் பூசாரி ஏதோமந்திரம் ஜபித்து ப்ரோக்ஷணம் செய்தால் தான் ஜலம் கிணற்றில் ஊறும். இவ்வூரில் அதிக மழைபெய்தால் எல்லோரும் 'கோவிந்தா' என்று சொல்ல வேண்டும். இல்லாவிடில் ஆபத்துநேரிடும் எனச் சொல்கிறார்கள்.

இவ்வூரில் விஷ ஜந்துக்களும், துஷ்ட மிருகங்களும் இருப்பதால் இரவில் ஒருவரும் வெளியில் படுப்பதில்லை.

*நெரிஞ்சிப்பேட்டை:* தென்புறம் 4½ மைல். காவேரிக் கரையை ஒட்டியுள்ளது. இங்கு காடைய ராஜவேமனபூபதியால் கட்டப்பட்டபழங்கால அணையை காவேரி உடைத்து விட்டதாக ஐதீகம். இத்தலத்தில் ஸ்ரீ வெங்கிடேசபெருமாள், ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி, விசாலாக்ஷி ஸமேத விசுவநாதர் ஆலயங்கள் உள்ளன.

வைசிய ஜகத்குரு திருவாலங்காடு மும்முடி அகோரதர்ம சிவாச்சாரியஸ்வாமிகள் மடம் இங்கு உள்ளது. பாலமலைஸித்

தேசுவரரை தரிசிக்கவரும் ஜனங்கள் சனிக்கிழமை தோறும் காணிக்கைகளுடன் கோவிந்தா 'கோவிந்தா' என்று கோஷித்துக் கொண்டு செல்வார்கள். ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி முன் காலத்தில் பூமியில் புதைந்து இருந்ததாயும், அந்தவிடத்திலிருந்த ஒரு புற்றில் ஒரு பசு தானே பாலைச்சொறிந்து போவதையும் கண்ட இடையன், அங்கு வெட்டிப்பார்க்கும்பொழுது விக்ரகம் தென்பட்டதாயும், பின்னர் புது ஆலயம் ஏறபட்டதாயும் சொல்கிறார்கள். வேணுகோபாலஸ்வாமி சன்னதி முன்புறத்தில் நின்று கொண்டு நதி, குரு, சிவம், விஷ்ணு, கிரி ஐந்தையும் ஏககாலத்தில் தரிசனம் செய்யலாம்.

*பாலாறு சங்கமம்*: தென்கரை. 32 மைல். இங்கு காவேரி ஸ்நானம் விசேஷம். மேட்டூர் அணையினால் தண்ணீர் தேக்கம் இதுவரையில் காணப்படும்.

*ஆலம்பாடி*: தென்கரை 11 மைல். காவேரி தெற்குநோக்கி ஓடுகிறது. இந்த ஸ்தலம் காவேரியின் மேற்குக் கரையில் அமைந்திருக்கிறது. புராதனக்கோட்டையும் இருக்கிறது.

காவேரி இவ்விடத்தில் மத்யரங்கம் என்று பெயருடைய பாரதவாஜ ஆசிரமத்தை அடைந்தாள். இங்குள்ள மலைகள் காவேரி பிரவாஹத்தை தடை செய்தன. காவேரி அவ்விடத்தி லுள்ள ஒரு ஆலமரத்தடியில சில மகரிஷிகள் தபசு செய்துகொண் டிருப்பதைக் கண்டாள். அந்த விருக்ஷமும் பிரவாஹத்தைத் தடுத்தது.

அவளால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட மகாவிஷ்ணு காவேரிக்கு போதுமான சக்தி கொடுத்து தடையாயிருந்த மலைப் பாகங்களை பெயர்த்து எடுத்துச் சென்றார்.

பகவானை அவள் இவ்வாறு வேண்டிக் கொண்டாள். "தாங்கள் கருணைகொண்டு இந்த பரத்வாஜ ஆசிரமத்திற்குப் பக்கத்தில் ஒரு நகரத்தை நிர்மாணம் செய்து, தாங்களும் அரங்க நாதராய் விளங்க வேண்டும்" என.

மகாவிஷ்ணுவும் சேஷசாயியாக இருந்து இன்றும் காக்ஷி யளித்து வருகிறார். ஸ்ரீரங்கநாதர் கோயிலை பெருமாள் கோயில் என்று சொல்கிறார்கள்.

*கொள்ளேகாலம்:* தென்கரை. 50 மைல். ஒரு பிரபலமான வியாபாரஸ்தலம். இது மைசூர் ராஜ்யத்திற்கு கிழக்கு எல்லை யாகவும், கோயம்புத்தூர் ஜில்லாவிற்கு மேற்கு எல்லையாகவும் இருக்கிறது. இதற்கு-ககோள காலவ க்ஷேத்ரம் என்று பெயர்.

குடகு: மைசூர் ராஜ்யம் தென்கரை.

• காவேரி பிரதக்ஷண விதியில் – காவேரி சங்கம கட்டத்திலிருந்து மேற்கு நோக்கி தலைக்காவேரி வரையில் காவேரி தென்கரையில் அமைந்துள்ள க்ஷேத்ரங்களின் வரிசைக் கிரமம். ஆரம்ப க்ஷேத்திரம் தொடங்கி அடுத்தடுத்த க்ஷேத்ரம் எவ்வளவு மைல் தூரத்தில் உள்ளது என்பதை ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் முன்புறம் குறிக்கப் பட்டிருக்கிறது.

1. தஞ்சை ஜில்லா—38
2. திருச்சி ஜில்லா—21
3. கோயம்முத்தூர் - சேலம் ஜில்லாக்கள்—14
4. மைசூர் ராஜ்யம்—27
5. குடகு பிரதேசம்—4

மைசூர் ராஜ்யம் - காவேரி தென்கரை மார்க்கம் தலைக்காவேரியை நோக்கி பிரதக்ஷிண விதியில் உள்ள க்ஷேத்ரங்களின் வரிசை:—

*சத்யாகலம்*: தென்கரை. ஆலம்பாடியிலிருந்து 50 மைல் மேற்காய் உள்ளது. காவேரியின் கீழ்கரை இவ்வூருக்கு மேற்கில் 'அக்ரஹாரம்' என்ற ஒரு கிராமம் உள்ளது. சத்யாகலத்திலுள்ள சிவபெருமானை சேவித்த பிறகுதான் சிவசமுத்திரத்திலுள்ள பெருமாளை சேவிக்க வேண்டுமென்ற ஒரு நியதி ஏற்பட்டுள்ளது. இவ்வூரை தக்ஷிணகாசி என்று சொல்வார்கள்.

இவ்வூரைச் சுற்றிலும் துஷ்டமிருகங்கள் கொண்ட காடு இருக்கிறது.

*பணகரை*: தெற்குகரை (காவேரியின் கீழ்கரை) 1½ மைல். இங்கு காவேிரி உத்தரவாஹினி. இவ்வூருக்கு வடபால் காவேரி இரு பிளவாகப் பிரிந்து நடுவில் ஒரு தீவு ஏற்பட்டிருக்கிறது. ஒரு சிவாலயம் உளது.

*ஹெறளே*: தெற்குகரை: 4 மைல். காவேரி உத்தரவாஹினி. குண்டாலா நதி சங்கமம். ஒரு சிவாலயம் உண்டு. துலா ஸ்நான விசேஷம்.

*ஹம்பாபுரம்*: தென்கரை. கொள்ளே காலத்திலிருந்து 6 மைல் தூரம். காவேரி உத்தரவாஹினி. ஸுவர்ணநதி சங்கமம்.

*முள்ளூரு:* தென்கரை 2 மைல். ஒரு பெரிய க்ஷேத்ரம், கீழ்க்கண்ட ஆலயங்கள் உள்ளன. காம தேவர் சன்னதி. விசுவேசுவரர், மானேசுவரர், மாறம்மன், ஈசுவரன் கோயில்.

*திருமக்கூடல்—நரஸிபுரம்* தென்கரை: முள்ளூரிலிருந்து 15 மைல் தூரம். கர்கேசுவரியிலிருந்து 2 மைல் தூரம். இங்கு காவேரி, ஸ்படிகஸரோவரம் (குளம்), கபினி (கபிலா) சங்கமமாகிற படியால், இந்த க்ஷேத்ரம் 'தக்ஷிணகாசி' எனவும், 'தக்ஷிண பிரயாகை', திரிவேணி சங்கமம் எனவும் பெயர்பெற்று பெரிய புண்ய க்ஷேத்ரமாக விளங்குகிறது. சங்கம ஸ்தலத்தில் சங்க மேசுவரர் ஆலயம் இருக்கிறது. ஒரு வட விருக்ஷமும் உண்டு. யாத்ரீகர்களின் புண்ய, பாபங்களை காட்டுவதற்காக அங்குள்ள குஞ்சா நரஸிம்மஸ்வாமி கையில் ஒரு தராசு குண்டுமணிகளுடன் பொருத்தப்பட் டிருக்கிறது. இராமனுல் ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, அதனுல் இராவண வத பாபத்தை போக்கிக் கொண்டதாயும், அந்த லிங்கத்தின் சிரசிலிருந்து ஜலம் வந்து கொண்டிருப்பதாயும் ஜனங்கள் அந்தப் புனித நீரை பிரஸாதமாகக் கொள்வதாயும் புராண வரலாறு. இங்குள்ள அசுவத்த விருக்ஷம் பிர்மாவினுல் ஸ்தாபிக்கப்பட்டதாம். இங்கு பிர்மா, மார்க்கண்டேயர், பரமேசுவரன், நாரதர் முதலியோர் தபசு செய்தார்களாம். இந்த க்ஷேத்ரம் அஷ்டதள பத்ம ரூபமாய் அமைந்துள்ளது. இங்குள்ள ஹனுமத் லிங்கத்தை பூஜித்த பிறகு தான், அகஸ்திய லிங்கததை பூஜிக்க வேண்டுமென்று அகஸ்தியர் கட்டளையிட்டதாகச் சொல்கிருர்கள்.

*கர்கேசுவரி:* தென் கரை (காவேரியின் மேல்கரை) 'திருமுக்கூடல்' ஸ்தலத்திலிருந்து 2 மைல் தூரம் ஒரு பெரிய நகரம். இந்த க்ஷேத்திரத்தில் பூர்வத்தில் 'கர்காசாரியார்' பூஜை செய்து பரஸ்திரீகமன தோஷ நிவர்த்தி அடைந்தார். 'கர்கேசுவர லிங்கம்' எனப் பெயர்கொண்ட லிங்கம்.

*ரங்கனுதபுரம்:* காவேரியின் மேல் கரை (தென் கரை க்ஷேத்ரம்) கர்கேசுவரியிலிருந்து 8 மைல் தூரம். ஸ்ரீ ரங்கனுத ஸ்வாமி ஆலயம். தரிசன விசேஷம்.

*மஹாதேவபுரம்:* தென் கரை 7 மைல். காவேரி தக்ஷிண வாஹினி. பிரபலமான மஹாதேவேசுவரர் ஆலயம் உள்ளது. இதற்கு 'பாதராயண க்ஷேத்ரம்' என்றும் சொல்வது.

*மேலப்புர:* தென் கரை சண்டிகலாவிலிருந்து 2 மைல் மஹாதேவபுரத்திலிருந்து 3 மைல். இவ்விடம் காவேரி ஸ்ரீ ரங்க

பட்டணத்தைச் சுற்றிவந்து ஒன்று சேருகிறது. இந்த ஸங்கம ஸ்தலத்தை 'போதாயன க்ஷேத்ரம்' என்பார்கள். போதாயன ரிஷி இங்கு வாஸம் செய்ததாக சொல்கிறார்கள். துலாமாஸம் சுக்லபக்ஷ தசமியன்று ஸ்நான விசேஷம். அன்று ஸ்ரீ ரங்க பட்டணத்து ஸ்ரீரங்கநாதர் தீர்த்தம் கொடுக்க வருவார். சமீபத்தில் ஒரு பிள்ளையார் கோவிலும் இருக்கிறது.

*சண்டிகலா*: தென் கரை 2 மைல். பஸ்சிமவாஹினி ஸ்டேஷனிலிருந்து 2½ மைல் தூரம். சண்டிகோயில் உள்ளது. சர்க்கரை, சிமெண்டு தொழிற்சாலைகள் இருக்கின்றன.

*ஸ்ரீரங்க பட்டணம்*: தென் கரை பஸ்சிமவாஹினியிலிருந்து 1 மைல். சண்டிகலாவிலிருந்து 3 மைல். ஆதிரங்கம் எனப் பிரசித்திப்பெற்ற இந்த க்ஷேத்ரம் வடகாவேரி, தென் காவேரி என்ற கிளைகளின் ஊடே அமைந்த தீவில் திகழ்கிறது. இதற்கருகில் கௌதம ரிஷி ஆசிரமம் உளது. அங்கு அவர் காவேரியை வரவேற்றதாயும் சொல்லப்படுகிறது. இவ்வூரின் எதிர்க்கரையில் நான்கடி உயரமுள்ள லிங்கம் ஆவிர்பவித்திருக்கிறது. காவேரியில் பிரவாஹம் வரும் காலத்திலும் இந்த லிங்கம் முழுகுவதில்லை. நவபாஷாண, சமுத்திர கட்டத்தில் எப்படி அலைகள் நவக்ரஹ பிம்பங்களை மூழ்கடிக்காது அலை மோதி திரும்பிவிடுகிறதோ அவ்விதமே லிங்கத்தின் மேல் ஜலம் மோதி திரும்பிவிடுகிறது. இங்கு ஒரு வில்வ மரம், நந்தி, பிள்ளையார் காணப்படுகின்றன.

கௌதம ரிஷி காவேரியில் ஸ்நானம் செய்து தீர்த்தக்கரையில் ஸ்ரீரங்கநாதரை பிரதிஷ்டை செய்து விதிப்படி பூஜித்தார். அதற்கு கௌதம ஆசிரமம் என்றும் மேல் ரங்கம் என்றும் பெயர்கள் ஏற்பட்டன. திப்புஸுல்தான் ஸ்ரீரங்க பட்டணத்தை தன் ராஜ்யத்திற்கு பிரதான நகரமாயும், ஸ்ரீரங்கநாதரை தன் குலதெய்வமாகவும் கொண்டாடியது குறிப்பிடத் தக்கது. மேல் ரங்கத்தில் காவேரி ஸ்நானம் செய்து ஸ்ரீ ரங்கநாதரை தரிசனம் செய்தால் மகா பாபிகளுக்குக்கும் முக்தி ஏற்படும்.

ஸ்ரீரங்கப் பட்டணத்தில் பார்க்கவேண்டிய கட்டடங்களும், அழகிய தோட்டங்களும் இருக்கின்றன. ஸ்ரீரங்க பட்டணத்தி லிருந்து 2 மைல் தூரத்தில் கஞ்சாம் என்ற சிறிய கிராமத்தில் ஹைதர் அலி, திப்புசுல்தான் சமாதிகள் உள்ளன.

*பஸ்சிமவாஹினி*: தென்கரை 1 மைல் ரயில்வே ஸ்டேஷன், கண்ணம்பாடியிலிருந்து 12 மைல். இவ்விடம்

காவேரி, கிழக்கில் உள்ள சண்டிகலாவில் பிரிந்து ஒரு சிற்றாக மேற்கு முகமாய் ஓடி வருகிறது. அதற்கு பஸ்சிமவாஹினி எனப்பெயர். இந்தக் கிளை காவேரி இருகரைகளிலும் அநேக சிவாலயங்களும், விஷ்ணு ஆலயங்களும், அழகிய ஸ்நான கட்டங்களும் உள்ளன. இவ்வூருக்கு வடமேற்கில் ஒரு திட்டில் 'சந்திரவனம்' என்று பெயர்கொண்ட பெரிய நந்தவனம் உளது.

*கிருஷ்ணராஜஸாகர அல்லது கண்ணம்பாடி அணை:* தென்கரை 12 மைல். திப்பு ஸுல்தான் காலத்தில் திட்டமிடப் பட்ட அணை பிரிட்டிஷ் ராஜாங்க காலத்தில் உருவாகி 1919–ல் ஆரம்பிக்கப்பட்டது. இவ்வணையில் நீர்த் தேக்கம் நீர்ப்பாசனத் திற்கும், மின்சார உற்பத்திக்கும் உபயோகப்படுகின்றது. அணையின் கீழ் பாகத்தில் அமைந்துள்ள பிருந்தாவனத்தில் இயற்கையின் ரமணீயமும், செயற்கையின் கம்பீரமும் ஒன்றுபட்டு மின்சார ஒளியால் அலங்கரிக்கப்பட்டு, குதித்தோடும் சிற்றருவி களாலும், எழும்பிக் குடை பிடிக்கும் ஊற்றுகளாலும் மிளிர் கின்றது. அணையிலிருந்து பாயும் இர்வின் கால்வாயினால் கரும்பு சாகுபடி அபரிமிதமாக ஏற்பட்டிருக்கிறது. பெரிய பழத் தோட்டங்களும் உள்ளன.

*ஸாகர்கட்டே:* தென்கரை. கண்ணம்பாடியிலிருந்து 13 மைல் தூரம். லக்ஷ்மணதீர்த்த நதி ஸங்கமத்தால் ஸ்நான விசேஷம்.

*இடத்துறை:* தென்கரை. ஸாகர்கட்டேயிலிருந்து 5½ மைல். இங்கு காவேரி உத்தர வாஹினி. காவேரி இடதுபுறம் திரும்புவதால் இப்பெயர் ஏற்பட்டது. இவ்விடத்தில் காவேரியை மூன்று புஷ்கரணிகளாக பாவித்து, அதில் யாத்ரிகர்கள் ஸ்நானம் செய்கிறார்கள்.

அக்ஷரேசுவரர் க்ஷேத்ரமாகிய ஒரு சிவாலயம் இருக்கிறது. ரதஸப்தமி புண்யகாலத்தில் ரதஉற்சவம் நடைபெறும். காவேரி நதியில் ஏராளமான மீன்கள் உள்ளன. ஜனங்கள் கங்காபூஜை செய்து மீன்களுக்கு ஆகாரம் அளிக்கிறார்கள்.

இந்த ஸ்தலத்தை அர்க்கேசுவர க்ஷேத்ரம் எனவும், சூரிய புஷ்கரணி தீர்த்தம் என்றும் கூறுவர்.

மஹா சிவராத்ரி தினத்தில் காலை 7 மணிக்கு சூரிய கிர ணங்கள் நேராக சிவலிங்கத்தின்மேல் விழுந்து பிரகாசிக்கின்றன,



சஞ்சனக்கட்டே—காவேரி நீர்வீழ்ச்சி



காசிக்ஷேத்திரம் மணிகர்ணிகை கட்டத்தின் பெருமை இதற்கும் உளது என்கிறுர்கள்.

*சுஞ்சன்கட்டே:* தென்கரை. 11 மைல். காவேரியின் நதிக்கரையில் சீதாராமர் சந்நிதியிருக்கிறது. வருஷந்தோறும் ரதோத்ஸவம் விமரிசையாக நடைபெறுகிறது. இவ்வூருக்குப் பக்கத்தில் சுமார் 80 அடி உயரத்திலிருந்து காவேரி நீர் வீழ்ச்சியாக விழுந்து ஓடுகிறது. இதற்கு 'தனுஷ்கோடி 'நீர்வீழ்ச்சி' என்று பெயர். பார்க்க மகிழ்ச்சி தரக்கூடிய காக்ஷி. இது இயற்கை அணையின்மேல் விழுந்தோடும் பொழுது, கற்களின் பிரதிபலிப்பிஞல் சில இடங்களில் ஜலம் மஞ்சள் வர்ணமாயும், ஓடிவிழும் வேகத்திஞல் ஆவியும், புகையும், நுரையும் கூடிய தாயும் காணப்படுகின்றது. இந்த இடத்தில் சீதா தேவி ஸ்நானம் செய்ததாகச் சொல்லுகிறுர்கள்.

*ஹடியா:* தென்கரை 2 மைல். இங்கு காவேரியின் ஊடே ஸாமராஜ அணைக்கட்டு அமைக்கப்பட்டுள்ளது.

*கக்கன:* தென்கரை 6 மைல் தூரம். இவ்வூரை காவேரி மூன்று பக்கங்களில் சுற்றிக்கொண்டு தெற்கு முகமாய் ஓடுகிறது

*கர்த்தலா:* தென்கரை 5 மைல் தூரம். காவேரி தக்ஷிண வாஹினியாகவும், பஸ்சிமவாஹினியாகவும் ஓடிவரும் இடத்தில் இந்த ஸ்தலம் உள்ளது. இங்கு ஸ்நான விசேஷம்.

*ருத்ரபட்டணம்:* காவேரியின் மேல் கரையில் உள்ளது. இங்கு காவேரி தக்ஷிண வாஹினி கர்த்தலாவிலிருந்து 6 மைல் தூரம். சென்னகேசவ விஷ்ணு ஆலயமும், மல்லேசுவரருடைய சிவாலயமும் முக்கியமானவை.

*மத்திகோடு:* தென்கரை 1 மைல். இவ்வூரில் புதிதாக நிர்மாணிக்கப்பட்ட ராமேசுவரருடைய ஆலயமும், பிரத்தியேக மாக பஞ்சாயதன மூர்த்திகளுக்குத் தனி சன்னதியும், சோழ ராஜாவிஞல் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ ராமர் ஆலயமும் நதி ஓரமாக உள்ளன

*மல்லராஜ பட்டணம்:* தென்கரை 3 மைல், காவேரி தக்ஷிணவாஹினி. சிவன், விஷ்ணு கோயில்கள் உள்ளன.

*மல்லிநாதபுரம்:* தென்கரை 1½ மைல். மல்லிநாதேசுவரர் ஆலயமும், ஸ்நானமும் விசேஷம்.

*கட்டேபூர்:* தென்கரை 2½ மைல். இவ்வூருக்குச் சமீபம் ஒரு அணைக்கட்டு உள்ளது. ஒரு சிவாலயம் இருக்கிறது.

*கனகாலூர்*: தென்கரை 5 மைல் தூரம். இது ஒரு சிறிய மலைநாட்டு நகரம். காவேரிக்கு பாலம் உளது. இதன் மூலமாக ஸ்ரீரங்கலாவுக்குச் செல்லலாம்.

*சாமர்ராயன்கொட்டே*: தென்கரை 1½ மைல். இங்கு காவேரி தக்ஷிணவாஹினி. இங்கு காவேரிக்கு ஒரு அணை கட்டப்பட்டிருக்கிறது.

## குடகுதேசம்—4

*கொப்பா*: தென்கரை. 12 மைல் தூரம். இங்கிருந்து காவேரி உத்தரவாஹினி. நல்ல ரஸ்தா போடப்பட்டிருக்கிறது.

*ஸித்தாபுரம்*: தென்கரை. 18மைல். இது மர்க்காரா—விராஜ்பேட்டை மார்க்கத்திலுள்ள பெரிய கிராமம். இங்கு "கௌடவாள்" என்ற ஜாதியினர் வசிக்கின்றனர். ஆரஞ்சு, காப்பித் தோட்டங்கள் ஏராளமாயிருக்கின்றன. இப்பகுதியில் மழைமிகுதியால் நிலம் சதுப்புள்ளதாயிருக்கிறது.

புலிகள் சஞ்சாரம் அதிகம். 'வர்ஞு' என்ற பாம்புகள் மரங்களில் சுற்றிக்கொண்டிருக்கும்.

வீடுகளுக்கு தந்திக்கம்பிகளால் அடைப்பு ஏற்படுத்திக் கொள்வார்கள். இரவில் பூமிமட்டத்திற்குமேல் மரப்பரணைகளில் தங்குவார்கள்.

*குய்யா*: தென்கரை. 2 மைல் காவேரி உத்தரவாஹினி. விருச்சிகஸங்க்ரமண காலத்தில் பெரிய உற்சவம் நடைபெறும். ஈசுவரன் ஆலயம் இருக்கிறது.

*பலமுறி*: கிராமம் தென்புறம். 9 மைல். ஆலயங்கள் வடபுறம் உள்ளன. வடகரை க்ஷேத்ரப் பகுதியில் காண்க.

*குரங்கலா*: தென்புறம். பலமுறிகிராமத்திற்கு 12 மைல் தூரத்திலும், பாக மண்டலத்திற்கு 1மைல் தூரத்திலும், காவேரி பள்ளத்தாக்கில் உள்ளது. காவேரி ஸ்நான விசேஷம்.

*பாகமண்டலம், தலைக்காவேரி*: இவ்விரண்டு ஸ்தலங்களும் காவேரியின் தலைப்பாகத்தில் அமைந்திருப்பதால்—வடபால் உள்ள க்ஷேத்ரவரிசையில் முதன்மையாக விவரிக்கப்பட்டுள்ளன.



## காவேரி உபநதி, கிளை நதிகளில் அமைந்துள்ள சில முக்கிய க்ஷேத்திரங்கள் - விவரணம்:

காவேரியின் பெருமையை விளம்பரப்படுத்தும் வகையில் நாம் காவேரி நதிகளின் உபநதிகளாகிய அமராவதி, பவானி, நொய்யல் என்ற நதிகளின் மேலுள்ள ஒரு சில க்ஷேத்திரங்களையும், அதன் கிளை நதிகளாக உள்ள கொள்ளிடம் முதலான பல பிரிவுகளின் மேலுள்ள ஸ்தலங்களையும் சுருக்கமாக குறிப்பிடுவது பக்திமான்களுக்கு மிகையாகாது. இவற்றில் குறிப்பிட்டுள்ள க்ஷேத்திரங்கள் பிரதக்ஷிண விதிக்கு உட்படாதவைகள். அமராவதி, பவானி, நொய்யல் இவைகளும், சங்க நூல்களில் முறையே ஆன் பொருணை, வானி, காஞ்சி நதி என்ற பெயர்களுடன் காணப்படுகின்றன.

அமராவதி ஆனைமலையில் உற்பத்தியாகி, கோயம்புத்தூர் ஜில்லா வழியாக ஓடி கொங்கு நாட்டினை செழுமைப்படுத்துகிறது. இங்கு சோழ மண்டலத்தில் இருப்பதைப்போல் ஏழு முக்கிய திருப்பதிகள் இருக்கின்றன.

1. திருப்புக்கொளியூர் (அவிநாசி.)

2. திருமுருகன்பூண்டி.

3. திருநணு (பவானி.)

4. திருக்கொடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு.)

5. திருவெஞ்சமாக்கூடல்.

6. திருப்பாண்டிக் கொடுமுடி.

## 7. திருக்கருவூரானிலை (கரூர், வஞ்சி.)

[திருநணு ஸ்ரீபவானி க்ஷேத்திரத்தை பிரதக்ஷிண விதியில் உள்ள க்ஷேத்திரங்களில் சேர்க்கப்பட்டிருக்கிறது.]

நொய்யல் நதிக்கரையிலுள்ள பேரூர் க்ஷேத்திரம் மிகப் பிரசித்தி பெற்றது. சுந்தரரின் பதிகங்கள் கொண்ட நடராஜ க்ஷேத்திரம். அதை மேலை சிதம்பரம் என்றும் கூறுவர். காவேரிக் கரையின் மேலுள்ள நெரூர் க்ஷேத்திரத்தைக் குறிப்பிடும் போது, கரூர், வாங்கல என்ற க்ஷேத்திரங்கள் சிவபெருமானின் இரண்டு கண்களாகவும், நெரூர் க்ஷேத்திரம் நெற்றிக் கண்ணுக்கு சமமாக அமைந்துள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது. திருவிசை பாடிய கருவூர் தேவர் என்ற மகான் பல அற்புதங்களைச் செய்து, கருவூரிலுள்ள பசுபதீஸ்வரருடன் கலந்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

### 1. **அவிநாசி :** அவிநாசியீசுரர் - கருணாம்பிகை.

[திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து ஐந்தாவது மைலில் திருமுருகன்பூண்டி இருக்கிறது. திருமுருகன் பூண்டியிலிருந்து 3-வது மைலில் அவிநாசி இருக்கிறது. திருப்பூருக்கு அடுத்த ஸ்டேஷன் வஞ்சிப்பாளயத்திலிருந்து நேர் வடக்கில் 5 மைல்.]

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் முதலை வாயினின்று பிராமணப் பிள்ளையை மீட்டுக்கொடுத்தருளிய ஏரியும் இருக்கின்றது. அதன் தெற்கில் திருப்புக்கொளியூர் இருக்கிறது. அங்கே இப்பொழுது வீடுகள் ஒன்று மில்லை. ஏரிக் கரையின் கீழ் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் கோயில் இருக்கின்றது. அக்கோயிலில் முதலை வாயினின்றும் பிள்ளையை அழைப்பித்த பாவனை காட்டப்பட்டிருக்கிறது.

2. **திருமுருகன் பூண்டி :** [முருகநாதேசுரர் - ஆவுடை நாயகி.]

ஒரு சமயத்தில் பகவான் பூத கணங்களை திருடர்களின் தோற்றத்தில் அனுப்பி ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் அத்திரவியப் பொருள்களை பறிக்கும் படியான திருவிளையாடலைப் புரிந்தார். உடனே ஸ்வாமிகள் அந்தத் தெய்வத்தையும், தெய்வத்தின் ஸ்தல மகாத்மியத்தையும், பதிகமாகப் பாட, திருடர்கள் பொருள்களைக் கொணர்ந்து திருப்பிக் கொடுத்து விட்டனர். இந்த ஊர் திருப்பூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வடமேற்கில் 8 மைல் தூரத்தில் உள்ளது.

3. **திருநணா:** [பவானி] [சங்கமுகநாதேசுரர் - வேதாம்பிகை] [பவானி, காவேரி சங்கமம்.]

இந்தத் தலம் பவானியும், காவேரியும் கூடுமிடத்திலிருக்கின்றது. ஈரோடு ஸ்டேஷனுக்கு வடக்கே 8½ மைல்.

குபேரன், விசுவாமித்திரர், பராசுரர் முதலியோர் பூஜித்த ஸ்தலம். கோயிலுக்குள் ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் இருக்கின்றது.

4. **திருக்கொடிமாடச் செங்குன்றூர்:** [திருச்செங்கோடு] [அர்த்தநாரீசுரர் - பாகம் பிரியாளம்மை.]

சேலம் ஜில்லா சங்கரி துர்க்கம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே 6 மைல் தூரத்தில் உள்ளது.

ஒரு காலத்தில் பிருங்கி மகரிஷிக்கு ஈசுவரனையும், ஈசுவரியையும் சேர்ந்தாற்போல் தரிசனம் செய்ய வேண்டுமென எண்ணம் உதித்தது. அவர் அந்த மலையில் கடுந்தவம் புரிந்தார்.

இவருடைய தவத்திற்கு இணங்க பகவான் தன்னுடைய தேவியுடன் அர்த்த நாரீஸ்வரராக காக்ஷி யளித்தார்.

**(1+4) 5. திருவெஞ்சமாக் கூடல்:** [விகிர்த நாதேசுரர் - விகிர்த நாயகி]

கருவூருக்குத் தெற்கு அரவக் குறிச்சிக்குப் போகும் வழியில் 12 மைல் சென்று அப்பால் கிழக்கே 3 மைல் சென்று மணிமுத்தா நதியைக் கடந்தால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

வெஞ்சன் என்னும் அசுரன் பூஜித்த ஸ்தலம். சிவபெருமான் தம்மாட்டுப் பத்தி முதிர்ந்த ஒரு கிழவியிடம் தம் பிள்ளைகளை ஈடுகாட்டிப் பொன் வாங்கிச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்கு அளித்த ஸ்தலம்.

**(1+5) 6. திருப்பாண்டிக் கொடுமுடி :** [கொடுமுடிநாதர் - பண்மொழி நாயகி; காவேரி நதி]

கொடுமுடி ரயில்வே ஸ்டேஷன். ஈரோடிற்குத் தென்கிழக்கே 23 மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பாடியுள்ள ஸ்தலம். இதனைத் "திரிமூர்த்தி ஸ்தலம்" என்பர்.

**7. திருக்கருவூரானிலை** [கருர், வஞ்சி]. [பசுபதீசுரர் - கிருபாநாயகி; அமராவதி நதி.]

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே 45 மைலில் உள்ளது.

இந்த ஸ்தலத்தில் காமதேனு பகவானை பூஜித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எறிபத்த நாயனுருடைய ஸ்தலம். திருவிசைப்பா பாடிய கருவூர்த் தேவர் பிறந்து முக்தி அடைந்த ஸ்தலம்.

# கொள்ளிடக்கரை ஸ்தலங்கள்

காவேரியின் பெரும் கிளையாகிய கொள்ளிடம் கல்லணையிலிருந்து பிரிந்து 125 மைல்கள் வட கிழக்காக ஓடி சோழம்பேட்டையில் கடலில் கலக்கிறது.

## இதன் கரையிலுள்ள சில முக்கிய க்ஷேத்திரங்கள்

1. **மணக்கால்:** *[லால்குடியிலிருந்து 1 மைல் தூரத்தில் இருக்கிறது.]*

இது நம்பி அவதரித்த பிரபல விஷ்ணு ஸ்தலமாகும். விஷ்ணு, ஸ்கந்தர் முதலிய தெய்வங்களுக்கு இவ்விடத்தில் ஆலயங்கள் உள்ளன.

2. **சென்னி வாய்க்கால்:** (ஆங்கரை) இதை ஸுந்தரமூர்த்தி நாயனாரின் மற்றொரு வைப்பு ஸ்தலமாகச் சொல்லப்பட்டு இருக்கிறது.

திருச்சியிலிருந்து பஸ்ஸில் போகலாம்.

3. **அன்பிலாந்துறை:** *[கீழ் அன்பில்; சத்திய வாகேசுரர் - சௌந்தர்யநாயகி; கொள்ளிட நதி.]*

இது லால்குடி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 5 மைல். இங்கு சிவனும், விஷ்ணுவும் கோவில் கொண்டிருக்கிறார்கள். திருமழிசை ஆழ்வார் இந்த ஸ்தலத்தில்தான் மங்களா சாஸனம் பெற்றனர். பிர்ம்மாவிற்கும், வால்மீகி மகரிஷிக்கும் இந்த இடத்தில் பகவான் காக்ஷி கொடுத்தருளினார். இந்த இடத்தில் காயத்திரி (ஞாயிறு) நதி கொள்ளிடத்தில் சங்கமமாகின்றது. அப்பர் சுவாமிகளின் பதிகங்களைப் பெற்ற இடமாகும்.

**4. திருமழப்பாடி:** *[வஜ்ரஸ்தம்பேசுரர் - அழகம்மை.]*

*திருவையாற்றுக்கு மேற்கே 1 மைலிலுள்ள திருநெய்த்தானத்திற்கு வடமேற்கே 2 மைல்.*

*இந்த ஸ்தலத்தில் திருமாலும் தேவேந்திரனும் ஈஸ்வரனை பூஜை செய்தார்கள். முக்கியமாக இந்த க்ஷேத்திரத்தில் நந்திபகவானுக்கு கலியாண உத்ஸவம் நடத்தப்பட்டு வருகிறது. பங்குனி மாதத்தில் நடத்தப்பட்டு வரும் இந்த உத்ஸவத்திற்கு திருவையாற்றிலிருந்து ஸ்வாமி எழுந்தருளுகிறார். இந்த ஸ்தலம் அப்பர், சம்பந்தர், சுந்தரர் முதலியவர்களால் பதிகம் பெற்றுள்ளது.*

**5. திருக்கானூர்:** *[செம்மேனிநாதேசுரர் - சிவயோக நாயகி.]*

*பூதலூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கே 5 மைலில் உள்ள, திருக்காட்டுப்பள்ளிக்கு வடக்கில் 2 மைல்.*

*அங்கு கோவில் மாத்திரம் இருக்கின்றது. இந்த இடத்தில் மாமரம் ஸ்தல விருக்ஷமாக அமைந்திருக்கிறது. அப்பர், சுந்தரர் முதலியவர்களின் வைப்பு ஸ்தலமாகும். இது உமாதேவியார் சிவயோகத்திலிருந்தபொழுது அவருக்குப் பரமசிவன் செந்தீ வண்ணனாகக் காக்ஷி கொடுத்த ஸ்தலமாகும்.*

**6. திருப்பெரும்புலியூர்:** *[வியாக்ரபுரீசுவரர்— சௌந்தரநாயகி ]*

*திருவையாற்றிற்கு மேற்கே 2½ மைல் தூரத்தில் உள்ளது. வழியில் 1 மைலில் திருநெய்த்தானம் இருக்கின்றது.*

இவர்களை ஒரு காலத்தில் வியாக்ரபாத மகரிஷி பூஜித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இது ஞான சம்பந்தர், திருநாவுக்கரசு முதலியவர்களின் பதிகங்களைக் கொண்ட க்ஷேத்திரமாகும். ஸ்வாமி இருக்கும் இடத்திலுள்ள கற்கள் தாமரைபோல் வட்டமாய்ப் போடப்பட்டிருக்கின்றன.

**7. திருவைக்காவூர்:** *[வில்வவனேசுவரர்-வளைக்கை நாயகி.]*

இது கும்பகோணத்திற்கு வடமேற்கில் 8 மைலில் உள்ள விஜயமங்கைக்கு மேற்கே 1½-மைல் இந்த ஸ்தலம் சுவாமிமலைக்கு வடமேற்கில் 4 மைலில் அமைந்துள்ளது.

ஒரு காலத்தில் சிவராத்திரியன்று ஒரு வேடனைப் புலி துரத்திவர, அந்த வேடன் ஒரு வில்வமரத்தில் ஏறி அமர்ந்துவிட்டான். புலியும் அந்த இடத்தை விட்டு அசையாது மரத்தடியிலே படுத்துவிட்டது. பொழுது சாய்ந்து இரவு புகுந்துவிடவே வேடன் தனக்கு தூக்கம் ஏறபடாமல் இருக்கும் பொருட்டு ஒவ்வொரு வில்வதளமாகப் பறித்து கீழ் போட்டுக் கொண்டே இருந்தான். வில்வதளங்கள் ஒவ்வொன்றும் கீழே அமைந்திருந்த ஒரு சிவலிங்கத்தின் சிரசில் வீழ்ந்து கொண்டிருந்து, அன்று சிவராத்திரியாயிருந்தது. இரவு முழுவதும் கண் விழித்து, தான் அறியாமலேயே சிவபூஜை செய்தவனாயிருந்ததால், பரமசிவன் மறுநாள் காலையில் அவனுக்குப் பிரத்யக்ஷமாகி, மோக்ஷத்தையும் அளித்தார். இது ஞானசம்பந்தரால் பாடல்பெற்ற ஸ்தலமாகும்.

**8. விஜயமங்கை:** *[விஜயநாதர் - மங்கை நாயகி.]*

திருவைக்காவூருக்குக் கிழக்கே 1½மைல்,

தன்னுடைய தவத்தின் பலனாக வேடரூபத்தில் வந்த பரமசிவனுடன் அர்ஜுனன் ஆரம்பத்தில் யுத்தம் செய்து, முடிவாக பகவான் என்பதை அறிந்து அவரிடமிருந்து பாசுபதத்தை பெற்ற ஸ்தலம் இதுவேயாகும்.

**9. திருப்புறம்பயம் :** *[சாக்ஷிநாதேசுவரர்-கரும்பன்னசொல்லம்மை.]*

கும்பகோணத்திற்கு வடமேற்கில் 4 மைலில் உள்ள திரு இன்னம்பூருக்கு வடக்கே சுமார் 2 மைல். தெற்கே மண்ணியாறும், வடக்கே கொள்ளிடமும் இருக்கின்றன.

பிரளய காலத்தில் இந்த இடம் மட்டும் காப்பாற்றப்பட்டதால் இதற்கு "புறம்பயம்" என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. செட்டிப் பெண்ணுக்குச் சாக்ஷி சொன்ன காரணத்தால் சாக்ஷி நாதர் என்றும் பெயர். புன்னைவனநாதர் என்றும் பெயர். இந்த ஊரில் பாம்பு கடித்து இறந்த கணவனுக்கு உயிர் கொடுத்ததின் மூலம் ஒரு செட்டிப் பெண்ணுக்குத் திருஞானசம்பந்தர் அருள்புரிந்து விட்டுப் போனார். பிரளயம் காத்த விநாயகர் ஸன்னதி ஒன்று இவ்விடத்தில் இருக்கிறது. விநாயகர் வெண்மை நிறம்; ஆகவே இதற்கு பிரளயங்காத்த பிள்ளையார் என்று பெயர். விநாயக சதுர்த்தியன்று ஒரு ஆடம் தேன் இந்த விநாயகருக்கு அபிஷேகம் செய்வதுண்டு. இது சம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலியவர்களின் பாடல்களைப் பெற்ற ஸ்தலமாகும்.

**10. திருப்பனந்தாள் :** *[சடையப்பர் - பெரிய நாயகி.]* மண்ணியாற்றுக்கு சமீபம்.

கும்பகோணத்திற்கு வடகிழக்கே 10 மைல், ஆடுதுறை ரயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 6 மைல்,

இந்த ஸ்தலம் பனைமரத்தை ஸ்தல விருக்ஷமாகக் கொண்டது. குங்குலியக்கலயர் என்ற நாயனார் சாய்ந்திருந்த சிவலிங்கத்தை நிமிர்ந்தெழும்படிச் செய்தார்.

குமரகுருபர ஸ்வாமிகளால் ஏற்படுத்தப்பட்ட காசி மடம் என்று பிரசித்திப் பெற்ற ஒரு சைவ மடம் இந்த ஸ்தலத்தை தலைமை ஸ்தானமாகக் கொண்டு உள்ளது. இது அப்பர் ஸ்வாமிகள், சம்பந்தர் முதலியவர்களினால் பாடப்பெற்ற ஸ்தலமாகும்.

**11. ஓமாம்புலியூர்** : [துயர்தீர்த்த நாதர் - பூங்கொடி நாயகி.]

குற்றாலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு 11 மைல் வடக்கே உள்ளது.

சிதம்பரத்திற்கு தென்மேற்கே 15 மைலில் உள்ள மன்னார்குடிக்குத் தெற்கில் 4 மைல்.

அப்பர், சம்பந்தர் முதலியவர்களின்பதிகங்களைப் பெற்றுள்ளதாகும். திருவைகாவூரில் நிகழ்ந்த ஒரு தெய்வீக நிகழ்ச்சியைப் போல, இந்த ஸ்தலத்திலும் மற்றொரு வேடன் மரத்திலிருந்து வில்வதளங்களை சிவலிங்கத்தில் போட, இவனுக்கும் மோக்ஷமளித்த தாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தலத்தில் உள்ள அந்தணர்களின் மேன்மையை அப்பரும், சம்பந்தரும் வெகுவாகப் புகழ்ந்து இருக்கிறார்கள்.

**12. திருக்கானாட்டு முள்ளூர்** : [பதஞ்சலி நாதேசுரர் - கோல் வளைக்கை அம்மை.]

இது 'கானாட்டாம் புலியூர்' என வழங்குகின்றது. சிதம்பரத்திற்குத் தென்மேற்கு 15 மைலில் உள்ள மன்னார்குடியைச் சேர்ந்து, அங்கிருந்து தெற்கே ஓமாம்புலியூருக்குச் செல்லும் வழியில் 2

மைல் சென்று, கிழக்கே திரும்பி 1 மைல் போனால் இந்தத் தலத்தை அடையலாம். இதற்குத் தென் மேற்கில் 2 மைலில் ஓமாம்புலியூர் இருக்கின்றது. இது ஓமாம்புலியூருக்குத் தென்கிழக்கில் 2 மைல் தூரத்தில் உள்ளது.

இந்த இடத்தில் பரமசிவனை பதஞ்சலி முனிவர் பூஜித்து வந்ததால் பகவான் இவருக்குப் பதஞ்சலி நாதர் என்ற பெயரை அளித்தார். இத்தலம் சுந்தர மூர்த்தியின் பதிகத்தைப் பெற்றுள்ளது.

13. **திருநாரையூர்:** [சௌந்தரேசுரர் - திரிபுர சுந்தரி.]

சிதம்பரத்திற்குத் தென்மேற்கே 8 மைலில் உள்ள குமராக்ஷியை அடைந்து, அங்கிருந்து மன்னார் குடிக்குப் போகும் வழியில் 1½ மைல் சென்று, அங்கு வழியை விட்டுத் தெற்கே திரும்பி ¾ மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

துர்வாஸ முனிவரால் சாபத்தை அடைந்த ஒரு கந்தர்வன் நாரையாகி இந்த தலத்தில் சாபத்தைத் தீர்த்துக் கொண்டான். நம்பியாண்டார் நம்பி என்பவர் இங்குள்ள கணபதியை பூஜித்து, தேவா ரங்கள் எழுதப்பட்ட ஏடுகள் சிதம்பரத்தில் மறைந் திருந்ததைக் கண்டெடுத்து, ஞானத்தைப் பெற்று முடிவாக முக்தியும் அடைந்தார். இது ஞான சம்பந்தர், திருநாவுக்கரசு நாயனார் முதலியோர்களின் பதிகங்களைப் பெற்ற ஸ்தலமாகும்.

**திருமண்ணிப்படிக்கரை:** [இலுப்பைப்பட்டு] [நீலகண்டர் - அமிர்தகரவல்லியம்மை]

வைத்தீஸ்வரன் கோயில் ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கில் 6 மைல். வழியில் 2 மைலில் திருப்புன்கூரும், அப்பால் 3 மைலில் திருவாளொளிபுற்றூரும் இருக்கின்றன.

இது சிவபெருமான் ஆலகால விஷத்தை அருந்திய பொழுது, உமாதேவியார் அவருடைய கண்டத்தைப் பிடித்த ஸ்தலமாகும். இத்தலம் சுந்தரரால் பாடப்பெற்றதாகும்.

**15. திருக்கருப்பறியலூர்** : [குற்றம் பொறுத்த நாதேசுரர் - கோல்வளையம்மை.]

வைத்தீஸ்வரன் கோயில் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி, மேற்கே 2 மைல் சென்று திருப்புன் கூரை அடைந்து அப்பாலும் 2 மைல் மேற்கே சென்று மண்ணிப்பள்ளம் என்ற ஊரை அடைந்து, அங்கிருந்து வடக்கே 1 மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம், மண்ணியாற்றுக்கு சமீபத்தில் உள்ளது.

இந்திரன் செய்த ஒரு குற்றத்தை மன்னித்து, பகவான் அவருக்கு இந்த இடத்தில் அருள் புரிந்தார். இதனால் இத்தலத்தில் ஸ்வாமிக்கு குற்றம் பொறுத்த நாதர் என்ற பெயர் வந்தது. இது சுந்தரர், சம்பந்தர் முதலியவர்களால் பாடப்பட்ட ஸ்தலமாகும்.

**16. திருநல்லூர் பெருமணம்** : என்பது ஆச்சா புரம். [சிவலோகத்தியாகேசர் - நங்கையுமையம்மை]

சிதம்பரத்திற்குத் தெற்கு 4½ மைலில் உள்ள கொள்ளிடம் ரயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3 மைல் தூரத்தில் உள்ளது.

இந்த இடத்தில் திருஞானசம்பந்தரின் திருக் கலியாணம் முடிந்தவுடன், இந்த மகான் அங்கு வந்திருந்தவர்களுடன் சிவலிங்க ஜோதியில் ஐக்ய மானார்கள். இது சம்பந்தரின் பதிகத்தைப் பெற்ற ஸ்தலமாகும்.

**17. திருமயிலாடி** : [சுப்ரமண்யர் - வள்ளீ தேவசேனை.]

இது கொள்ளிட ரயில்வே ஸ்டேஷனுக்கு அடுத்த ஸ்டேஷனுக உள்ளது, சுப்ரமண்ய ஸ்வாமி ஸ்தலம், சிவனும், உமையும் இவ்விடத்தில் கோவில் கொண்டு இருக்கிறுர்கள்

18. **திருக்கழிப்பாலை :** [பால்வண்ண நாதேசுரர் - வேதநாயகி.]

சிதம்பரத்திற்கு 2 மைல் தூரத்தில் சிவபுரியில் அமைந்துள்ள இந்த ஸ்தலம். அப்பர், சம்பந்தர், சுந்தரர் முதலியவர்களின் பதிகங்களைப் பெற்ற ஸ்தலம். வன்மீக ரிஷியால் பூஜித்த ஸ்தலமாகும். ஏற்கனவே சிதம்பரத்திற்குத் தென்கிழக்கில் 7 மைல் தூரத்தில் இருந்த இந்த கோயில் கொள்ளிட நதியினுல் தகர்ந்து போய் விட்டது. அந்த கோயிலின் கற்களைக்கொண்டு இந்த சிவபுரம் கோவில் கட்டப்பட்டு இருக்கிறது.

19. **திருநெல்வாயில் :** என்பது சிவபுரி [உச்சிநாதேசுரர் - கநகாம்பிகை.]

சிதம்பரத்திற்குத் தெற்கே 2 மைல் தூரத்தில் உள்ளது. இவ்வூரில் இரு ஆலயங்கள் உண்டு. வடக்கே இருக்கும் ஆலயம் இந்த ஸ்தலத்திற்குரியது. தெற்கே இருக்கும் ஆலயத்தில் முன் திருக்கழிப் பாலையில் இருந்த பால் வண்ணநாதர் வீற்றிருக்கிறுர். திருக்கழிப்பாலையிலிருந்த ஆலயம் இப்பொழுது கொள்ளிட நதி கொண்டு போகப்பட்டது. இந்த ஆலயத்தில் கண்வ மகரிஷி பூஜித்து வந்தார்.

20. **சிதம்பரம் :** என்பது கோயில். [திருமூல நாதர் - உமையம்மை.]

இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். இதை பூலோக கைலாசம் என்றும் கூறுவார்கள். பதஞ்சலி, வியாக்ர



★ தில்லை ஆனந்த நடராஜர் ஸபரிவார திருநடனக்காக்ஷி, சிதம்பரம். ★

பாதர் என்ற இரு ரிஷிகளின் பொருட்டு நடராஜர் பஞ்ச சபைகளில் ஒன்ருகிய கனகசபையில் எக்காலமும் ஆனந்தத் தாண்டவம் செய்த அருளம்பதி பஞ்சபூத ஸ்தலங்களுள் இந்த க்ஷேத்திரம் ஆகாச ஸ்தலமாகும். "தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கு அடியேன்" என்று சபாநாயகராலேயே அடி எடுத்துக் காட்டிய திவ்ய க்ஷேத்திரமாகும். மாணிக்க வாசக ஸ்வாமிகள், திருநீலகண்ட நாயனர், திருநாளைப் போவார் என்றும் நந்தனர், கூத்துவ நாயனர், கோட் செங்கட்சோழ நாயனர், கணம்புல்ல நாயனர், மறைஞான சம்பந்த சிவாச்சாரியார், உமாபதி சிவாச்சாரியார் முதலிய எண்ணிறந்த அடியார்கள் இந்த க்ஷேத்திரத்தில் முக்தி பெற்றிருக்கிருர்கள். ஆதிசங்கர பகவத்பாதாள் கைலாசத்திலிருந்து கொண்டு வந்த 5 ஸ்படிக லிங்கங்களில் ஒன்றை இங்கே ஸ்தாபித்திருக்கிருர். இது மாணிக்க வாசக ஸ்வாமிகள் 'திருச்சிற்றமபல கோவை'பாடி அருளின பழம் பதி.

இந்த ஸ்தலத்தில் சேக்கிழார் நாயனர் பெரிய புராணம் பாடி அரங்கேற்றினர். சேரமான் பெருமாளுயனர் 'பொன் வண்ணத்தந்தாதி' பாடின திருப்பதி, திருக்கோயிலூர் மெய்ப்பொருளுயனர் தன் உயிரை விடுங்காலத்தில் சபாநாயகரைத் தியானித்து முக்தி பெற்ற ஸ்தலமாகும். அய்யகுல சேகர சோழ மகாராஜாவின் காலத்தில் 'நம்பியாண்டார் நம்பி' தேவாரப் பதிகங்களைக் கண்டெடுக்கப்பட்ட ஸ்தலம். சிவகலைகள் அனைத்தும் அர்த்த சாமத்தில் வந்து சேரப்பெற்ற ஒப்புயர்வில்லாத க்ஷேத்திரம் நடராஜப் பெருமாள் ஸந்நிதியில் ரத்ன சபாபதி அபிஷேகம், ரகசிய தரிசனம் முதலியவைகளைத் தரிசிக்க வேண்டியவைகளாகும்.

கனகசபைக்கு அடுத்த தென்மேற்குப் பாகத்தில் கோவிந்தராஜப் பெருமாள் சயனம் செய்துகொண்

டிருக்கிறார் இவ்விடத்தில் ஆனித் திருமஞ்சனமும், ஆருத்ரா தரிசனமும் விசேஷம். பஞ்சபூத க்ஷேத்திரங்களில் இது ஆகாச க்ஷேத்திரம்.

**21 திருவேட்களம்:** [பாசுபதேசுரர் - நல்ல நாயகி.] சிதம்பரத்திற்குக் கிழக்கே 2 மைல்.

அர்ஜுனனுக்குப் பாசுபதத்தை அளித்த பிறகு, பகவான் இந்த இடத்தில் தான் மறைந்தார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசு முதலியவர்களின் பதிகங்களைப் பெற்றுள்ளது. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திலே இருப்பதற்கஞ்சி, இங்கே இருந்துகொண்டு சிதம்பரத்திற்குப் போய்ச் சபாநாயகரைத் தரிசித்து வந்தனர்.

**22. திருமயேந்திரப்பள்ளி:** [திருமேனியழகர் - வடிவாம்பிகை.]

சிதம்பரத்திற்குத் தெற்கில் உள்ள கொள்ளிடம் ரயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு3 மைலில் உள்ள ஆச்சாபுரத்துக்கு வடகிழக்கு 4 மைல். திருநல்லூர் பெருமணத்திற்குக் கிழக்கே 3 மைல் உள்ளது.

கொள்ளிடம் சமுத்திரத்தில் சங்கமமாகும் இடத்திற்கு சமீபத்தில் தென்கரையில் அமைந்துள்ளது. இதை கோவிலடிப்பாளையம் என்றும் சொல்வார்கள். சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன், மகாபலி முதலியவர்கள் பூஜித்த ஸ்தலமாகும். இந்த க்ஷேத்திரத்தில் ஓர் எலிக்கு மோக்ஷம் கொடுக்கப்பட்டு மறு பிறவியில் மாவலி என்ற சக்ரவர்த்தியாகப் பிறக்க அருள் புரியப்பட்டது. திருஞான சம்பந்தரின் பதிகத்தையும் பெற்றுள்ளது.

## *விண்ணாற்றின் கரையின்மேல் உள்ள க்ஷேத்ரங்கள்*

### *தஞ்சை*

*பாம்பணியாறு:* திருப்பூவனூர் - திருப்பாதாளேசுவரம் - இராஜமன்னார்குடி.

*வெட்டாறு:* திருக்கருகாவூர், திருநல்லூர்-திருக்கொள்ளம் பூதூர் - திருவிற்குடி.

குடமுருட்டி: திருவேதிகுடி - ஆவூர் - திருச்சேறை.

*திருமலைராயன்;* திருச்சக்திமுத்தம் - திருப்பட்டீசுவரம் - திருப்பழையாறைவடதழி.

*அரிசிலாறு:* சிவபுரம் - திருக்கண்டிநல்லூர் - அரசிற் கரைபுத்தூர் - திருநாறையூர் சித்தீசுரம் - திருநாகேசுவரம் - திருவிண்ணகர். திருவிழிமிழலை - திரு அன்னியூர் - திருநல்லம்- திருக்கருவிரி . திலதைப்பதி - பூந்தோட்டம், திரு அம்பர் பெருந் திருக்கோவில் - திருவம்பர் மாகாளம் - திருநள்ளாறு.

*முடிகொண்டான்:* திருப்பனையூர் - நன்னிலம் - ஸ்ரீவாஞ்சியம் - திருப்புகலூர் - திருமருகல் - திருச்சாத்தமங்கை. திருச்செங்காட்டங்குடி - திருக்கண்ணபுரம்.

*ஓடம்போக்கியாறு:* எண்கண் - திருக்கண்ணமங்கை. திருவாரூர் - சிக்கல் - கீழ்வேளூர்-திருக்கண்ணங்குடி-திருநாகைக் காரோணம்.

*திருமறைக்காடு:* அகத்தியான்பள்ளி.

காவேரி தஞ்சை ஜில்லாவில் பல கிளைகளாகப் பிரிந்து பூமியை செழிக்கச் செய்கிறது. விண்ணாறு கல்லணையில் பிரிந்து தஞ்சை, பாபநாசம் நன்னிலம் தாலூக்காக்களின் வழியாய் ஓடி, பின்னர் பல கிளைகளாய் பிரிந்து, நீர்ப்பாசன வசதியை ஏற்படுத்திக்கொண்டு கடலில் சங்கமமாகிறது. காவேரியின் மற்ற கிளை நதிகளாகிய குடமுருட்டி, அரிசிலாறு, வெட்டாறு நதிகளும், பின்னர் சில கிளைநதிகளாய் பிரிந்து தண்ணீர் வளத்தால் தஞ்சை ஜில்லாவை வளம்பெறச் செய்து வருகின்றன. திருமலைராயன், முடிகொண்டான், குடமுருட்டியின் கிளை நதிகள். ஓடம் போக்கியாறு வெட்டாற்றிலிருந்து பிரிகிறது. பாம்பணியாறு

விண்ணுற்றின் கிளையாகும். மற்றும் பல கிளைநதிகள் தஞ்சை ஜில்லாவின் ஊடே புகுந்து நிலவளத்தைப் பெருக்கிக்கொண்டே கிழக்கு முகமாய் ஓடி கடலில் கலக்கின்றன. அவைகளையும், அவைகளின் கரைகளிலும், மருங்கேயும் அமைந்துள்ள சிறந்த க்ஷேத்திரங்களை விவரிக்க இயலாதபடியாலும், காவேரி பிரதக்ஷிண விதிக்கு உட்படாமையாலும் இங்கு விலக்கிக் கொள்கின்றோம். இருப்பினும், காவேரியின் அற்புதமான புனிதத் தன்மையை பிரகாசிககச் செய்யும் இச்சிறு புஸ்தகத்தில் சில கிளைநதிகளின் பாற் அமைந்துள்ள சில க்ஷேத்திரங்களையும் விவரிப்பது க்ஷேத்தி ராடனம் செய்யும் மகான்களுக்கு, நீர்வளம்போல் கருணைவெள்ளம் பொருந்திய க்ஷேத்திரங்கள் ஆத்ம மகிழ்ச்சியை அளித்து அவர்க ளுடைய பேராவலை பூர்த்திசெய்யும்.

*விண்ணுறு:* *தஞ்சை நகரம்* இந்த ஆற்றின்பால் அமைந்துளது. தஞ்சை ஒரு ரயில்வே ஸ்டேஷன். தென்ரயில்வே இதை மேற்குப் புறத்தில் திருச்சியோடும், கிழக்குப்புறம் நாகைப் பட்டிணத்தோடும், வடபுறம் சென்னையோடும் இணைக்கிறது.

இங்கு சிவன், விஷ்ணு கோயில்கள் உள்ளன. தஞ்சை மாமணி கோயில் என்ற விஷ்ணு ஆலயம் பிரசித்தி பெற்றதாகும். திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், நம்மாழ்வார் முதலியோர் களால் இந்த ஸ்தலம் மங்களாசாஸனம் பெற்றதாகும். செங்கமல வல்லித் தாயாரையும், நீலமேகப் பெருமாளையும் கொண்ட இந்தக் கோவிலின் சௌந்தர்ய விமானமும், கன்னிகர் புஷ்கரணியும், அமுத தீர்த்தமும் மகிமை பெற்றவைகளாகும். பராசரமுனிவருக்கு பெருமாள் இந்த இடத்தில் பிரத்யக்ஷமானார், மார்க்கண்டேய முனிவர் விஷ்ணுவின் அருள்பெற்றார்.

ப்ருகதாம்பாள் ஸமேத ப்ருகதீசுவரரையும் கொண்ட இங்குள்ள சிவன் கோவில் சோழமன்னரால் கட்டப்பட்டது. இக் கோயிலின் உட்புறம் உள்ள பிரும்மாண்டமான நந்தி விகரகமும், கோபுரத்தின் மேல் ஸ்தூபியும், கல் சிற்பங்களும், பழைய கால வர்ணங்களினால் தீட்டப்பட்ட சித்திரங்களும் மிகவும் பாராட்டப் படுகின்றன. விண்ணுற்றிலிருந்து வெட்டாறு, கோரையாறு, *பாம்பணியாறு* என்று மூன்று நதிகள் பிரிகின்றன.

*திருப்பூவனூர்:* இந்த க்ஷேத்திரம் *பாம்பணியாற்றின்* கரையில் உள்ளது. கற்பகவல்லி ஸமேத புஷ்பவனேசுவரர் கோவில் பிரசித்தி பெற்றது. நீடாமங்கலம் ரயில்வே ஸ்டேஷனி லிருந்து மூன்று மைல் தெற்கே உள்ள க்ஷேத்ரமாகும். திருநாவுக்

கரசுநாயனாரால் பதிகம் பெற்றுள்ள இத்தலத்தில் சாமுண்டேசுவரி ஸந்நிதியும் அமைந்திருக்கிறது. இந்த இடத்தில் 'எலி' கடிக்கு கயிறு கட்டிக்கொள்வதின் மூலம் விஷம் நிவர்த்தியாகிறது. இங்குள்ள சாமுண்டேசுவரி ஸந்நதி மைசூரில் உள்ள சாமுண்டேசுவரிக்கு நிகராய் அமைந்துள்ளது. இந்த க்ஷேத்திரத்தில் 1942ஷ்த்தில் ஸ்ரீகாமகோடி பீடாதிபதி முன்பாக ஒரு அதிருத்ர ஹோமம், சண்டிஹோமம் நடைபெற்றன.

*திருப்பாதாளேசுவரம்*: (பாமணி)-இந்த ஸ்தலம் *பாம்பணி யாற்றங்கரையில்* வடபுறத்தில் அமைந்திருக்கிறது. இது இராஜமன்னார் கோவிலுக்கு வடபுறம் 1½ மைல் தூரத்தில் இருககிறது. ஸர்ப்ப உருவத்தில் அமைந்த தனஞ்செய மகரிஷி பூஜித்த ஸ்தலம். ஸ்வாமிக்கு ஸர்பேசர் என்றும், அம்பாளுக்கு அமிர்தாம்பாள் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இந்த க்ஷேத்திரத்தில் திருஞான சம்பந்தர் பதிகங்கள் பாடியுள்ளார். ஸர்ப்ப தீர்த்தம் விசேஷம்.

*இராஜமன்னார்கோவில்*: (மன்னார்குடி) - பாம்பணி யாற்றின் தென்புறம் - மேற்குபுறம் அமைந்துள்ள க்ஷேத்ரம். ருக்மணி, சத்யபாமா ஸமேத ஸ்ரீகண்ணபிரான், இராஜகோபாலன் என்ற கருணமூர்த்தியாய், மாடுமேய்க்கும் வேஷதாரியாய், கோப்ரளய மகரிஷிக்கு காக்ஷி கொடுக்கவந்த வள்ளலாய் அலங்கரிக்கும் புண்ய ஸ்தலம். இதை தக்ஷிண துவாரகையென்றும், சம்பகாரண்ய க்ஷேத்ரமென்றும் அழைக்கின்றார்கள். சங்கீத மும்மணிகளில் ஒருவராகிய முத்து ஸ்வாமி தீக்ஷதர் இங்குள்ள மூர்த்தியை "நாரீவேஷதர" என்று பாடியிருக்கிறார். ஹரித்ரா நதி, 'க்ஷீரஸாகரம்' என்ற தீர்த்தங்களால் மகிமைபெற்றுள்ள ஸ்தலம். பங்குனி மாதம் நடைபெறும் உற்சவத்தில் 'வெண்ணெய்தாழி' மிகவும் விசேஷம்.

## *வெட்டாற்றின் கரைமேல் வீற்றிருக்கும் சில க்ஷேத்திரங்கள்.*

**திருக்கருகாவூர்**: (திருக்களாவூர்) பாபநாசம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தெற்கே நான்கு மைல் தூரத்தில் உள்ள ஸ்தலம். முல்லைவனேசுவரர்—*கற்பரக்ஷதியம்மன்*. ஒரு சமயம் ஆதரவற்ற ஒரு கர்ப்பிணிக்கு மருத்துவம் செய்து அம்பாள் தாயையும், சிசுவையும் ரக்ஷித்த காரணத்தால் இப்பெயர் வழங்கலாயிற்று. சந்திரனால் பூஜிக்கப்பட்ட ஸ்தலம். திருநாவுக்கரசு நாயனார் பதிகம் பெற்றுள்ளது.

*திருநல்லூர்:* பாபநாசம் ரயில்வே ஸ்டேஷனுக்கு கிழக்கில் மூன்று மைல் தூரத்தில் வெட்டாற்றிற்கும் குடமுருட்டிக்கும் நடுப்பகுதியில் அமைந்துள்ள க்ஷேத்ரம்.

கிரிசுந்தரி அம்பாள்-கல்யாணசுந்தரேசுவரர். இத்தலத்தில் திருமால், பாண்டவர்கள், அஷ்டவஸுக்கள் முதலியவர்கள் ஈசுவரனை பூஜித்ததாக ஐதீகம். பார்வதி கலியாண கோலத்துடன் ஸ்வாமி அகஸ்தியர் முனிவருக்கு காக்ஷியளித்த ஸ்தலமாகும்.

திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு திருவடி சூட்டிய ஸ்தலமும் இதுவேயாகும். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசு பதிகங்கள் பாடியிருக்கிறார்கள்.

*திருக்கொள்ளம்பூதூர்:* கொரடாச்சேரி ரயில்வே ஸ்டேஷனுக்கு வடபுறம் நான்கு மைல் தூரத்தில் உள்ள சிவஸ்தலம் வெட்டாற்றங் கரையில் அமைந்துள்ளது.

ஸௌந்தராம்பாள் ஸமேத வில்வவனேசுவரர். சாண்டில்ய ரிஷியால் பூஜிக்கப் பட்டவர்கள். திருஞானசம்பந்தமூர்த்தி ஆற்றில் வெள்ளம் வந்த காலத்தில் தானே ஓடத்தை நடத்தி திருப்பதிகங்கள் பாடி ஆற்றை சுலபமாய் தாண்டியதாய் கூறப்படுகிறது. பிரதி வருஷமும் ஐப்பசி மீ அமாவாசையன்று இவ்வுற்சவம் நடைபெறுகிறது.

திருவிற்குடி: இது ஒரு தென் ரயில்வேயில் திருவாரூர் மாயவரம் ரயில் மார்க்கத்தில் இடையே உள்ள க்ஷேத்திரம். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒரு மைல் தூரத்தில் கோவில் உள்ளது. *அஷ்டவீரத்தலங்களில் ஒன்று.* ஜலந்தராசுரனை சம்கரித்த ஸ்தலம்.

## *குடமுருட்டி ஆற்றங்கரையில் உள்ள சில க்ஷேத்ரங்கள்.*

*திருவேதிகுடி:* வேதபுரீசுரர்—மங்கையர்க்கரசி: திருக்கண்டியூரிலிருந்து கிழக்கே 1 மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். இத்தலத்திற்கு சமீபத்தில் வடகிழக்கில் 1 மைலில் *திருச்சோற்றுத்துறை* இருக்கின்றது. இவ்விரண்டு ஸ்தலங்களுக்கு மத்தியில் குடமுருட்டியாறு ஓடுகின்றது.

திருவேதிகுடி திருவையாறு சப்த ஸ்தானங்களில் 4-வது ஸ்தலம். வேதங்கள் பூஜித்த ஸ்தலம். சுவாமி வாழை மடுவில்

உற்பத்தியானவர். அவருக்கு 'வாழை மடுநாதர்' என்ற பெயரும் உண்டு. பிள்ளையாருக்கு 'வேதப்பிள்ளையார்' என்று பெயர். பங்குனி 13 - 15-ந் தேதிகளில் சூரியபூஜை.

*ஆவூர்*: பசுபதீசுரர்—மங்களநாயகி, பிருமதீர்த்தம். இந்த தலத்திலுள்ள ஆலயத்துக்குப் பசுபதீச்சுரம் என்று பெயர். இது பசுக்கள் பூசித்தஸ்தலம். சுவாமிமலை, நல்லூர ஆலயங்களைப் போன்று 'கட்டு மலை'.

*திருச்சேறை*: என்பது உடையார் கோயில் - கும்பகோணத் திற்கு தென் கிழக்கில் 9 மைல். செந்நெறியப்பர்—ஞானவல்லி அம்மை.

கும்பகோணத்திற்கு தென் கிழக்கே 9 மைல் தூரத்தில் இருக்கிறது. தௌமியரிஷி பூசித்த ஸ்தலம்.

இந்த ஸ்தலத்தை சிவனும் விஷ்ணுவும் அலங்கரித்துக கொண்டிருக்கிறார்கள். விஷ்ணுவின் பெயர் ஸாரநாதர். அம்பாளின் பெயர் ஸாரநாயகி.

இந்த ஸ்தலத்தை ஸாரக்ஷேத்ரம் என்று சொல்வதுண்டு. காவேரிக்கும், வருண பகவானுக்கும் இவ்விடத்தில் விஷ்ணு பிரத்யக்ஷமானார். இந்த ஸ்தலம் திருமங்கை ஆழ்வாரின் மங்களா சாஸனததைப் பெற்றதாகும். மார்க்கண்டேயரும் தௌமியரும் பூஜித்த சிவபெருமானுக்கு சென்னெறியப்பர் என்றும், அம்பிகைக்கு ஞானவல்லியம்மை என்றும் கூறுவர். அப்பர், சம்பந்தர் இவர்களின் பதிகங்கள் பெற்ற ஸ்தலம்.

*திருமலைராயன்*: ஆற்றங்கரை மேல் வீற்றுள்ள ஸ்தலங்கள்.

*திருச்சத்திமுத்தம்*: சிவக்கொழுந்தீசுரர் - பெரிய நாயகி யம்மை சூலதீர்த்தம்.

தாராசுரம் ரயில்வே ஸ்டேஷனுக்கு தென்மேற்கே 2 மைல் தூரம். பராசக்தி ஸ்வாமியைத் தழுவி முத்தங்கொடுத்த ஸ்தலம். அந்த உருவமும் கோயிலில் இருக்கின்றது. திருநாவுக்கரசு நாயனாரின் பதிகத்தைப் பெற்றுள்ளது.

*திருப்பட்டீச்சுரம்*: பட்டீசுரர் – பல்வளைநாயகி. ஞான தீர்த்தம். காமதேனுவின் புத்திரிகள் நால்வரிற்பட்டி என்பவள் பூஜித்த ஸ்தலம். சிவபெருமான் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருக்கு வெயில் வெப்பந்தணிக்கும் பொருட்டு ஒரு

பூதத்தைக்கொண்டு முத்துப்பந்தல் நிழவற்றுவித்த ஸ்தலம். ஸ்ரீராமருக்குச் சாயை ஹத்தி தோஷம் தீர்த்த ஸ்தலம்.

மார்கழி மாதம் அமாவாசை தினம் இந்த ஐதீகம் நடத்தப் படுகின்றது. கோயிலில் நந்திகள் சற்று விலகியிருக்கின்றன. சம்பந்த ஸ்வாமிகள் வெளியிலிருந்து தரிசனம் செய்தற்பொருட்டு அப்படி விலகினதாகச் சொல்லுகிறார்கள். முதலில் இருக்கும் நந்தி பெரிது. நல்ல வேலைப்பாடுள்ளது. கோவிந்த தீக்ஷதர் என்னும் மந்திரி அதிக திருப்பணி செய்தாராம். அவருடைய உருவமும், அவர் மனைவியாருடைய உருவமும் அம்மன் சந்நிதியி லிருக்கின்றன.

*திருப்பழையாறை வடதளி:* சோமேசுரர்—சோமகலா நாயகி, சோமதீர்த்தம். இது பழையறை என்றும் வடதளி என்றும் இரண்டு ஸ்தலங்களாக இருக்கின்றது. வடதளியில் சுவாமி பெயர்—தர்மபுரீசுரர். தேவியார்—விமலநாயகி. பழையாறை—சந்திரன் பூசித்த ஸ்தலம். அமர்நீதி நாயனார் வாழ்ந்திருந்தபதி.

*அரிசொல் ஆறு:* (அரிசிலாறு) - இந்த ஆற்றங்கரை யிலும் மருங்கிலும் அமைந்துள்ள சில க்ஷேத்ரங்கள்.

*சிவபுரம்:* கும்பகோணத்திற்கு தென்கிழக்கு 3 மைல் தூரம் - சிவபுரநாதர் - சிங்காரவல்லி; சண்பக விருக்ஷம். விஷ்ணு வராகரூபியாய் பூஜித்த ஸ்தலம். அப்பர், சம்பந்தர் இவர்களின் பதிகங்களை பெற்ற ஸ்தலமாகும்.

*திருக்கண்டிநல்லூர்:* (சாக்கோட்டை). கும்பகோணத் திற்கு அருகிலுள்ள ஸ்தலம். அமிருதகலேசுரர்-அமிருதவல்லி. சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்ற ஸ்தலம்.

*அரிசிற்கரைபுத்தூர்:* (அழகார்புத்தூர்) படிக்காசளித்த ஈசுரர். அழகாம்பிகை. உண்மையாநந்த முனிவர் பூஜித்த ஸ்தலம். புகழ்த்துணை நாயனார் சிவபெருமானை பூஜித்து முக்தி யடைந்த க்ஷேத்திரம். அப்பர், சுந்தரர் முதலியோர்களின் பாடல் பெற்ற ஸ்தலமாகும்.

*திருநறையூர் சித்தீசுவரம்:* கும்பகோணத்துக்குத் தென் கிழக்கு 5½ மைல். இந்த ஸ்தலத்தில் திரிபுரசுந்தரியும், சித்த நாதேசுரரும் கோயில் கொண்டுள்ளார்கள். பிரும்மா பூஜித்த இந்த ஸ்தலத்தின் மகிமையை மூன்று நாயன்மார்களும் பாடியிருக் கிறார்கள்.



திருக் குடந்தை : ஸ்ரீ வேதவிநாயகர்



திருக் குடந்தை : ஸ்ரீ வேதவிநாயகர் கோயில்



கொட்டையூர் : ஸ்ரீ கோடீசுவரர் கோயில்



ண்ணகர் : ஸ்ரீ உப்பிலியப்பன் கோயில்

நாச்சியார் கோவில் என்று அழைக்கப்படும் இந்த க்ஷேத்ரத்தை லக்ஷ்மியும், சௌந்திரராஜப் பெருமாளும் அலங்கரித்துக்கொண் டிருக்கிறார்கள். ஒரு காலத்தில் மேதவமுனியின் கன்னிகையை பலிமி பிடித்துக்கொண்டுபோக பகவான் பலிமியை சபித்து கன்னிகையை விடுவித்து மேதவ முனிக்கும், இந்த கன்னிகைக்கும் அனுக்ரஹத்தையும் புரிந்தார். திருமங்கை ஆழ்வாரின் மங்களாசாஸனத்தை பெற்ற இந்த கோவில் ஆதியில் சிவக்ஷேத்ரமாக இருந்ததாக கருதப்படுகிறது.

*திருநாகேசுவரம்:* கும்பகோணத்துக்கு கிழக்கே 4 மைல். சண்பகாரணிய க்ஷேத்திரம். பெரிய புராணஞ் செய்தருளிய சேக்கிழார் நாயனார் மிகுந்த அன்பு வைத்திருந்த ஸ்தலம். அதற்கு திருஷ்டாந்தமாக அவர் தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலே திருக்கோயில் ஒன்று கட்டுவித்து அதற்கு திருநாகேச்சுரம் என்று பெயரிட்டிருக்கிறார். சேக்கிழார் விக்கிரகமும் கோயிலிலிருக்கின்றது.

இங்குள்ள கோயில் பெரிது. சூரிய புஷ்கரணி தீர்த்தம் - சங்கநிதி, பதுமநிதி, மகாசாஸ்தா இவர்கள் விக்கிரகங்களும் இருக்கின்றன. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பக்கத்திற் பரவையார் விக்கிரகம் இருக்கின்றது. சந்திரன், சூரியன், ஐந்தலைநாகம் இவர்கள் பூசித்த ஸ்தலம். ஞானசம்பந்தர் பதிகங்கள் பாடியுள்ளார்.

*திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோவில்)* கும்பகோணத்திலிருந்து மூன்று மைல் கிழக்கில் அமைந்துள்ள க்ஷேத்திரம். ஒப்பிலியப்பன் - சுவாமி. பூதேவி - அம்பாள். இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீராமர், மார்க்கண்டேயர், தர்மதேவை, காவேரி முதலியவர்களுக்கு மகாவிஷ்ணு பிரத்யக்ஷமானார். இத்தலம் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் இவர்களின் மங்களாசாஸனத்தை பெற்றதாகும். இந்த க்ஷேத்ரத்தில் பலர் உபநயன, விவாக கிரியைகளை செய்யும் வழக்கத்தைக்கொண் டிருக்கின்றனர்.

*திருவீழிமழலை:* நன்னிலத்திற்கு வடமேற்கில் அரிசில் ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. காத்யாயன மகரிஷியின் யாகத்தில் தோன்றின காத்யாயினியை பகவான் மணந்து மணவாள கோலத்துடன் இந்த க்ஷேத்ரத்தில் காக்ஷியளித்துக் கொண்டிருக்கிறார். ஒரு காலத்தில் மகாவிஷ்ணு 1008 தாமரை மலர்களால் பகவானை பூஜை செய்து கொண்டிருந்தபொழுது, விக்னேசுவரர் ஒரு தாமரை மலரை எடுத்து ஒளித்து வைத்துக்

கொண்டார். ஒரு மலர் குறைந்துவிட்டதை உணர்ந்த தாமரைக் கண்ணனை விஷ்ணு தன்னுடைய ஒரு நேத்ரத்தை அர்ப்பணம் செய்து பூஜையை முடித்தார். சிவபெருமான் மகிழ்ந்து மஹா விஷ்ணுவிற்கு சக்ராயுதத்தை அளித்தார். அகஸ்தியர், வஸிஷ்டர் முதலிய முனிவர்களால் பூஜிக்கப்பட்ட இத்தலம் மூவர்களின் பாடல்களைப் பெற்றுள்ளது.

பஞ்சம் ஏற்பட்ட ஒரு சமயத்தில் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசுநாயனாரும், பஞ்சம் நீங்கும் வரையில் பகவானிட மிருந்து ஒவ்வொரு தினமும் பொற்காசு பெற்றார்கள். சிற்பத்தில் சிறந்த "வவ்வால் அடி" என்ற மண்டபம் இருக்கிறது. சுவாமி-விழி அழகேசர். அம்பாள் - சுந்தரகுசாம்பாள்.

*திரு அன்னியூர்* : திருவீழிமழலைக்கு இரண்டு மைல் வட மேற்கே யுள்ளது. சுவாமி - அக்னீசுவரர், அம்பாள் - பார்வதி. அக்னி பகவான் பூஜித்த ஸ்தலம். திருநாவுக்கரசு நாயனாரின் பதிகம் பெற்றுள்ளது.

*திருநல்லம்*: (கோனேரிராஜபுரம்) திருவன்னியூருக்கு வடக்கே இரண்டு மைல் தூரம். சுவாமி - உமாமஹேசுவரர் அம்பாள் - மங்களாம்பாள். உமாதேவியாலும், தேவர்களாலும் இந்த ஸ்தலம் பூஜிக்கப்பட்டதாகும். இங்கு பெரிய நடராஜ மூர்த்தியிருக்கிறது. திருநாவுக்கரசு, திருஞானசம்பந்தர் இவர்களின் பதிகங்கள் பெற்ற ஸ்தலம்.

*திருக்கருவிலி* : திருநல்லம் க்ஷேத்திரத்தின் தென்மேற்கே 2½ மைல் தூரம். சுவாமி - சற்குண நாதேசுவரர், அம்பாள் - சர்வாங்க நாயகி. இந்திரனும், தேவர்களும் பூசித்த ஸ்தலம். சற்குணன் என்னும் அரசன் பூசித்துப் பிறவிக் கடலைக் கடந்த ஸ்தலம். தேவாரத்தில் உருத்திர கணங்கள் பூசித்ததாக சொல்லப்படுகின்றது.

*திலதைப்பதி*: (திலதர்ப்பணபுரி) சுவாமி - முக்தீசுரர். அம்பாள் - பொற்கொடியம்மை. சந்திர தீர்த்தம். பூந்தோட்டம் ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே 1 மைல் தூரம் அரிசிலாற்றின் தென்கரை.

சிதலைப்பதி என வழங்கும் என்ற ஊர். ½ மைலில் இருக்கிறது. சந்திரன் பூஜித்த ஸ்தலம். தசரத சக்கரவர்த்திக்கு ராம லக்ஷ்மணர்கள் திலதர்ப்பணம் செய்த ஸ்தலம்.

இங்கு தர்ப்பணம் சிரார்த்தம் செய்வது விசேஷம்.

சிதலைப்பதியில் 'சீதளாதேவி' அம்மன்கோவில் சமீபத்தில் புதுப்பிக்கப்பட்டு பிரசித்திபெற்று வருகிறது.

சமீபத்தில் உள்ள கூத்தனூர் கிராமத்தில் ஒட்டக்கூத்தர் என்ற புலவரால் ஸ்தாபிக்கப்பட்ட சரஸ்வதி கோவில் மிகப் பிரசித்தம்.

*பூந்தோட்டம்:* இது திருவாரூர் - மாயவரம் ரயில் பாதையில் உள்ள க்ஷேத்ரம். இந்த க்ஷேத்ரத்தில் பூங்கோதை அம்மனும், புவனேசுரரும் அமர்ந்திருக்கிறார்கள்.

*திரு அம்பர் பெருந் திருக்கோவில்:* சுவாமி - பிரமபுரீசர் அம்பாள் - பூங்குழலம்மை. பிர்மதீர்த்தம், புன்னை விருக்ஷம். பூந்தோட்டம் ரயில்வே ஸ்டேஷனுக்கு தென் கிழக்கில் 2 மைல் தூரம். அம்பர்மாகாளத்துக்கு கிழக்கே ½ மைல். சோமாசிமாற நாயனார் முக்தியடைந்த ஸ்தலம். கோட்செங்கட் சோழ ராஜாவால் கட்டப்பட்ட 64 மாடக் கோயில்களில் ஒன்றாகும். இந்தவிடத்தில் கோட்செங்கட் சோழனுக்கு பகவான் மணக் கோலத்துடன் காக்ஷியளித்துள்ளார்.

*திருவம்பர்மாகாளம்:* இது கோயில் திருமாகாளம் என்று வழங்குகின்றது. 'அம்பர்' என்னும் ஸ்தலத்திற்கு மேற்கே ½ மைல். சோமாசிமாற நாயனார் யாகம் செய்த மண்டபம் இருக்கின்றது. யாக உற்சவம் வைகாசி ஆயில்யத்தில் நடக்கின்றது. அம்பன், அம்பாசூரன் என்னும் ராக்ஷதர்களைக் கொன்ற பாபம்தீர காளி பூஜை செய்த ஸ்தலம் - பாணலிங்கம். சோமாசிமாற நாயனார், அவர் பத்தினி, சுந்தரமூர்த்தி நாயனார் பரவை நாச்சியார் தியாகராஜாவின் விக்ரகம், தேவியாருடைய விக்கிரகம் முதலியவை இங்கு காணப்படுகின்றன. திருஞான சம்பந்தர் பதிகம் பெற்றுள்ளது.

*திருநள்ளாறு:* தர்ப்பாரண்யயேச்வரர்—சுவாமி. பூண்முலை நாயகி—அம்பாள். பேரளம் - காரைக்கால் ரயில் பாதையில் உள்ள ரயில்வே ஸ்டேஷன், காரைக்காலுக்கு மேற்கில் 3 மைல் தூரத்திலுள்ள இந்த க்ஷேத்திரம் அரிசிலாற்றங்கரையின் மேல் அமர்ந்துள்ளது. ரதி தன் மணாளன் காமனை அடைந்த இந்த க்ஷேத்ரத்தில்தான் நளச்சக்ரவர்த்தி சனீசுவர பகவானின் தோஷம் நீங்கப் பெற்றார். சனீசுவரர், முசுகுந்தன், நளச்சக்ர

வர்த்தி முதலியவர்களால் பூஜிக்கப்பட்ட க்ஷேத்ரம். **சப்த விடங்க** ஸ்தலங்களில் இதுவும் ஒன்று.

*திருவாரூர் - திருநள்ளாது - திருநாகைக்காரோணம் - திருக்காருயில் திருக்கோளிலி - திருவாய்மூர் - திருமறைக்காடு.

*முடிகொண்டான் ஆறு:* குடமுருட்டியாற்றின் ஒரு கிளை நதியாக உள்ள '*முடிகொண்டான்*' கரையில் அமைந்துள்ள சில க்ஷேத்ரங்களை இங்கு குறிப்பிடுகிறோம். சில க்ஷேத்திரங்கள் முடிகொண்டான் நதிக்கரையிலும், சில சற்று விலகியும் உள்ளன.

*திருப்பனையூர்:* திருவாரூருக்கு வடக்கு 6½ மைல் தூரம். சுவாமி - சௌந்தரிய நாதர். அம்பாள் - பெரியநாயகி. ஸ்தல விருக்ஷம் - பனை. அமிருத புஷ்கரணி தீர்த்தம். பராசர முனிவர் பூஜை செய்த ஸ்தலம். இங்கு வளர்ந்த கரிகால் சோழனுக்குப் பிள்ளையார் துணையிருந்தாராம்.

*ஸ்ரீ வாஞ்சியம்:* சுவாமி - ~~மதுவனே~~சுரர். அம்பாள் - ~~மதுவன~~நாயகி. விஷ்ணு சிவபெருமானை பூஜித்து தம்மை விட்டுப் பிரிந்த லக்ஷ்மி தேவியை அடையப்பெற்ற ஸ்தலம். சந்தன விருக்ஷம் பிரகாரத்தில் இருக்கின்றது.

குப்தகங்கை தீர்த்தம் கோயிலுக்கு வடக்கில் உள்ளது. இதில் கார்த்திகைமீ ஞாயிற்றுக்கிழமைகளில் ஸ்நானம் செய்வது விசேஷம். இத்தலத்தில் இறப்பவர்களுக்கு யமவாதனை இல்லை. கோவிலில் யமனுக்கு ஒரு சந்நிதியும்; சுவாமிக்கு யமவாகனமும் இருக்கின்றன. இத்தலம் காசிக்குச் சமமாக சொல்லப்படும் தென்னாட்டுத்தலங்கள் * ஆறில் ஒன்று.

+ முக்தியளிக்குந் தலங்களில் ஒன்று.

* திருவெண்காடு - திருவையாறு - மாயூரம் — திருவிடைமருதூர் - திருச்சாய்க்காடு - திருவாஞ்சியம்.

+ *முக்தி தலங்கள்* : காசி - மாயாபுரி - அவந்தி - காஞ்சி - அயோத்தி - ஸ்ரீவாஞ்சியம் - மதுரை.

*நன்னிலம்* : இது ஒரு ரயில்வே ஸ்டேஷன். முடிகொண்டான் ஆற்றங்கரையில் உள்ளது. சுந்தரரால் பாடப்பெற்ற ஸ்தலம். சுவாமி சன்னிதியில் தேனடையிலிருந்து வருவதால் சுவாமிக்கு மதுவனேசுரர் என்று பெயர். இது சூரியனால் பூஜிக்கப்பட்ட க்ஷேத்திரம். நன்னிலத்திற்கு மேற்கே 6 மைல் தூரத்தில்

*புத்தாறு* என்னும் நதியின் வடகரையில் அமைந்துள்ள ஒரு மகா புண்ணிய க்ஷேத்திரமாகியது.

*திருப்புகலூர்:* சுவாமி - வர்த்தமானேசுரர் - அக்னீசுரர். அம்பாள் - கருந்தாழ் குழலியம்மை. அக்னிதீர்த்தம் - புன்னை விருக்ஷம். நன்னிலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு கிழக்கு 4 மைல் அக்னி பூஜித்த ஸ்தலம் - திருநாவுக்கரசு முக்திபெற்ற ஸ்தலம் - ஸ்வாமிக்கு பலவித புஷ்பமாலை கட்டிக்கொடுக்குந் தொண்டு செய்துவந்த முருகநாயனாரின் ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு பொற்பாளம் அளித்த க்ஷேத்திரம். சுவாமி சிங்க ரூபியாய் வந்து அப்பர் சுவாமிகளை விழுங்கும் பாவனை சிலையிற் காட்டப்பட்டிருக்கின்றது.

*திருமருகல்:* ஸ்வாமி - மாணிக்கவர்ணேசுவரர்-அம்பாள்-வண்டுவார்குழலி அம்மை. இந்த ஸ்தலம் நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழககே 6 மைல் தூரத்தில் உளது. மார்க்கண்டேயர் பூஜித்த ஸ்தலங்களில் ஒன்று. பக்தையான ஓர் வாணிகப் பெண்ணின் இறந்த புருஷனை உயிர்ப்பித்த ஸ்தலம். திருஞான சம்பந்தர் அந்தப் பெண்ணின் பரிதாப நிலையையும், பக்தியையும் கண்டு இரங்கி பகவானை பிரார்த்திக்க, அவளுடைய புருஷன் உயிர் பெற்றதாக புராணம் கூறுகிறது.

*திருச்சாத்தமங்கை:* சுவாமி மாந்தீசர் - அயவந்தீசர். அம்பாள் தையலாம்பாள் - மலர்கண்ணி. இத்தலம் நன்னிலத்திற்கு கிழக்கே 8 மைல் தூரம். அஷ்டவசுரர் ஈசனை பூஜித்த ஸ்தலம். திருநீலநக்க நாயனார் இந்த ஸ்தலத்தில் பூஜை செய்து கொண்டிருந்தபொழுது, லிங்கத்தின் மீது ஒரு பூச்சியை கண்ணுற்ற அவர் மனைவி தனது வாயினால் ஊதி அந்த பூச்சியை அகற்றினாள். இதை கவனித்த நாயனார் இவ்விதம் வாயினால் ஊதியதை தெய்வாபசாரமாகக் கருதி தன் மனைவிமேல் கோபங் கொண்டு அவளை விலக்கி வைத்தார். பகவான் அவர்களுக்கு பிரத்யக்ஷமாகி, அவளுடைய செய்கையில் தவறில்லை என்று தெரிவித்து தம்பதிகளை சேர்த்துவைத்தார்.

*திருச்செங்காட்டங்குடி:* சுவாமி - கணபதீசுவரர் அம்பாள் - திருக்குழன்மாது. இந்த ஸ்தலம் நன்னிலத்திற்கு தென் கிழக்கில் 7 மைலில் உள்ளது. கஜமுகாசுரனைக் கொன்ற பாவத்தை தீர்த்துக்கொள்ள விக்னேசுவரர் இத்தலத்தில் பூஜை செய்தார். சிறுத்தொண்ட நாயனாரின் பக்தியை சோதனை செய்ய பிள்ளைக் கறி அமுது படைக்கச்செய்து, அவர் பக்திக்கு மெச்சி அனுக்ரகம் செய்த ஸ்தலமும் இதுவேயாகும்.

*திருக்கண்ணபுரம்:* ஸ்வாமி - சௌரிராஜப்பெருமாள். அம்பாள் – கண்ணபுரிநாயகி. திருப்புகலூருக்கு இரண்டு மைல் தூரத்திலுள்ள விஷ்ணு க்ஷேத்ரம். பஞ்சகிருஷ்ண க்ஷேத்ரங்களில் இது ஒன்று. கண்வமகரிஷிக்கு பிரத்யக்ஷமான இத்தலம் நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கை ஆழ்வார் முதலியோர்களின் மங்களா சாஸனத்தைப் பெற்றதாகும். இவ்வூருக்கு கிழக்கில் ½ மைல் தூரத்தில் ராமநதீசுவரம் என்ற சிவஸ்தலம் இருக்கிறது. ஸ்வாமி - ராமலிங்கேசுவரர். அம்பாள்-கருவார்குழலியமமை. திருஞானசம்பந்தரின் பதிகம் பெற்று உள்ளது. இராமனுலும், மார்க்கண்டேயராலும் பூஜிக்கப்பட்ட ஸ்தலம்.

*ஓடம்போக்கியாறு:*

*எண்கண்:* கொரடாச்சேரி ரயில்வே ஸ்டேஷனுக்கு சமீபம். சிவன், உமை, சுப்ரமணியர், வள்ளி, தெய்வானை, முக்கிய மூர்த்திகள். ரிஷிகள் இங்கு சுப்ரமணியர், சூரனைக் கொன்ற விஷயத்தை அறிந்த ஸ்தலம்.

*திருக்கண்ணமங்கை:* இது ஓர் விஷ்ணு ஸ்தலம் – திருவாரூருக்கு மேற்கே ஐந்து மைல் தூரத்தில் உள்ளது ஸ்வாமி-பக்தவத்ஸலர். அம்பாள் - அபிஷேகவல்லி. வருணனுக்கும் ரோமசர்ம ரிஷிக்கும் விஷ்ணு பிரத்யக்ஷமான ஸ்தலம். இத்தலம் திருமங்கை ஆழ்வாரின் மங்களாசாஸனம் பெற்றுள்ளது.

*திருவாரூர்:* இது ப்ருத்வீலிங்கம் கொண்ட க்ஷேத்ரம். இது காசிக்கு ஸமானமாகச் சொல்லப்படும் ஆறு க்ஷேத்ரங்களில் ஒன்று. ஓடம்போக்கியாற்றங்கரையின் வடகரையில் அமைந்துள்ளது. பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்று, இவ்வூரில் பிறந்தவர்களுக்கு முக்தியுண்டு. ஸப்த விடங்கர்களில் இது முக்கியமான ஸ்தலம் – தியாகேசர் - கமலாம்பாள் - வல்மீகநாதர் - நீலோத்பலாம்பாள் கொண்ட இந்த க்ஷேத்திரத்தில் 'கமலாலயம்' என்ற விசேஷ புண்ணிய தீர்த்தம் உண்டு. ஈசானர், அகஸ்தியர் வசிஷ்டர், மார்க்கண்டேயர், இந்திரன், மனுநீதி சோழன் முதலியோர்களால் பூஜிக்கப்பட்ட ஸ்தலம். முசுகுந்தர் என்ற சக்ரவர்த்தி இந்திரனிடமிருந்து கிடைத்த விதிவிடங்க தியாகராஜரை இந்த ஸ்தலத்தில் பூஜை செய்து வந்தாராம். சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டர் தொகை பாட ஆரம்பித்தபொழுது பகவான் 'தில்லைவாழ் அந்தணர்' என்ற அடியை எடுத்துக்கொடுத்து பாட உத்தரவிட்டாராம். சுந்தரமூர்த்தி நாயனருக்கு தியாகேசரே, பக்திக்கு இரங்கி பல தொண்டுகள்



தஞ்சாவூர்—பிரஹதீசுவரர் ஆலயம்

புரிந்து மகிழ்வித்தார். மனுநீதி சோழனின் நீதிக்கு மெச்சி அவனுடைய மகனை உயிர்ப்பித்தார். இறந்த பசுங்கன்றும் உயிர் பெற்று எழுந்தது. விறல்மிண்ட நாயனார், கழற்சிங்கநாயனார், செறுதுணை நாயனார், முதலியோர் பெரும்பாலும் இந்த ஸ்தலத்திலேயே வசித்து பரமபதம் அடைந்தார்கள். மாணிக்கவாசக ஸ்வாமிகளும் இத்தலப்பெருமையை பாடியுள்ளார். ஏனைய தேவர்களும் அனுதினம் தியாகேசரை பூஜித்து வருவதாக கருதப்படுகிறது.

*திருக்கண்ணங்குடி* ; கீழ் வேளூருக்கு கிழக்கில் 2 மைல் தூரத்திலுள்ளது. விஷ்ணு ஸ்தலம். ஸ்வாமி - தியாமளமேனி மூர்த்தி. அம்பாள் - அரவிந்தவல்லி. சைத்யர் - கௌதமர் முதலிய முனிவர்களுக்கு விஷ்ணு காக்ஷிகொடுத்த ஸ்தலம் - திருமங்கை ஆழ்வாரின் மங்களாசாஸனம் பெற்ற ஸ்தலம்.

*கீழ்வேளூர்*: சிக்கிலின் மேற்கே 4 மைலில் உள்ளது. ரயில்வே ஸ்டேஷன். சிவஸ்தலம் சுவாமி - அக்ஷய லிங்கம். அம்பாள் - கடினஸ்தனநாயகி. சிவஞான தீர்த்தம் - அக்ஷய தீர்த்தம் - கருங்கல்கட்டுமலை - இலந்தை மரம் - நடராஜமூர்த்தி - இவைகள் முக்கியம். ஸ்கந்தர் பூஜித்த ஸ்தலம் - அகஸ்தியர் பூஜித்து சிவன் வலது திருவடி தரிசனம் செய்த ஸ்தலம். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பதிகம் பாடியுள்ளார்கள்.

*திருச்சிக்கில்* : கீழ்வேளூரிலிருந்து கிழக்கே 4 மைல் தூரம் ரயில்வே ஸ்டேஷன் - சிவஸ்தலம். ஸ்வாமி - நவநீதலிங்கம். அம்பாள் - நெடுங்கண்ணிநாயகி. சிங்கார வடிவேலர்—வள்ளி-தெய்வானை, முக்யஸ்தலம். வஸிஷ்ட ரிஷி -- வெண்ணெயை லிங்கமாக்கி பூஜித்தார் - கிருஷ்ணர் காமதேனுவும் பூஜித்தார்களாம். ஷண்முகம் தேவர்களுக்கு அபயங் கொடுத்து சூரனை விரட்டி சம்ஹாரம் செய்த ஸ்தலம். இக்கோவிலில் வாமனப் பெருமாள், கிருஷ்ணன் சந்நிதியுமுண்டு, திருஞானசம்பந்தர் - சுந்தரமூர்த்திகள் - வைப்பு ஸ்தலம். பாற்குளம், நவனீத தீர்த்தம், கட்டுமலை - விசேஷமானவை.

*திருநாகைக்காரோணம்*: என்பது நாகப்பட்டினம். நாகூரின் தெற்கே 4 மைலில் உள்ளது - சிவஸ்தலம். ஸ்வாமி - ஆதி புராணேசுவரர் அம்பாள் - நீலாயதாக்ஷி. முசுகுந்தர் பூஜித்த சப்தவிடத்தில் ஒன்று. வலையரான அதிபக்த நாயனார் தினமொரு மீன் சிவனுக்கென்று கடலில்விட, அநேக தினங்களில் ஒரு மீனே கிடைக்க அதையும் தான் பட்டினியிருந்து கடலில்

விடவே, சிவபெருமான் அவருடைய உறுதியை மெச்சி சிவபதம் அளித்தார்.

ஷைகோவிலில் காயாரோகணேசர்-சட்டைநாதர், நாகாம்பாள்-பிரும்ம தீர்த்தம் - வஜ்ர தீர்த்தம் முக்யமானவை. புண்டரீக ரிஷிக்கு காசி, காஞ்சி, குடந்தை க்ஷேத்ரங்களில் முக்தி கொடாமல் இந்த க்ஷேத்ரத்தில் காயத்தோடு ஐக்கியம் செய்து கொண்டார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி நாயன்மார்கள் பதிகம் பாடியுள்ளார்கள்.

பெருமாள்கோவிலில் சௌந்திரவல்லி ஸமேத சௌந்தர ராஜர். திருமங்கையாழ்வாரின் மங்களா சாஸனம் பெற்றுள்ளது.

*திருமறைக்காடு:* இந்த க்ஷேத்ரத்தை வேதாரண்யம் என்றும் சொல்வார்கள். இநத ஸ்தலம் காவேரி கிளை நதிகளில் அமைந்திராவிடினும் கிழக்கு சமுத்திரக்கரையோரமாய் ஸ்நான விசேஷத்திற்கு இராமேசுவர க்ஷேத்ரத்தைப்போல் புனித ஸ்தல மாகும். திருத்துரைப்பூண்டி வேதாரண்யம் ரயில் பாதையில் உள்ள ஸ்டேஷன். சிவஸ்தலம். சுவாமி - வேதாரண்யேசுவரா அம்பாள் - யாழைப்பழித்த மொழியாள். இங்கு உங்கார கணபதி, அமிருத நடனம், மணிகர்ணிகை, வேததீர்த்தம் சூரிய தீர்த்தம், சமுத்ரம், வன்னிமரம், ஆதி சேது - நான்குமுகம் கொண்ட தக்ஷிணாமூர்த்தி, சனீசுவர பகவான், அகஸ்தியர், வஸிஷ்டர், வேதங்கள், முசுகுந்தர் பூஜித்த சப்தவிடங்கள் - முதலியன பேறு பெற்றவைகளாகும்.

வேதக்காப்பிட்டு அடைத்திருந்த கோவில் கதவை திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் பதிகம்பாடி கதவைத் திறக்கவும், பின்னர் சாத்தவும் பாடினார்கள். புராதன முக்தி ஸ்தலம். ஆடி, தை அமாவாசைகளில் சமுத்ர ஸ்நானம் முககியம். தீப நெய்யை தன் ஓட்டத்தினால் தூண்டி எரியும்படி செய்த ஒரு எலிக்கு மறு ஜன்மத்தில் மகாபலி சக்ரவர்த்தியாக பிறக்க அனுக்ரகம் செய்த தாக புராண வரலாறு. மூவர்கள் பதிகம் பாடியுள்ளார்கள்.

*அகத்தியான்பள்ளி:* சுவாமி - அகஸ்தியேசர் அம்பாள்-பாகம் பிரியாள். வேதாரண்யத்தின் தெற்கே 1 மைலில் உள்ளது. இது ஒரு ரயில்வே ஸ்டேஷன் சிவஸ்தலம். அகஸ்தியர் பூஜித்த ஸதலம். திருஞானசம்பந்தர் பதிகம் பாடியுள்ளார்.

# காவேரியின் செல்வங்கள்.

## முடிவுரை

இவ்விதம் காவேரி ஒரு தெய்வ கன்னிகையாக தலைக் காவேரியில் ஜனனம் செய்து, ஓட்டமும் நடையுமாக துள்ளி குதித்துக்கொண்டே வருகிறாள். மைசூர் சமஸ்தானத்தில் கண்ணைக் கவர்ந்து சிரித்து விளையாடும் தேஜோமயமான பெண் மணியாக விளங்குகிறாள். சேலம், திருச்சி ஜில்லாவில் எழில் மிகுந்த பருவத்துடன், அகண்டமான ரூபத்தில் பூரணவாஹினி யாக கம்பீரத்தோடு அமைந்துவரும் வனிதையாகச் செல்கிறாள். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதனின் பாதசேவை செய்து மாலை சூட்டும் தருணியாக காணப்படுகிறாள். தஞ்சை எங்கும் தன் குழந்தை களாகிற கிளைகளைப் பரப்பி தன் சக்தி பூராவையும் மக்களுக்கே உரிமையாக்கி, ஊட்டி வளர்க்கும் மாதாவாக பரிணமித்து, பொறுமை, சாந்தம், சந்தோஷம் இவைகளை ஆபரணமாக அணிந்து செல்கிறாள். பின்னர் உடல் ஒடுக்கி, நடை தளர்ந்து வயோதிக சுமங்கலியின் மங்களகரமான தோற்றத்துடன் எல்லோரையும் ஆசீர்வதித்துக்கொண்டு கடலைப் போய் அடைகிறாள் அன்னையான காவேரி.

இவள் கரையில் சோழர்கள் ஆண்டார்கள். பாண்டியர் களும், சேரர்களும் ஆண்டார்கள், சுல்தான்கள் ஆண்டார்கள் எத்தனையோ சாம்ராஜ்யங்களைக் கண்டவள் காவேரி. இன்னும் எத்தனையோ சாம்ராஜ்யங்களைக் காணப்போகிறவள் காவேரி. ஆனால் அத்தனை நாகரிகங்களும் அமுதுடன் கலந்து தமிழ் மக்களுக்கு ஊட்டுபவள் காவேரியே.

## காவேரி வாழ்க

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ வாடை யது போர்த்திக்
கருங் கயற்கண் விழி தொல்கி
நடந்தாய் வாழிகாவேரி.

பூவார்சோலை மயிலாலப்
புரிந்துகுயில்க ளிசைபாடக்
காமர் மாலை யருகசைய
நடந்தாய் வாழி காவேரி.

வாழி, எந்தன் வளநாடு
மகவாய் வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
மொழிவாய் வாழி காவேரி.

(சிலப்பதிகாரம்)

# ஓர் விஞ்ஞாபனம்

காவேரி ஸ்நானம் விதிப்படி செய்யப்படுமாயின் சகலவித மான பாபங்களும், ரோகங்களும் நீங்கும் என சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஜன்மாந்திரங்களில் செய்யப்பட்ட பாபங்களும் நீங்கும். அதோடு தேகத்தில் தேஜஸும், மனோசுத்தியும் புத்தி கூர்மையும், நன்மையில் மனப்போக்கும் ஏற்படும். பகவானின் அருளினால் ஸத்ஸங்கமும், பிரும்ம ஞானமும் உண்டாகும். நதிகளின் தெய்வத்தன்மையை உணர்ந்து, அசுத்தங்களை ஆற்று நீரில் சேராவண்ணம் தடுக்க பிரயத்னம் செய்து வரவேண்டும்.

எப்படி ரோகங்களை தடுப்பதற்கும், போக்குவதற்கும் வைத்தியர்கள் காலம், அளவு, ஆகாரம் என்ற நியதியை விதிக்கிறார்களோ, அப்படியே மனோ, ஆத்மீக கல்மஷங்களைப் போக்க மகான்கள் சாஸ்திரீக முறையில், ஸ்நானம், க்ஷேத்ரவாஸம், மூர்த்திதரிசனம் இவைகளோடு ஆகார நியமங்களையும் வகுத்து தெளிவாய் காட்டியுள்ளார்கள். சாஸ்திரங்களை நம்பி மன உறுதியுடன் அவ்வழிகளை நாம் கையாண்டால் நிச்சயமாயும், சுலபமாயும் சகல சௌபாக்கியங்களையும் பெறலாம்.

ஸ்நானத்திற்கு முன் ஓர் முகமான மனதுடன் கடவுளை தியானம் செய்யவேண்டும். சங்கல்பம் செய்துகொண்டு மனதின் அசுத்த எண்ணங்களையும், மனோ சஞ்சலத்தையும் அகற்ற வேண்டும். பயபக்தியுடன் ஸ்நானம் செய்யவேண்டும். ஈசன் நாமத்தை உச்சரித்துக்கொண்டே ஸ்நானம் செய்தல் நல்ல பலனைக் கொடுக்கும்.

ஸ்நானம் செய்வதற்கு முன்னரோ, செய்யும்பொழுதோ தைலம் தடவிக்கொள்ளுதல், தாம்பூலந்தரித்தல், க்ஷவரம்செய்து கொள்ளுதல், ஆபாஸமான பேச்சுக்கள் இவைகளை அறவே ஒழிக்கவேண்டும். ஸ்நானம் செய்து, விபூதி அல்லது புண்டர தாரணம் செய்துகொண்டு நிம்மதியாய் ஓரிடத்தில் நித்ய கர்மானுஷ்டானங்களை மௌனமாயிருந்து முடித்துக்கொள்ள வேண்டும்.

பின்னர் காவேரி புராணத்தைக் கேட்டோ, படித்தோ சில நேரம் கழித்தல் சிறந்த பயனைத்தரும். அங்குள்ள மகான்களை யும், ஸ்தல மூர்த்திகளையும் தரிசனம் செய்யவேண்டும். காவேரி ஸ்தலங்கள் பெரும்பாலும் சிவ, வைஷ்ணவ ஆலயங்களோடு கூடியனவாயும், மகான்கள் வாஸம் செய்யும் அமைதி ஸ்தலங் களாயும் உள்ளன. மேற்கூறிய விதிகளை யாவரும் அதிக சிரம மின்றியும், செலவின்றியும் அனுசரித்து தெய்வீக வழியில் ஈடு பட்டால் நாம் இஹபர சாதனங்களை சுலபமாய் அடைவோம் என்பதில் ஐயமில்லை. சௌகரியங்களை ஒட்டி அந்தந்த க்ஷேத்தி ரங்களில் தங்கி ஸ்நானம், தர்சனம் முதலியவைகளை நாம் ஓய்வு காலங்களிலாவது செய்து வருவது மிகவும் உத்தமமான மோக்ஷ சாதனமாகும்,

ஓம் தத்ஸத்.

# ஸ்ரீ காவேரி ஸ்நான, பூஜா விதிகள்

சாஸ்திர ஸம்ப்ரதாயங்களை அனுசரித்துச் சில விதிகளை நாம் அனுஷ்டிக்கவேண்டும். கைகால்களைக் கழுவி, ஆசமனம் செய்து ஸ்நான ஸங்கல்பம் செய்யவேண்டும். தீர்த்தக்கரையில் முதலில் நமஸ்காரம் செய்து, அந்தத் தீர்த்தத்தில் கால்படாமல் ஜலத்தைத் தலையில் ப்ரோக்ஷணம் செய்துகொள்ளவேண்டும்.

பிறகு அதில் கால் அலம்பி ஆசமனம் செய்யவேண்டும். ஸ்நானம் செய்து, வஸ்திரத்தைப் பிழிந்து கட்டிக்கொண்டு, நெற்றிக்கிட்டுக் கொண்டு ஸங்கல்பம் செய்யவேண்டும். என்ன நாடு, மாதம் திதி வார நக்ஷத்திரம் இவைகளையும் ஸ்மரணம் செய்து கீழ்க்கண்டபடி சொல்லி முடிக்கவும்.

"ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம்—திதௌ ஜன்மாப்யாஸாத் ஜன்மப்ரப்ருதி ஏதத்க்ஷணபர்யந்தம் மத்யே ஸம்பாவிதானாம் ஸர்வேஷாம் பாபாநாம் ஸத்ய அபனோதனார்த்தம், ஸமஸ்த ஹரிஹரதேவதா ஸன்னிதௌ, ப்ராம்மண ஸன்னிதௌ (அந்தந்த க்ஷேத்திர ஸ்வாமி, அம்பாள் பெயரைச் சேர்த்துச் சொல்லவேண்டும்) (ரிஷபதீர்த்தே) காவேரி ஸ்நாநமஹம்கரிஷ்யே (ஸ்நானம் செய்தல்).

கையை அலம்பி,

அதிக்ரூர மஹாகாய கல்பாந்த தஹனோபம
பைரவாய நமஸ்துப்யம், அனுக்ஞாம் தாதுமர்ஹஸி
கங்கேச யமுனே சைவ, கோதாவரி ஸரஸ்வதி ।
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு ।
த்ரி ராத்ரம் ஜான்ஹவீதோயே, பஞ்சராத்ரம்து யாமுனே ।
ஸத்ய : புநாதி காவேரி பாபம் ஆமரணாந்திகம் ॥

என்ற ஸ்தோத்ரங்களைச் சொல்லி ஸ்நானம் செய்யவும்.

வேத மறிந்தவர்கள், "இமம்மேகங்கே, ஆபோவா முதலிய மந்திரங்களைக் கூறி ஸ்நானம் செய்வார்கள். தேவரிஷி—பிதுர் தர்ப்பணம் புருஷர்கள் செய்யவேண்டும்.

†

# ஸ்ரீ காவேரி பூஜை

மடிவஸ்திரம் உடுத்தி, நெற்றியிட்டுக்கொண்டு, காவேரி ஜலத்தில் பூஜை செய்யவும். வீடுகளில் செய்வதானால் தீர்த்த பாத்ரத்தில் காவேரியை ஆவாஹனம் செய்து கீழ்க்கண்ட மந்திரங்களை உச்சரிப்பார்கள்.

காவேரீம் த்யாயாமி, காவேரீம் ஆவாஹயாமி, காவேர்யை நமஃ ஆஸநம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நமஃ அர்க்யம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நமஃ ஆசமனீயம் ஸமர்ப்பயாமி, காவேர்யை நமஃ ஸ்நாநம் ஸ்மர்ப்பயாமி, காவேர்யை நமஃ என்று முறையே உச்சரித்து வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி, கந்தான் தாரயாமி; குங்குமம் ஸமர்ப்பயாமி; என்று முடித்து, புஷ்பங்களால் அர்ச்சனை செய்யவும்.

காவேர்யை நமஃ; மருத்வ்ருதாயை நமஃ; ஸஹ்யாசல ஸமுத்பூதாயை நமஃ; கவேரதனயாயை நமஃ; அகஸ்த்ய ஆநீதாயை நமஃ; ஆமலகதீர்த்த தாராயை நமஃ; ஸமுத்ரகாமின்யை நமஃ; புஷ்பைஃ பூஜயாமி.

காவேர்யை நமஃ தீபம் ஸமர்ப்பயாமி
,, (கதலீபலம், திராக்ஷாபலம், நாரிகேளம்) நிவேதயாமி
,, நைவேத்யானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி
,, தாம்பூலம் ஸமர்ப்பயாமி
,, கற்பூர நீராஜனம் ஸமர்ப்பயாமி
,, மந்த்ரபுஷ்பம், ஸுவர்ண புஷ்பம் ஸமர்ப்பயாமி
,, ப்ரதக்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி

## அர்க்யப் பிரதானம்

(1) மருத்வ்வருதே, மஹாபாகே, ஸர்வலோகைகபாவநி ।
க்ருஹாணார்க்யம் மயாதத்தம் பாவநம் குருமாம்ஸதா ॥
காவேர்யை நமஃ இதம் அர்க்யம் என மூன்று முறை அர்க்யம் விடவும்.

(2) விஷ்ணுமாயே, மஹாகாயே, கவேரகுலஸம்பவே ।
,ஸஹ்யாசல ஸமுத்பூதே, க்ருஹாணார்க்யம் வரப்ரதே ॥
காவேர்யை நம : என்று சொல்லி முன்தடவைபோல் 3 முறை அர்க்யம் விடவும்.

(3) கும்பஸம்பவ கும்பாத், த்வம் ஸஹ்யாமலகபூஜயா ।
சங்கோதகேன ஸஞ்ஜாதா க்ருஹாணார்க்யம் ஸமுத்ரகே ॥
காவேர்யை நம : இதமர்க்யம் என மூன்று அர்க்யம்.

## பிரார்த்தனை

மருத்வ்ருதே, மஹாபாகே, மஹாதேவி மனோஹரே
ஸர்வாபீஷ்டப்பிரதே தேவி ஸ்நாஸ்திதாம் புண்யவர்த்தினி
ஸர்வபாபக்ஷயகரே மம பாபம் விநாசய ॥
கவேர கன்யே, காவேரி, ஸமுத்ர மஹிஷிப்ரியே
தேஹிமே பக்தி முக்தித்வம் ஸர்வதீர்த்தஸ்வரூபிணி ॥
ஸிந்துவர்யே தயாஸிந்தோ மாமுத்தர தயாம்புதே
ஸ்த்ரியம்தேஹி, ஸுதம்தேஹி ஶ்ரியம்தேஹி ததஸ்வகா:
ஆயுஷ்யம் தேஹி சாரோக்யம், ருணன்முக்தம் குருஷ்வமாம்
என்று ஸ்தோத்ரத்தை பூர்த்தி செய்க.

அநயா பூஜயா காவேரிப்ரியதாம் என முடிக்கவும்.

கீழ்க்கண்ட ஸ்தோத்ரத்தைச் சொல்லி தேவியின் க்ஷமாபனத்தைப் பிரார்த்தித்து வீடு திரும்பவும்.

யன்மயா தூஷிதம் தோயம் ஶாரீரமலஸஞ்சயை: ।
பாபம் மம ஹரக்ஷிப்ரம் ஸஹ்ய கன்யே நமோஸ்துதே ॥

விசேஷ காலங்களில், காவேரி பூஜை, ஸங்கல்பத்துடன், ஆவாஹனமந்த்ரங்களைக் கூறி, விசேஷ பூஜை செய்வார்கள்.

அங்கபூஜை கீழே சொல்லப்படுகிறது:

| | |
|---|---|
| மருத்வ்ருதாயை நமः | பாதௌ பூஜயாமி |
| மஹாலக்ஷ்ம்யை நமः | குல்பௌ பூஜயாமி |
| ஸஹ்யகன்யாயை நமः | ஜங்கே பூஜயாமி |
| ஸரஸ்வத்யை நமः | ஜாநுநீ பூஜயாமி |
| அகஸ்த்ய பத்ந்யை நமः | மத்யம் பூஜயாமி |
| காவேர்யை நமः | நாபிம் பூஜயாமி |

| | |
|---|---|
| லோபாமுத்ராயை நமஃ | ஹ்ருதயம் பூஜயாமி |
| வரப்ரதாயை நமஃ | ஸ்தநௌ பூஜயாமி |
| கமண்டலுஸமுத்பன்னாயை நமஃ | பாஹு பூஜயாமி |
| ஸர்வதீர்த்தாதி தேவதாயை நமஃ | கண்டம் பூஜயாமி |
| விரஜாயை நமஃ | நாஸிகாம் பூஜயாமி |
| தக்ஷிண கங்காயை நமஃ | ஶ்ரோத்ரே பூஜயாமி |
| பிரும்ம விஷ்ணு சிவாத்மிகாயை நமஃ | நேத்ரே பூஜயாமி |
| சதுர்வித பல உத்த த்ர்யை நமஃ | வக்த்ரம் பூஜயாமி |
| சதுராநநகன்யகாயை நமஃ ஶிரஃ | பூஜயாமி |
| ஸர்வாபீஷ்டப்ரதாதன்யை நமஃ | ஸர்வாணி அங்காநி பூஜயாமி |

ஸ்ரீ காவேரி அஷ்டோத்ர ஶத நாமார்ச்சனை
கடைசிப் பக்கங்களில் சேர்க்கப்பட்டுள்ளது.

அர்ச்சனையைப் பூர்த்தி செய்து கீழ்க்கண்ட உபசார விதிகளைச் சுருக்கமாய் அனுஷ்டிக்கவும்.

ஸ்ரீ காவேர்யை நமஃ தூபம் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ காவேர்யை நமஃ தீபம் ஸமர்ப்பயாமி

அன்னம் சதுர்விதம் ருச்யம்—ஶாகவ்யஞ்ஜந ஸம்யுதம், ஸபலம் ஸக்ருதம் புங்க்ஷ்வ—காவேரி தடிதாம்வரே ॥ ஸ்ரீகாவேர்யை நமஃ ஸக்ருதகுளபாயஸம் ஶால்யான்னம் நிவேதயாமி—மத்யே மத்யே பாநீயம் ஸமர்ப்பயாமி. (புரோஹிதர் மூலம் விதிப்படி போஜனமந்திரங் கூறலாம்.)

பின்னர் கற்பூர தாம்பூலம் ஸமர்ப்பயாமி ;

ஸ்ரீ காவேர்யை நமஃ நீராஜனம் ஸமர்ப்பயாமி ;

ஸ்ரீ காவேர்யை நமஃ நமஸ்காரான் ஸமர்ப்பயாமி.

ஸ்ரீ காவேரி ரூபமாயுள்ள ஸுமங்கலிகளுக்கு சக்திக்கேற்றபடி புடவை, மஞ்சள், குங்குமம், பழம், தாம்பூலம், பக்ஷணம், தக்ஷிணை தாம்பூலம் தரவேண்டும்.

கீழ்க்கண்டபடி பிரார்த்தனை, நமஸ்காரங்கள் செய்து ஸ்ரீகாவேரிக்குச் சத்ரம் ஸமர்ப்பயாமி, சாமரம் ஸமர்ப்பயாமி, ஸமஸ்த ராஜோபசார, தேவோபசாரான் ஸமர்ப்பயாமி, உத்தர நீராஜநம் ஸமர்ப்பயாமி—யதாஸ்தாநம் ப்ரதிஷ்டாபயாமி என்று பூஜையைப் பூர்த்தி செய்யவும்.

பிராமண ஸுவாஸினி ஸமாராதனை சக்திக்கேற்றபடி செய்யவும்.

உ

श्रीगुरुभ्योनमः

# ஸ்ரீ காவேரி
# அஷ்டோத்ர சதநாமார்ச்சனை

ஓம் அனந்தகுண கம்பீராயை நமஃ
அர்கபுஷ்கரஸேவிதாயை நமஃ
அம்ருதஸ்வாது ஸலிலாயை நமஃ
அகஸ்த்யமுநி நாயிகாயை நமஃ
ஆஶாந்த கீர்த்தி திலகாயை நமஃ 5
ஆஶுகாகம வர்தின்யை நமஃ
இதிஹாஸ புராணோக்தாயை நமஃ
ஈதிபாதா நிவாரிண்யை நமஃ
உன்மத்தஜந தூரஸ்தாயை நமஃ
ஊர்ஜிதாநந்ததாயின்யை நமஃ 10
ரிஷிஸங்க ஸுஸம்வீதாயை நமஃ
ரிணத்ரய விமோசநாயை நமஃ
லுப்த தர்ம உத்தாராயை நமஃ
லூநபாவவிவர்ஜிதாயை நமஃ
ஏதிதாகில லோகஶ்ரியை நமஃ 15
ஐஹிகாமுஷ்மிக ப்ரதாயை நமஃ
ஓங்காரநாத நிநதாயை நமஃ
ஓஷதீக்ருத ஜீவனாயை நமஃ
ஔதார்யகுண நிர்திஷ்டாயை நமஃ
ஔதாஸீன்ய நிவாரிண்யை நமஃ 20
அந்த: கரண ஸம்ஸேவ்யாயை நமஃ
அச்சஸ்வச்ச ஜலாஶ்ரயாயை நமஃ
கபிலாக்யநதீ ஸ்நிக்தாயை நமஃ
கருணாபூர்ணமாநஸாயை நமஃ
காவேரிநாமவிக்யாதாயை நமஃ 25

ஓம் காமிதார்த்த பலப்ரதாயின்யை நமः
குும்பகோண க்ஷேத்ரநாதாயை நமः
கௌதுக ப்ரதம ப்ரபாயை நமः
ககராஜ ரரோத்ஸாஹ ரங்கஸ்தல ஸுஶோபிதாயை நமः
ககாவளி ஸமாக்ராந்த கல்லோலாவளிமண்டிதாயை நமः 30
கஜாரண்ய ஸுவிஸ்தீர்ண ப்ரவாஹ ஜனமோஹின்யை நமः
காயத்ர்யாக்ய ஶிலாமத்யாயை நமः
கருடாஸன பக்திதாயை நமः
கநகம்பீர நிநத நிர்ஜரப்ராப்த நிர்ஜராயை நமः
சந்த்ர புஷ்கர மத்யஸ்தாயை நமः 35
சதுராநந புத்ரிகாயை நமः
சோளதேஶ ஜநோத்தார க்ரீஷ்மகால ப்ரவாஹின்யை நமः
சஞ்சுக்ஷேத்ர ஸமாநீதாயை நமः
சத்மதோஷ நிவாரிண்யை நமः
ஜம்பூத்வீப ஸரித்ஶ்ரேஷ்ட நதீநத கரீயஸ்யை நமः 40
ஜங்காரநாத ஸம்மிருஷ்ட ஷட்பதானி ஸமாகுலாயை நமः
க்ஞானைக ஸாதந பராயை நமः
க்ஞப்திமாத்ர ஆர்த்திஹாரிண்யை நமः
டிட்டி பாராவ ஸவ்யாஜ திவிஜ ஸ்துதி பாத்ரிண்யை நமः
டங்காரநாத ஸம்பேத ஜர்ஜரீ க்ருத பர்வதாயை நமः 45
டாகினீஶாகிநீ ஸங்க நிவாரண ஸரித்தடாயை நமः
டக்கா நிநாத பாரீண பார்வதீஶ ஸமாஶ்ரிதாயை நமः
ணுந்தவாச்ய த்விஜாஷ்டாங்க யோகஸாதன தத்பராயைநமः
தரங்காவளி ஸம்வித்த ம்ருதுவாலுக ஶோபிதாயை நமः
தபஸ்வி ஜநஸத்கார நிவேஶித ஶிவாஸநாயை நமः 50
தாபத்ரய தரூன்மூல கங்காதி பிரபிஷ்டுதாயை நமः
தாந்தப்ரதம ஸம்ஸேவ்ய ஸாம்ப ஸாந்நித்யகாரிண்யை நமः
தயாதாக்ஷிண்ய ஸத்காரஶீலலோக ஸுபாவிதாயை நமः
தாக்ஷிண்யத்ய ஜநோத்தார நிர்விசார தயான்விதாயை நமः
தநமாந மதாந்தாதி மர்த்ய நிர்வர்தனப்ரியாயை நமः 55
நமஜ்ஜநோத்தார ஶீலாயை நமः
நிமஜ்ஜத் ஜனபாவனாயை நமः

ஓம் நாகாரி கேதுநிலயாயை நம:
நாநாதீர்த்தாதி தேவதாயை நம:
நாரீஜந மநோல்லாஸாயை நம: 60
நாநாரூப பலப்ரதாயை நம:
நாராயண க்ருபாரூபாயை நம:
நாத ப்ரும்மஸ்வரூபிண்யை நம:
பராபூத ஸமஸ்த அகாயை நம:
பஶுபக்ஷ்யாதி ஜீவநாயை நம: 65
பாப துலாக்னி ஸத்ருஶாயை நம:
பாபிஷ்ட ஜனபாவனுயை நம:
பணீந்த்ர கீர்தித கலாயை நம:
பலதாந பராயணுயை நம:
பஹுஜன்ம தபோயோக பல ஸம்ப்ராப்த தர்ஶநாயை நம: 70
பாஹுரூப த்வி பார்ஶ்வஸ்த ஸ்வமாத்ருக ஜலார்த்திநாம் நம:
களமக்ஷேத்ர ஶால்யான்னதாந நிர்ஜிதவித்தபாயை நம:
பகவத்க்ருத ஸந்தோஷாயை நம:
பாகீரதீ ஸமாக்ராந்த துலாமாஸ ஜலாஶ்ரயாயை நம:
பாஸ்கரக்ஷேத்ர காமின்யை நம:
மஜ்ஜத் துர்ஜன ப்ராக்ஜன்ம துர்ஜயாமஹ: ப்ரமார்ஜன்யை நம: 75
மாக வைஶாகாதிமாஸ ஸ்நாந ஸ்மரண ஸௌக்யதாயை நம:
யக்ஞ தானதப: கர்மகோடி புண்யபலாஶ்ரயாயை நம:
யக்ஷகந்தர்வ ஸித்தாத்யை: அபிஷ்டுத பதத்வயாயை நம:
ரகுநாத பதத்வந்த்வ விராஜித ஶிலாதலாயை நம:
ராமநாதக்ஷேத்ர காமதேனு ஸமாஶ்ரயாயை நம: 80
லவோதகஸ்பர்ஶ மாத்ர நிர்வாண பததாயின்யை நம:
லக்ஷ்மீ நிவாஸ ஸதநாயை நம:
லலநா ரத்னரூபிண்யை நம:
லகூக்ருத ஸ்வர்க போகாயை நம:
லாவண்ய குண ஸாகராயை நம: 85
வந்ஹி புஷ்கர ஸாந்நித்யாயை நம:
வந்திதாகில லோகபாயை நம:

ஓம் வ்யாக்ரபாத க்ஷேத்ரபராயை நமः
வ்யோமயாந ஸமாவ்ருதாயை நமः
ஷட்கால வந்த்ய சரணாயை நமः 90
ஷட்கர்ம நிரதப்ரியாயை நமः
ஷடாஸ்ய மாத்ருஸம்ஸேவ்யாயை நமः
ஷடூர்மி ஜித ஸோர்மிகாயை நமः
ஸக்ருத் ஸ்மரண ஸம்சுத்த-தாபத்ரய ஜநாச்ரிதாயை நமः
ஸஜ்ஜநோத்தார ஸந்தாநஸமர்த்தஸ்வப்ரவாஹின்யைநமः 95
ஸரஸ்வத்யாதி தேவிபிः அபி வந்தித நிர்ஜராயை நமः
ஸஹ்ய சைல ஸமுத்பூதாயை நமः
ஸஹ்யா ஸஹ்யஜனப்ரியாயை நமः
ஸங்கமக்ஷேத்ர ஸாமீப்யாயை நமः
ஸ்வ வசார்த்த சதுஷ்டாயை நமः 100
ஸௌபரி க்ஷேத்ர நிலயாயை நமः
ஸௌபாக்ய பலதாயின்யை நமः
ஸம்சயா விஷ்ட தூரஸ்தாயை நமः
ஸாங்கோபாங்க பலதாயின்யை நமः
ஹரிப்ரும்மேச லோகேசஸித்தப்ருந்தாரவந்திதாயைநமः105
க்ஷேத்ர தீர்த்தாதி ஸீமாந்தாயை நமः
க்ஷபா நாத ஸுசீதளாயை நமः
க்ஷமாத லாகிலாநந்த க்ஷேம ஸ்ரீவிஜயாலஹாயை நமः 108

ஸ்ரீ காவேர்யை நமः

அஷ்டோத்தர சத நாமார்ச்சனம் ஸமர்ப்பயாமி

**ஓம் தத் ஸத்**

श्रीगुरुभ्योनमः

ॐ अनन्तगुणगम्भीरायै नमः
अर्कपुष्करसेवितायै नमः
अमृतस्वादुसलिलायै नमः
अगस्त्यमुनिनायिकायै नमः
आशान्तकीर्तितिलकायै नमः
आशुकागमवर्धिन्यै नमः
इतिहासपराणोक्तायै नमः
ईतिबाधानिवारिण्यै नमः
उन्मत्त जनदूरस्थायै नमः
ऊर्जितानन्ददायिन्यै नमः 10
ऋषिसङ्ग ससंवीतायै नमः
ऋणत्रयविमोचनायै नमः
लुप्तधर्मउद्धारायै नमः
लूनभावविवर्जितायै नमः
एदिधाखिललोकश्रियै नमः 15
ऐहिकामुष्मिकप्रदायै नमः
ओंकारनाद निनदायै नमः
ओषधीकृतजीवनायै नमः
औदार्यगुणनिर्दिष्टायै नमः
औदासीन्यनिवारिण्यै नमः 20
अन्तःकरणसंसेव्यायै नमः
अच्चस्वच्चजलाश्रयायै नमः
कपिलाख्यनदीस्निग्धायै नमः
करुणापूर्णमनसायै नमः
कावेरीनामविख्यातायै नमः 25
कामिदार्थफलप्रदायै नमः
कुम्भकोणक्षेत्रनाथायै नमः
कौतुकप्रथमप्रभायै नमः

ॐ खगराजररोत्साहरङ्गस्थलसुशोभितायै नमः
खगावलिसमक्रान्तकल्लोलावलि मण्डितायै नमः 30
गजारण्यसुविस्तीर्णप्रवाहजनमोहिन्यै नमः
गायत्रयाख्यशिलामध्यायै नमः
गरुडासनभक्तितायै नमः
घनगम्भीरनिनदनिर्जरप्राप्तनिर्जरायै नमः
चन्द्रपुष्करमध्यस्थायै नमः 35
चतुराननपुत्रिकायै नमः
चोलदेशजनोद्धारग्रीष्मकाल प्रवाहिन्यै नमः
चञ्चुक्षेत्रसमानीतायै नमः
चद्मदोषनिवारिण्यै नमः
जम्भूद्वीपसरिश्रेष्टनदीनदकरीयस्यै नमः 40
झंकारनादसंरुष्टषट्पदानिसमाकुलायै नमः
ज्ञानैकसाधनपरायै नमः
ज्ञप्तिमात्रार्तिहारिण्यै नमः
टिट्टिभारावसव्याजदिविजस्तुतिपालिण्यै नमः
टंकारनादसंभेदजर्जरीकृतपर्वतायै नमः 45
डाकिनिशाकिनीसङ्गनिवारणसारित्कटायै नमः
ढक्कानिनादपारीणपार्वतीशसमाश्रितायै नमः
णान्तवाच्यद्विजाष्टाङ्गयोगसाधनतत्परायै नमः
तरङ्गवलिसंविद्धमृद्वालुकशोभितायै नमः
तपस्विजनसत्कारनिवेशितशिवासनायै नमः 50
तापत्रयतरून्मूलगङ्गादिभ्रपिष्टुदायै नमः
तान्त्रप्रथमसंसेव्यसाम्बसान्नित्यकारिण्यै नमः
दयादाक्षिण्यसत्कारशीललोकसुभावितायै नमः
दाक्षिणात्यजनोद्धारनिर्विचारदयान्वितायै नमः
धनमानमदान्तादिमर्त्यनिर्वृत्तनप्रियायै नमः 55
नमज्जनोद्धारशीलायै नमः
निमज्ज-ज्जनपावनायै नमः
नागारिकेतुनिलयायै नमः

